# கல்கி பொருளடக்கம்

சார்வரி, மாசி 15 ※ பிப்ரவரி 26 1961



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே ; சம்பவங்களும் கற்பனையே

ஆந்திரத்தின் குண்டூர், கிருஷ்ணா, கிழக்கு கோதாவரி, மேற்கு கோதாவரி ஜில்லாக்களில் புகையிலை பதனிடல் நூதன முறையில் நடைபெறுகிறது. அந்த ஜில்லாக்களில் விரிவுள்ள பண்டகசாலைகளில் சிகரெட் தயாரிப்புக்காக வர்ஜீனியா புகையிலை கணப்புப் போடப்பட்டுப் பக்குவப்படுத்தப்படுகிறது. அத்தகைய புகையிலையை, அதற்கான விற்பனைத் தலமாகிய குண்டூரில், ஐக்கிய ராஜ்யம், ருஷியா மற்றும் இதர நாடுகளின் சிகரெட் தயாரிப்பாளர்கள் வாங்கி ஏற்றுமதி செய்கின்றனர்.



# புகையிலையின் வரலாறு... 5

Panama

20

CIGARETTES




பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

## பனாமா

ஒரு நல்ல சிகரெட்—
இறுதிவரை இன்பமூட்டுவது

GT.705 TM

Greens' Advtg



மலர் 20 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 30

# ருஷ்யாவும் ஐ. நா. சபையும்

காங்கோ நாட்டு முன்னாள் பிரதமர் லுமும்பா கொலை செய்யப்பட்ட செய்தியைக் கேட்டு உலகம் கொதிப்படைந்திருக்கிறது. என்றாலும், ருஷ்யப் பிரதமர் விரும்புவது போல், இதைக் கொண்டு ஐ. நா. சபையின் செயலாளர் திரு ஹாமர்ஷீல்டை வேலையை விட்டுத் தள்ளிவிட வேண்டும் என்பதை உலகிலுள்ள எந்த நாடும் விரும்பாது.

ருஷ்யப் பிரதமர் சென்ற சில மாதங்களாகவே, ஹாமர்ஷீல்டு மீது பாய்ந்து வருகிறார். அவரை நீக்கி விட்டு, மூவர் கொண்ட கமிட்டியை அமைக்கலாம் என்கிறார். அந்த மூன்று பேரும் மூன்று கோஷ்டியைச் சேர்ந்தவர்களாக இருக்க வேண்டும் என்கிறார். இப்படிப்பட்டவர்கள் சேர்ந்து எந்தப் பிரச்னையின் மீதாகிலும் உறுதியான நடவடிக்கை எடுக்க முடியுமா ? ஆகவே, ஐ. நா. சபையைச் செயல் திறமையற்ற வெறும் பொம்மை ஸ்தாபனம் ஆக்குவதற்கு இதைவிட வேறு நல்ல யுக்தி கிடையாது. இந்த யுக்தி வலையில் உலக நாடுகள் விழ மறுத்தது சிறிய நாடுகளின் அதிர்ஷ்டம்தான்.

இரு கட்சிகளிலும் சேராத நடுநிலைமை வகிக்கும் நாடுகள் போகச் சொன்னால் போகிறேன் என்றும் ருஷ்யாவின் குரல் நடுநிலைமைக் குரல் அல்லவென்றும் தம் கடமையினின்று தாம் விலகப் போவதில்லை என்றும் ஹாமர்ஷீல்டு மிகக் கம்பீரமாக, சந்தேகமற ருஷ்யாவுக்குப் பதிலளித்திருக்கிறார்.

ஐ. நா. சபை, காங்கோ விவகாரத்தில் இன்னும் உறுதியாக நடந்து கொண்டிருக்கலாம் என்று சிலர் நினைக்கலாம். ஆனால் அப்படி உறுதியாக நடந்திருந்தால், வல்லரசுகளின் எதேச்சாதிகாரம் என்று சிலர் ஆட்சேபித்திருப்பார்கள். இதற்கு முன் கொரியாப் போரிலும், பிரிட்டன் எகிப்து மீது படையெடுத்தபோதும் ஐ. நா. உறுதியாக நின்று, நியாயத்தையும் சமாதானத்தையும் நிலைநாட்டியதை உலகம் என்றும் மறந்து விடாது. அதிலும் எந்தக் கோஷ்டியிலும் சேராச் சிறுநாடுகள் மறக்காது.

உலக விவகாரங்கள் யாவும் ருஷ்யப் பிரதமர் குருஷேவின் விருப்பப்படி நடக்க, ஐ. நா. சபை குறுக்கே நிற்கிறது என்பதற்காக ஐ. நா. சபையை ருஷ்யா ஒழித்துவிடப் பார்ப்பதைச் சிறு நாடுகள் வரவேற்காது. இப்படிச் செய்வது உலகிலுள்ள சிறு நாடுகளுக்குச் சுதந்திரமே இல்லாமல் செய்வதாகும். ஐ. நா. சபையை ஒழித்து விட்டால், உலகம் நிச்சயம் ருஷ்ய சார்புள்ள நாடுகள் என்றும் அமெரிக்கச் சார்புள்ள நாடுகள் என்றும் இரண்டு கூறாகப் பிரிந்து, நிரந்தரப் போருக்கு வழி வகுப்பதாக முடியும். உலக சமாதானத்துக்கும், யுத்தங்களை ஒழிப்பதற்கும் ஐ. நா. சபையைச் சீர்திருத்தி உருவாக்கி முடிப்பது தான் வழி. இதை ருஷ்யாவும் அறியும். ஆகையினால்தான் செயலாளர் ஹாமர்ஷீல்டை நீக்கி அவருக்குப் பதிலாகச் செயல் குழுவை நியமிக்க வேண்டும் என்று சொல்லி வருகிறது.

அமெரிக்காவின் கொள்கையில் புதிய நேயச் சூழ்நிலை உருவாவதை ருஷ்யப் பிரதமர் உணர்ந்து, ஆயுத பரிகரணம், அணுகுண்டு ஒழிப்பு முதலிய பெரிய பிரச்னைகளுக்கு, அமெரிக்காவுடன் உடன்பாடு காண முயல வேண்டும்.

அமெரிக்க ஜனாதிபதி கென்னடி உள்பட அனைவரும் ஐ. நா. சபையின் கௌரவத்தையும், ஐ. நா. தலைவர் ஹாமர்ஷீல்டின் கௌரவத்தையும் காப்பாற்றத் தீர்மானித்திருப்பதை உலகம் வரவேற்கும். இப்பொழுது ஐ. நா. சபைத் தலைவர் ஹாமர்ஷீல்டுக்குக் காங்கோவில் வன்மையாக இயங்க அதிக அதிகாரம் அளிக்கப்பட்டிருப்பதால் காங்கோவில் அமைதி ஏற்படும் என்று நம்பலாம்.

# என்ன சேதி ?

## முதன் மந்திரியின் அவதூறு

திரு காமராஜ் அவர்கள், சர்க்காரி லிருந்து லஞ்ச ஊழல் போன்ற குற்றங் களுக்காக நீக்கப்பட்டவர்கள் சுதந்திரக் கட்சியில் இருப்பதாக மிகப் பெரிய அபாண்டத்தைச் சுமத்தியிருக்கிறார்.

எந்த ஆதாரத்தைக் கொண்டு, எவரை மனத்தில் கொண்டு அவர் அம்மாதிரி சொன்னார் என்பது தெரியவில்லை. சுதந் திரக் கட்சியிலிருப்பவர்கள் எவரைப் பற்றியும் இம்மாதிரியான பேச்சுக்கு இடமே கிடையாது. இது, விஷயம் தெரி யாத பாமர மக்களை ஏமாற்றும் பேச்சே தவிர வேறல்ல. சுதந்திரக் கட்சியில் பெரிய உத்தியோகங்கள் வகித்தவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் அனைவரும் தங்கள் உத்தியோகங்களைக் கௌரவத் தோடு முடித்து யாதொரு குற்றமுமின்றி யும் சர்க்காரின் நன்மதிப்பைப் பெற்றும் ரிடையரானவர்களே.

"நீ தைரியமாகக் கொள்ளை லாபம் அடி, ஆனால் எங்கள் தேர்தல் நிதிக்கு ஐம்பது லட்சம் கொடுத்து விடு" என்று பெரிய முதலாளிகளைப் பகிரங்கமாகக் காங்கிரஸ்காரர்கள் கேட்கிறார்கள் என்பது நாட்டில் சர்வ சாதாரணமாக உலவும் பேச்சு. இதற்குப் பதில் சொல்ல வழி தெரியாமல் சுதந்திரக் கட்சியின் பேரில் பொய்க் குற்றம் சாட்டுகிறார் திரு காமராஜ்.

## ரயில்வே பட்ஜெட்

ரயில்வே மந்திரி சமர்ப்பித்த வரவு-செலவுத் திட்டத்தில் வரவேற்கத் தக்க விஷயங்கள் ஒன்றுமில்லை. அதோடு, தமிழ் நாட்டினர் நீண்ட நாட்களாகக் கேட்டு வரும் சேலம்-பெங்களூர் இருப் புப்பாதை இந்த ஆண்டிலும் கிடையாது என்று கையை விரித்துவிட்டார்கள். சேலம் - பெங்களூர் இருப்புப்பாதை போடுவதில், ஒரு பகுதி ஏற்கெனவே இருப்புப்பாதை இருந்த பகுதியாகும். அந்த நிலமும் இன்னும் ரயில்வே வசம் தான் இருக்கிறது. ஆகவே, இந்தப் பாதை போடுவதில் ரயில்வேக்கு அதிகச் செலவு பிடிக்காது. எனினும், ஏனோ இதனைப் பற்றி எத்தனை முறை சொன்ன லும் வடநாட்டு மந்திரிகளுக்குக் காதில் ஏறுவதில்லை.

## ஸர்சார்ஜ் அதிகரிப்பு

சிறு சாமான்கள் அனுப்புவோருக்கு ஏற்கனவே இருந்த ஸர்சார்ஜுக்கு மேலாக 10. ந. பை.யிலிருந்து 20 ந. பை. வரை வரி விதிக்கப் போகிறார்களாம். தவிர, குறைந்த தூரம் அனுப்பப்படும் பார்சல்களுக்கு அதிகக் கட்டணம் வசு லிக்க வழி தேடி வருகிறார்கள். அதாவது, மொத்த வியாபாரிகளை விட்டு விட்டுச் சாதாரண பொதுஜனங்கள், எப் பொழுதோ ஒரு சமயம் சிறு சிறு சாமான்கள் பார்சல் அனுப்புபவர்கள், சிறு சில்லறை வியாபாரிகள் ஆகியோர் மீது வரி விதிக்கிறார்கள். இது சுதந்திரக் கட்சி சொல்லி வந்ததை நிரூபிக்கிறது. பெரிய வியாபாரிகள் மீது இப்போது வரி விதித்தால் அவர்களுடைய கசப் பைத்தான் சம்பாதிக்க வேண்டியிருக் கும். தேர்தல் நிதிக்குப் பாதகம் விளையும்.

## வேண்டுகோள்

சுதந்திர நிதி பண வரவுக்கு மட்டுமல்ல. சுதந்திரம் விரும்பும் ஒவ்வொருவரும், இந்தப் பர்மிட் கண்ட்ரோல் லைசென்ஸ் ராஜ்யம் ஒழிந்து போக வேண்டும் என்று ஆசைப்படும் ஒவ்வொரு சம்சாரியும், தம்முடைய மன வேட்கைக்கு ஒரு போக்கு வழிதந்து திருப்தி அடைவதற்கு ஒரு வழி யாகும், இந்த நிதிக்குச் சிறிதோ பெரிதோ ஒரு காணிக்கை தந்தால்.

சுதந்திரக் கட்சிக்காகப் பண உதவி செய்ய விரும்புகிறவர்கள் தங்களின் நன்கொடையை என் பெயருக்கு c/o **கல்கி காரியாலயம், கீழ்ப்பாக்கம், சென்னை-10** என்ற விலாசத்துக்கு அனுப்பக் கோருகிறேன். பெயரிட்டோ, பெயர் சொல்லாமலோ அனுதாபிகள் விருப்பத்தின்படி கல்கியில் நன்கொடைகளின் வரவு பிரசுரிக்கப்படும்.

*19-2-61* சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

"காங்கோ நிலையைச் சீர்திருத்தப் போகிறேன்."

அதனால் அவர்களை விடுத்து சாமான்ய மக்களின் மீது வரி விதிக்கத் தொடங்கியிருக்கிறார்கள். இது ரயில்வே பட்ஜெட் நிலை. அடுத்தாற்போல் பொது பட்ஜெட் வருகிறது பாருங்கள், அதிலும் பாமர மக்களைப் பாதிக்கும் வரிகளே அதிகம் இருக்கும் என்பதற்கு ரயில்வே பட்ஜெட் ஒரு முன்னெச்சரிக்கையாக இருக்கிறது.

## உதவி ஜனாதிபதியின் உரை

உதவி ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் சென்ற வாரம் புவனேசுவரில் ஒரிஸ்ஸா சட்டசபையின் புதுக் கட்டடத்தைத் திறந்து வைத்து நிகழ்த்திய பேருரை, பாரத நாட்டிலுள்ளவர்கள் அனைவரும் கூர்ந்து கவனிக்க வேண்டிய அரிய உரையாகும்.

"அதிகாரம் நீண்ட நாள் வகித்தால் வெறி பிடித்து விடுகிறது. அதுவும் ஜனநாயக முறையில் அதிகாரம் கிடைத்து விட்டால், அது இழைப்பது போன்ற கொடுமை வேறில்லை. ஒரு கொடிய அரசன் அதிகாரம் பெற்றால் கூட அவன் அரசனாக இருப்பதால் அதன் தீமை அவ்வளவில்லை. ஆனால் மக்களிடம் பட்டா பெற்ற அரசாங்கம், தன்னைக் கட்டுப்படுத்தும் சக்தியோ, எதிர்க்கும் சக்தியோ இல்லை என்ற மமதையில் இஷ்டப்படி யெல்லாம் நடந்து கொள்ளுகிறது. ஒரு பெரிய கட்சி நீண்ட நாள் அரசாங்கத்திலிருந்தால் அளவு கடந்த தன்னம்பிக்கை ஏற்பட்டு, அலட்சிய பாவம், குற்றம் குறை எடுத்துச் சொன்னால் உறைக்காமலிருத்தல் ஆகிய துர்க்குணங்கள் ஏற்படுகின்றன. முடிவில் தங்கள் கட்சிக்குள்ளேயே பதவியாசை பிடித்துச் சண்டை போட்டுக் கொள்வதில் முடிகிறது. ஒரு நல்ல எதிர்க்கட்சியிருந்து, நல்ல ஆட்சியைத் தரக்கூடும் என்ற நிலையிருந்தால், மேற்கூறிய ஊழல்கள், குழப்பங்கள், அராஜகம் நிகழாது" என்று கூறுகிறார்.



விரைவில் நாட்டில் நல்ல எதிர்க்கட்சி உருவாகும் என்று எதிர்பார்க்கிறார். இரு கட்சிகளே நாட்டில் நிலைத்து, நல்ல ஜனநாயகம் ஏற்படும் என்று கூறுகிறார். அவருடைய வாக்குப் பலிக்கும் என்று எதிர்பார்ப்போமாக.

# தமிழர் ஒற்றுமை

பிப்ரவரி 17உ.

மொழி உரிமைக்காகத் தமிழ் அரசுக் கட்சியினர் சென்ற மாதம் ஆரம்பித்த போராட்டம் இலங்கையின் வடக்கு கிழக்கு மாகாணங்களில் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இம்மாதம் இருபதாம் தேதியிலிருந்து போராட்டத்தை மேலும் தீவிரமாக்கத் தமிழரசுக் கட்சி அதிகார பீடம் திட்டமிட்டிருக்கிறது. தற்சமயத்துக்கு அவர்களது போராட்டம் சிங்களம் படிக்க வேண்டாமென்று அரசாங்கத்திலுள்ள தமிழ் உத்தியோகஸ்தர்களைக் கேட்டுக் கொள்ளுவதோடு கட்டுப்பட்டிருக்கிறது. தலைவர்களும் தொண்டர்களும் அரசாங்கக் காரியாலயங்களுக்கு முன்னால் நின்றுகொண்டு துண்டுப் பிரசுரங்களை வழங்கி வருகின்றனர். இதற்குப் போதிய அளவு பலன் கிடைக்காத பட்சத்தில் அரசாங்கக் காரியாலயங்களின் முன்னால் மறியல் நடத்துவது என்ற தீர்மானித்திருக்கிறார்கள். மறியல் ஆரம்பமாகும் பொழுது தான் போராட்டத்தின் உண்மையான சொரூபம் வெளிப்படுவதாக இருக்கும்.

இந்தச் சந்தர்ப்பத்தில் தமிழ் பேசும் மக்களிடையில் உள்ள ஒற்றுமையின்மையும் தெளிவாக வெளியிடப்பட்டுக் கொண்டு வருகிறது. போராட்டத்தில் தமிழ் காங்கிரஸ் பங்கு கொள்ளாமல் ஒதுங்கியிருப்பதுடன் அதை எதிர்த்தும் அறிக்கைகள் விட்டுக் கொண்டிருக்கிறது. எந்த அரசியல் கட்சியையும் சேராத கட்சிப் பற்றற்ற தமிழர்கள் நேரடிப் போராட்டம் எவ்விதப் பலனையும் அளிக்காதென்றும், முதலில் தமிழ் பேசும் மக்களிடையில் ஒற்றுமையும் கட்டுப்பாட்டையும் வளர்த்துக் கொண்டே எந்த நடவடிக்கையிலும் இறங்க வேண்டுமென்றும் வற்புறுத்தி வருகிறார்கள். இதற்காகத் தமிழ் பேசும் மக்களின் சர்வகட்சி மகாநாடு ஒன்றை நடத்துவதற்கு அவர்கள் தீவிரமாக முயற்சி செய்து வருகிறார்கள். தமிழ் பேசும் மக்கள் ஒரு சர்வகட்சி மகாநாடுகூட்டித் தங்களுடைய குறைந்த பட்சக் கோரிக்கைகளைத் தயாரித்து அரசாங்கத்துக்குச் சமர்ப்பித்தால் அரசாங்கம் நிச்சயம் அதை ஒப்புக் கொள்ளாத பட்சத்தில் பிறகு நேரடிப் போராட்டத்தில் ஈடுபடலாமென்றும் இவர்கள் கூறிவருகின்றனர். தமிழர்களில் இன்னொரு சாரார் எது எப்படி வேண்டுமானாலும் போகட்டும், நம்முடைய காரியம் தங்குதடையின்றி நடந்தால் போதுமானதென்று எண்ணி அசமந்தமாக இருந்து வருகிறார்கள். இம்மூவரையும் தவிர இரகசியமாகச் சிங்களம் படித்துவரும் அரசாங்கத் தமிழ் அதிகாரிகளின் எண்ணிக்கையும் கொஞ்சமல்ல. தமிழ் மூலம் சிங்களம் படிப்பதற்காக எழுதப்பட்டுள்ள புத்தகங்களுக்கு இன்றுபோல் என்றுமே கிராக்கி யிருந்ததில்லையென்று சொல்லும் அளவுக்கு அவ்வளவு புத்தகங்கள் செலவாகிக் கொண்டிருக்கின்றன. தமிழ் மக்களின் ஒற்றுமையின்மையே அவர்களது அடிப்படை உரிமையைப் பறிக்கக் காரணமாக இருந்து வருவதாகத் தோன்றுகிறது.

தோட்டப் பகுதிகளிலுள்ள பத்து லட்சம் இந்திய வம்சாவளியினர்களும் தமிழர்களே. அவர்களது பிரதிநிதித்துவ ஸ்தாபனமாகிய இலங்கை தொழிலாளர் காங்கிரசுக்குத் தமிழ் அரசுக் கட்சியைப்போலவே மொழிப் பிரச்னையில் அக்கறை யிருக்கிறதென்பதை யாரும் ஆட்சேபிப்பதற்கில்லை. உண்மையைச் சொல்லப்போனால் தமிழ் அரசுக் கட்சியைவிடக் காங்கிரசுக்கு மொழிப் பிரச்னையில் அதிக அக்கறை யிருக்க வேண்டும். தமிழ் அரசுக் கட்சியாவது முற்றிலும் தமிழ் மக்கள் அடங்கிய பகுதிகளில் இயங்குகிறது. காங்கிரஸ் அங்கத்தினர்களோ சுற்றிலும் சிங்களம் பேசுவோர் மத்தியில் வசிப்பதினால் தனிச் சிங்களச் சட்டம் மற்றத் தமிழர்களைவிட இந்திய வம்சாவளியினர்களையே அதிகமாகப் பாதிக்கும். இந்த நிலைமையில் மொழி உரிமை பற்றிய எந்தப் போராட்டமும் பத்து லட்சம் தமிழ் பேசும் வம்சாவளியினர்களையும் அனுசரித்துக் கொண்டு நடைபெற்றால் மட்டுமே அது அதிதீவிரமாக நடப்பதும் துரித பலன் அளிப்பதும் சாத்தியம். போராட்டத்தை ஆரம்பிக்கும் விஷயத்தில் காங்கிரஸ் மகாநாடு ஒரு முடிவுகட்டப் போதிய சந்தர்ப்ப



கோவை தொழிலதிபர் திரு ஜி. என். ஸாம் (திரு ஜி. நாராயணசாமி) சென்ற மாதம் காலமானார் என்ற செய்தியைக் கேட்டுத் திடுக்கிடாதவர் எவரும் இருக்க மாட்டார்கள். இனிய பண்பும் பரந்த உள்ளமும் படைத்தவர். ஏழை எளியவர்க்கு இரங்கும் ஈகையாளராக இருந்தவர். கம்போடியா மில்ஸ், விஜயகுமார் மில்ஸ், இந்தியா சிமெண்ட் போன்ற ஸ்தாபனங்களில் முக்கிய பங்கு கொண்டிருந்தார். கோவை சுதந்திரக் கட்சிக்கு உபதலைவராக இருந்து உற்சாகமாகப் பணியாற்றி வந்தார். அவரது மறைவினால் வருந்தும் குடும்பத்தாருக்கும் உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் நமது அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# சுதந்திர நிதி

கல்கியில் ராஜாஜி அவர்கள் விடுத்திருந்த வேண்டுகோளுக்கு இணங்கிக் கீழ்க்கண்ட அன்பர்கள் சுதந்திர நிதிக்குப் பொருளுதவி செய்திருக்கிறார்கள்.

(பிப்ரவரி 4-ந் தேதி முதல் 18-ந் தேதி முடிய)

| | |
|---|---|
| ஆர். ஜெயம்மாள் ... | 2 00 |
| வி. கோபிநாத் ... | 1 00 |
| எஸ். எஸ். கே. மூர்த்தி] ... | 1 00 |
| ஆர். சுப்பராமன் ... | 1 20 |
| ஆர். பாலகிருஷ்ணன் ... | 3 00 |
| டாக்டர் கே. ராமச்சந்திரன் ... | 10 00 |
| வி. லக்ஷ்மி அம்மாள் ... | 5 00 |
| டி. எம். கிருஷ்ணசாமி ... | 5 00 |
| டி. எம். அன்னபூரணியம்மாள் | 5 00 |
| டி. எம். லட்சுமிநாராயணன் ... | 5 00 |
| கே.சி. நாராயணன் ... | 1 00 |
| டி. கே. சுப்பிரமணிய பிள்ளை ... | 1 00 |
| ஏ. கண்ணன் ... | 1 00 |
| ஓர் அன்பர் ... | 5 00 |
| கனகவல்லி ... | 5 00 |
| சுப. சுப்பையா செட்டியார் ... | 101 00 |
| டாக்டர் டி.ஏ. சாம்பசிவம் ... | 10 00 |
| ஸாது தர்ம குழு ஜி. கிருஷ்ண ராவ் ... | 1 00 |
| எஸ். விசுவநாதன் ... | 4 00 |
| வி. ஜெயபால் ... | 5 00 |
| லலிதா ஸ்ரீநிவாஸன் ... | 5 00 |
| மாதுஸ்ரீ சக்கரவர்த்தி ராஜலட்சுமி அம்மாள் ... | 10 00 |
| எஸ். ராமமூர்த்தி ... | 2 00 |
| தி. சிந்தாமணி செட்டியார் ... | 5 00 |
| எஸ். என். ராகவன் ... | 1 00 |
| ஏ. கே. வெங்கட நாராயணன் | 5 00 |
| ராஜம்மாள் ... | 12 00 |
| அகரமாங்குடி சுதந்திரக் கட்சி கமிட்டி நாகசாமி அய்யர் மூலம் ... | 11 00 |
| எஸ். ஷண்முகவேலு தேவர் ... | 1 00 |
| வி. எஸ். நாகசாமி ... | 1 00 |
| அண்ணூர் ரங்கநாத அய்யங்கார் ... | 5 00 |
| என். ராமையா ... | 10 00 |
| ஒரு பம்பாய்த் தொழிலாளி ... | 1 03 |
| ரா. கி. பார்க்கவா ... | 2 00 |
| மதுரை அங்கத்தினர் 'பி' ... | 5 00 |
| சர்மா ... | 3 00 |
| சி. எஸ். நாகலிங்கம், ஹரி ... | 25 00 |
| 10-1-61முதல் 3-2-61 முடிய | 1137 04 |
| மொத்தம் வரவு | 1413 27 |

மனித்து அதன்பிறகு ஏகோபித்து நாடு முழுதும் தீவிரமாக ஆரம்பிக்கப்பட்டிருந்தால் இதற்குள் பலன் அளித்திருக்கும் என்று சிலர் கருதுகிறார்கள். மொழிப் போராட்டத்தில் காங்கிரஸ் தற்சமயம் கலந்துகொள்ளவில்லை. ஏப்ரல் மாதம் நடைபெறும் அதன் வருடாந்திர மகாநாடுதான் இவ்விஷயத்தில் ஒரு முடிவுசெய்ய வேண்டியிருக்கிறது.

## அரசாங்க அலட்சியம்

தமிழ் அரசுக் கட்சியின் நேரடி நடவடிக்கையை அரசாங்கம் லட்சியம் செய்வதாகத் தெரியவில்லை. தமிழ் அரசுக் கட்சி நேரடி நடவடிக்கைகளில் இறங்கப் போவதாக அறிவிக்கப்பட்டவுடன் அரசாங்க வட்டாரங்களில் சிறிதளவு சலசலப்பு ஏற்பட்டது என்னவோ உண்மைதான். மொழிப் பிரச்னைக்கு ஒரு சுமுகமான முடிவு கட்ட அரசாங்கப் பார்லிமெண்டரிக் கட்சியின் விசேஷக் கூட்டமொன்றை நடத்தவும் ஏற்பாடு செய்யப்பட்டது. ஆனால் அந்த விசேஷக் கூட்டம் சென்றவாரம் நடைபெற்றபொழுது மொழிப் பிரச்னை தவிர மற்ற எல்லா விஷயங்களும் பேசப்பட்டன. மொழிப் பிரச்னையை ஒதுக்கி விட்டார்கள். இதற்குக் காரணம் தமிழர்களுக்கிடையில் ஒற்றுமையும் கட்டுப்பாடும் இல்லாததுதான் என்று சொல்லத் தோன்றுகிறது. இலங்கைத் தமிழர்களின் சமீப காலச் சரித்திரம், ஒற்றுமையின்மையினால் அவர்களுடைய பிறப்புரிமை எவ்விதம் ஒவ்வொன்றாகப் பறி போய்க் கொண்டிருக்கிறதென்பதை எடுத்துக் காட்டுகின்றது. தமிழ் பேசும் இனம் ஒரு குடும்பத்தைப் போல் கட்டுப்பாட்டுடன் ஒன்றுபடும் வரையில் அவர்களுக்கு விமோசனம் இல்லையென்பதை நாளுக்கு நாள் காணக் கூடியதாக இருக்கிறது. இந்தப் பேராபத்தான சமயத்தில் கூடத் தமிழ்த் தலைவர்கள் சொந்த கௌரவத்தையும் தனிப்பட்ட கட்சி நலனையும் கருத்தில் கொண்டு பிளவுபட்டிருந்தால் அவர்களைக் கடவுளால்கூடக் காப்பாற்ற முடியாது.

## கௌரவப் பட்டங்கள்

பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தினால் வழங்கப்பட்டு வந்த கௌரவப் பட்டங்களைக் காலஞ்சென்ற திரு பண்டாரநாயகா பிரதம மந்திரியாயிருவுடன் நிறுத்தினார்களென்றாலும் ஏற்கனவே பட்டம் பெற்றவர்கள் அந்தப் பட்டங்களைத் தொடர்ந்து உபயோகிக்கவே செய்தார்கள். அரசாங்கப் பிரசுரங்களிலும் அந்தக் கௌரவப் பட்டங்கள் அங்கீகரிக்கப்பட்டு வந்தன. இனி அரசாங்கப் பிரசுரங்களில் கௌரவப் பட்டங்களைப் பிரசுரிக்கக் கூடாதென்று வற்புறுத்தப்பட்டு வருகிறது. இது சம்பந்தமாக அரசாங்கம் இப்பொழுதே ஆலோசனை செய்து வருகிறது.

— ரஜனி





இம் மாதம் 5ந் தேதி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளும், ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளும் கும்பகோணத்துக்குச் செய்த விஜயம் ஒரு பெரு விழாவாக நடந்தேறியது.

1. ஸ்ரீ ஸ்வாமிகள் சிவிகையில் பவனி வருகிறார். 2. இளைய ஸ்வாமிகள் குதூகலத்துடன் யானைமீது நகர் வலம் வருகிறார். 3. இளைய ஸ்வாமிகள் அநுஷ்டானம். 4. பெரியவர்களுக்குப் புதுப் பெரியவர்கள் அபிஷேகம் செய்விக்கும் காட்சி.

# மருது பெற்ற விருது

சிந்தையார் சிந்தையுள்ளார்
சிவநெறி அனைத்துமானார்
எந்தையார் எம்பிரானார்
இடைமருது இடம் கொண்டாரே.

— அப்பர் ஸ்வாமிகள்

திரு இடை மருது நகரின் மகிமையே தனி. மற்ற ஸ்தலங்களிலுள்ள இலிங்க மூர்த்தங்கள், கபாலீசர், சுந்தரேசர் என்றிப்படிப் பெயர் பெற்றிருக்க இங்குள்ள மூலவரோ மகாலிங்கம் என்றே நாமம் பூண்டிருக்கிறார். எனவே இறைவன் இலிங்கமாக உற்பவித்த சிவராத்திரி இப் பதியில் அதிவிசேஷமானதல்லவா? இவ்வாண்டு சிவராத்திரியில் அப்பதிக்கு மேலுமொரு வெகுமானத்தைச் செய்து விட்டார் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள், தமது நான்கு கால பூஜையையும் அங்கேயே நடத்தியதன் மூலம். பெரியவர்கள் இடை இரு காலமும் புதுப் பெரியவர்கள் மற்ற இரு காலமும் பூஜை புரிந்தனர். இவ்வாண்டு சிவராத்திரியன்றே பிரதோஷ பூஜையும் சேர்ந்து கொண்டது மேலுமொரு விசேஷமாகும்.

ஆதிசங்கரர் திக்விஜயத்தின்போது மகாலிங்கத்திலிருந்து வெளிப்பட்ட ஓர் உருவு 'அத்வைதமே சத்தியம்' என்று கையுயர்த்திக் கூறியதாம். சிவராத்திரியில் ஆசாரியர்களை சேவித்த அப்பல்லாயிரம் பக்தர்கள் அந்த சத்தியத்தின் வடிவு இதுவே என்று உருகிப் பணிந்தனர். பூனினால் செய்த அந்த வழிபாட்டைக் கண்டதோடு ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் விடிய விடிய ஈசனுக்கு இசையால் செய்வித்த பூசனையைக் கேட்டும் மெய்ம் மறந்தனர்.

சிவராத்திரியை ஒட்டி, ஸ்ரீ ஸ்வாமிகளின் ஆக்ஞைப்படி, காசி ராமேசுவரம் உள்ளிட்ட 11 தலங்களில், 11 நாட்களுக்கு, 11 ரித்விக்குகளைக் கொண்டு, தினம் 11 ஆவிருத்தி வீதம் மகாருத்திர யக்ஞம் நடைபெற்றது. திருவிடைமருதூரில் யக்ஞம் பூர்த்தியாகி, வஸோர்த்தாரை என்ற இடையறாத ஆஹுதி நடைபெற்ற வைபவத்துக்கு ஸ்வாமிகளும், புதுப் பெரியவர்களும் பிரசன்னமாகி யிருந்தனர். தீயின் இருபுறமும் இருவரும் நின்றது சூரியன், சந்திரன், அக்கினி என்ற முச்சோதிகளையும் ஒன்றாகக் காண்பதுபோல் தோன்றியது. பின்னர் யக்ஞத்தில் பங்கெடுத்துக் கொண்டவர்களும், ஆசாரியர்களும் ஸமாப்தியைக் குறிக்கும் அவபிருத ஸ்நானத்தைச் செய்தனர். அப்போது காவிரித்துறை பண்டைய நைமிசாரண்யமாகக் காட்சியளித்தது.







மாயூர நகரமே என்றுமில்லாத ஜோதியுடன் பிப்ரவரி 11, 12 தேதிகளில் பிரகாசித்தது. அதற்குக் காரணம் ஸ்ரீ ஆச்சாரிய சுவாமிகளின் விஜயம்தான்.

தருமபுர ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலை குருமகா சந்நிதானம் அவர்களின் அழைப்புக்கிணங்கி, ஸ்ரீ ஆச்சார்ய சுவாமிகளும், ஸ்ரீ புதுப் பெரியவாள் அவர்களும் சனிக்கிழமை திருவிடை மருதூரிலிருந்து மாயூர நகரம் வந்து சேர்ந்தார்கள். மாயூரம் நகரப் பெருமக்கள் திரளாகக் கூடி ஆச்சார்ய சுவாமிகளுக்கு அமோகமான வரவேற்பு அளித்தார்கள்.

'திருநெறிய தெய்வத் தமிழ் மன்றம்' அரங்கில் தருமபுர ஆதீனக் கல்வி நிலையங்கள் சார்பிலும், ஸ்ரீ குரு ஞான சம்பந்தர் வார வழிபாட்டு கழகச் சார்பில் ஸ்ரீ ந. திருஞானம் பிள்ளை அவர்களாலும் சுவாமிகளுக்கு வரவேற்புகள் வழங்கப்பட்டன.

இரவில் மிகச் சிறப்பாக நகரப் பெருமக்களாலும் பக்த கோடிகளாலும் பட்டணப் பிரவேசம் நடத்தப்பட்டது.

1. தருமை ஆதீனத்தில் ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களின் அன்பளிப்புகளை ஸ்ரீ ஆச்சார்ய சுவாமிகள் ஏற்றுக் கொள்ளுதல். 2. மேளுவில் ஸ்ரீ ஆச்சார்ய சுவாமிகள் துளசி மாலைகளைத் தன் சிரத்தின் மீது அணிந்து மகிழ்தல். 3. தருமை ஆதீனத்தார் அளித்த வரவேற்புரைகளுக்கு ஸ்ரீ ஆச்சார்ய சுவாமிகள் மகிழ்ச்சியுடன் சிறப்பாகப் பதிலளித்து அருளுதல். 4. திருநெறிய தெய்வத் தமிழ் மன்றத்தில் பக்தர்கள் புடைசூழ ஆச்சார்ய சுவாமிகளும் புதுப் பெரியவாளும். 5. ஸ்ரீ வள்ளலார் கோவிலில் ஸ்ரீ ஆச்சார்ய சுவாமிகள் அதிகாலையில் எழுந்தருளுதல். —போட்டோ: என். ராமகிருஷ்ணு

பரம்பொருளில் ஒன்றிய மகான்களால் இவ்வுலக விவகாரங்களில் ஆழ்ந்து போவதென்பது இயலாத காரியம். எனினும் இகத்தையே மெய்யென நம்பும் மக்களை உய்விப்பதற்காக அவர்களும் இதில் ஈடுபட்டாற்போல் தோன்றுவார்கள். இதை நிதரிசனமாக நிரூபித்து வரும் நம் காமகோடி பீடாதிபதிகள், இப்படி மேலெழுந்தவாரியாக நோக்குவதும் ஒரு வித சுயநலமே என்று கூறும்போது, அவருடைய எல்லையற்ற அந்த எளிமைக்கு அஞ்சலி செலுத்துகிறோம்; அஞ்சக்கூடச் செய்கிறோம். தேவர்களும் பணியும் சாட்சாத் மகாதேவனின் இயல்பும் பணிவார்ந்த அடக்கமே — ஸ்வ விநயோ யஸ்ய ஸ்வபாவஜதே — என்ற வாக்கியத்துக்கு இலக்கியமாக இலங்கும் ஆசாரியரின் உள்ளப் பாங்கை உள்ளபடியே விளக்குகிறது இந்த உருக்கமான கட்டுரை.

# வாழ்க்கை எனக்குப் புகட்டிய பாடம்

## ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராச்சாரிய சுவாமிகள்

எனக்கு வாழ்க்கை இடையறாமல் புதுப் புதுப் பாடங்களைக் கற்பிக்க முயன்றுதான் வருகிறது; எனினும் நான் என்னவோ எதையுமே கற்கவில்லை என்றுதான் உணர்கின்றேன். ஏனென்றால் சுபாவத்திலேயே என் ஈடுபாடுகளெல்லாம் மேலெழுந்தவாரியானவைதான். நான் கண்ட எத்தனை எத்தனையோ விதமான அனுபவங்களாலும் இந்த மனப்போக்கைச் சரிப்படுத்த முடியவில்லை.

என்னுடைய முதல் இரண்டு அனுபவங்களை —அவை என் மூன்றாம் பிராயத்திலும், நான்காம் பிராயத்திலும் நிகழ்ந்ததாக ஞாபகம்— நினைக்கவே அச்சமாக இருக்கிறது. சபலம், பேராசை, பெரு வேட்கை, மோசடி, குமைச்சல், இழப்பு, புலம்பல் முதலியவை குறுக்கிழை நெடுக்கிழை இட்டுப் பின்னிய அனுபவங்களே அவை.

ஓர் இரவு மர நாயொன்று எப்படியோ வீட்டு அறைக்குள் வந்து விட்டது. உரியில் வெல்லம் போட்டு வைத்திருந்த குறுகிய கழுத்துள்ள ஒரு தோண்டியில் அது தலையை இட்டுக்கொண்டு விட்டது. பிறகு அதனால் தலையை வெளியே இழுத்துக்கொள்ள முடியவில்லை. இரவு முழுதும் இதே சங்கட நிலையில் அது அறையில் இங்குமங்கும் அலைந்தது. எங்கள்வீட்டாரும், அண்டைப் புறத்தாரும் இந்த ஓசையில் விழித்துக் கொண்டு, ஏதோ திருட்டுப் புரட்டுத்தானாக்கும் என்று எண்ணிவிட்டார்கள். ஆனால் சத்தமோ அதிகாலை வரை விடாமல் நீடித்தது. பிறகு சில 'சூரர்'கள் கோலும் கையுமாகச் சென்று கதவைத் திறந்தார்கள். உள்ளே பேராசை பிடித்த அந்த ஜந்துவைக் கண்டார்கள். அதை ஒரு தூணுடன் கயிற்றினால் கட்டினார்கள். சில 'அனுபவசாலி'கள் அழைத்து வரப்பட்டனர். இருபுறமாக அவர்கள் நின்று கயிற்றைப் பிடித்தபடி பலப்பரீட்சை நடத்த, முடிவில் பாத்திரம் மரநாயின் தலையிலிருந்து விடுவிக்கப்பட்டது. அந்த மரநாய் உயிருக்குப் போராடிக் கொண்டிருந்தது. கடைசியில் அதைக் கொண்டு போய் வெளியில் எங்கோ சுயேச்சையாக விட்டு விட்டார்கள் என்று நினைப்பு. பேராசை, எத்தகைய பயங்கரம் விளைவிக்கும் என்பதைக் கண்முன் ருசுப்பித்த இந்தச் சம்பவமே என் முதல் அனுபவம். அந்தப் பேராசைக்காக எங்கள் அண்டை வீட்டார் யாவரும் ஓரிரவுத் தூக்கத்தை இழக்க நேர்ந்தது.

அடுத்த அனுபவம். தெருவோடு போன ஒருவன், சின்னஞ் சிறு பொன் காப்புகள் அணிந்த நான் தனியாக இருப்பதைக் கண்டு உள்ளே நுழைந்து அதைக் கவர முயன்றான். அக்காப்புகளின் கொக்கிகள் கடகடத்துப் போயிருந்தன. அவற்றை உடனே நெருக்கிக் கொண்டு வருமாறு நானே அவனுக்கு அதிகாரமாக, அழுத்தந் திருத்தமாக உத்தரவு போட்டேன். என் கட்டளையை சிரசால் வகித்த அவன், தானே கிட்டிய அந்தக் காப்புகளுடன் ஓடிவிட்டான். என்னுடைய ஆபரணத்தைச் செப்பனிட நானே ஏற்பாடு செய்ததில் துள்ளியபடி, உள்ளேயிருந்தவர்களிடம் விஷயத்தைச் சொல்ல விரைந்தேன். குற்றவாளியைப் பிடிப்பதற்காக அவர்கள் தெருவுக்கு ஓடி வந்தார்கள். ஆனால், பொன்னுசாமி என்று அவன் சொல்லிக்கொண்ட அப்புனைப் பெயருக்கேற்பப் பொன் காப்புகள் அவன் சொத்தாகவே ஆகிவிட்டன.

மோசம் போய் விடுவோமோ என்ற உணர்வு, இக உலக லாபத்துக்காகக் குறுக்கு வழி பாய்வதில் இச்சை கொள்ளும் உணர்வு, இவற்றைக் குறிக்கும் இந்தச் சம்பவங்கள், இளசான, கள்ளமறியாப் பருவத்திலேதான் நிகழ்ந்தனவென்றாலும், ஏதோ ஒரு விதத்தில் மீண்டும் மீண்டும், ஒன்றையொட்டி மற்றதாக, இன்றைக்கும், தள்ளாத இத்தசையிலும், ஏறக்குறைய எழுபதாவது வயசிலும், நினைவில் தட்டியபடியே உள்ளன.

தன்னையே மையமாகக் கருதும் இந்தச் சுயநல உணர்வையும், அதோடு மேலெழுந்தவாரியாக விஷயங்களை நோக்கும் என் இயல்பான மனோபாவத்தையும் ஓர் அளவுகோலாகக்கொண்டு வெளியுலகை நிர்ணயிக்க முற்படுகிறேன். இதனால்தான் 'கெட்டிக்காரச் சாமியார்' என்ற கியாதியையும் தப்பாமல் சம்பாதித்து வருகிறேன். இந்த அளவையின் மூலம் ஒரே முடிவுக்குத்தான் — சுயநல நோக்கங்கள் முன்னுக்கு நிற்காத மனிதர்கள் யாருமே இல்லை என்ற முடிவுக்குத்தான் — வரவேண்டியிருக்கும்.

எனினும் உண்மையில் அவ்வாறில்லை.

ஆண்டுகள் உருண்டு செல்லச் செல்ல வேறு ஒரு கருத்துப் பதிந்து வருகிறது. என் சுபாவப்படி இதுவும் மேலோடுதான் பதிகிறது. அதாவது, நன்னெறிகளிலும், தருமத்திலும் ஆழ வேரூன்றி நிற்கும் சில ஆத்மாக்

களும் இப்பூவுலகில் ஜீவிக்கத்தான் செய்கின்றனர், தாங்களாகவே முன்வந்து பிறருக்கென்றே உயிர் வாழ்கின்றனர். இதற்காகத் தங்கள் இகவுலக லாபங்களையும் போகங்களையும் துறப்பது மட்டுமின்றித் தங்கள் ஆத்ம வளர்ச்சிக்கான சாதனையைக் கூடத் தியாகம் செய்கின்றனர்—இப்படி ஓர் உணர்வு எனக்கு உதயமாகிறது.

**1907**ம் வருஷ ஆரம்பம். நான் திண்டிவனத்தில் கிறிஸ்துவ மிஷன் பள்ளியொன்றில் படித்துக் கொண்டிருந்தேன். அப்போது ஒரு விஷயம் கேள்விப்பட்டேன், முன் ஆண்டு எங்கள் ஊருக்கு விஜயம் செய்த ஸ்ரீ காமகோடி பீடத்து சங்கராச்சாரிய சுவாமிகள் கலவை என்ற ஊரில் ஸித்தி பெற்றுவிட்டார் என்று. கலவை கிராமம் ஆர்க்காட்டிலிருந்து பத்து மைல், காஞ்சிபுரத்திலிருந்து இருபத்தைந்து மைல். என் தாயார் வழியில் இருந்த ஒன்றுவிட்ட சகோதரருக்கு பீடாரோகணம் நடத்தி விட்டதாகவும் பின்னர் தகவல் வந்தது. அவர் ரிக்வேதத்தில் சிறிது அத்தியயனம் செய்த பின் ஆசாரியர் முகாமில் சேர்ந்திருந்தார்.

என் அன்னையின் விதவையான, ஆதரவற்ற சகோதரியின் ஒரே புதல்வர் அவர். அவளுக்கு ஆறுதல் சொல்ல அந்த முகாமில் யாருமே இல்லை. இந்தச் சந்தர்ப்பத்தில் குடும்பத்தோடு கலவை செல்வதெனத் தீர்மானித்தார் என் தந்தை. திண்டிவனம் தாலுகாவில் அப்போது அவர் பள்ளி சூபர்வைஸர். அவரது மாட்டு வண்டியிலேயே அறுபது மைல்களும் போவதென்று உத்தேசம். ஆனால் திடீரென்று திருச்சியில் நடைபெற்ற கல்வி மகாநாட்டுக்கு அவர் செல்ல நேரிட்டதால் யோசனை கைவிடப்பட்டது.

என் அன்னையே என்னோடும், மற்றக் குழந்தைகளோடும் கலவைக்குக் கிளம்பிவிட்டாள்-சகோதரியின் ஒரே மகன் சந்நியாசியாகிவிட்டானே, அவளைத் தேற்ற வேண்டுமே என்று. காஞ்சிபுரம் வரை ரயிலில் சென்றோம். அங்குள்ள ஸ்ரீ சங்கர மடத்தில் தங்கினோம். குமாரக் கோட்டத் திருக்குளத்தில் ஸ்நானம் செய்யப் போனேன் நான். அங்கே, பரமகுரு ஸித்தி அடைந்த தசம தினத்தன்று மகா பூஜை செய்வதற்குச் சாமக்கிரிகள் வாங்குவதற்காகக் கலவை மடத்தினர் வண்டியில் வந்திருப்பதைக் கண்டேன். ஏனோ அவர்களில் ஒருவர்—மடத்தின் பரம்பரைக் காரியஸ்தர் அவர்-என்னைமட்டும் தம்முடன் வருமாறு பணித்தார். என்னைத் தொடருமாறு என் சுற்றத்தாருக்கும் வேறொரு வண்டி அமர்த்தப்பட்டது.

பிரயாணத்தின்போது அவர், நான் இனி வீடு திரும்பாமலே போகக் கூடும் என்றும், இனி என் வாழ்நாள் முழுவதையும் மடத்திலேயே கழிக்க வேண்டி வரலாமென்றும் சூசனையாகத் தெரிவித்தார். சரிதான், ஒன்றுவிட்ட தமையன் மடாதிபதி ஆகியிருக்கிறார் அல்லவா, நாம் அவருடனேயே வசிக்க வேண்டுமென விரும்புகிறார் போலும் என்றுதான் முதலில் எண்ணினேன். அப்போது எனக்கு வயசு பதின்மூன்றேதான்; இந்த வயசில் நாம் மடத்தில் அவருக்கு என்ன விதத்தில் உபயோகமாயிருக்க முடியும் என்று ஆச்சரியப்பட்டேன்.

மைல்கள் புரளும் போக்கில் காரியஸ்தர் மெல்ல மெல்ல விஷயத்தை விளக்கினார். எனக்குத் தமையன் முறையான புது ஆசாரியருக்கும் ஜுரம் கண்டு ஜன்னியாகி விட்டதாம். என்னை அதிவிரைவில் கலவையில் சேர்ப்பிக்க அதனால்தான் துடிக்கிறார்கள். குடும்பத்தாரிடமிருந்து பிரித்ததுகூட இதற்காகவே. திண்டிவனத்துக்கே சென்று என்னை அழைத்து வருமாறுதான் அவருக்கு உத்தரவாயிருந்ததாம். வழியில் காஞ்சியிலேயே கண்டு விட்டார்கள். சம்பவங்கள் இவ்வாறு எதிர்பாராத முறையில் திரும்புவதைக் கண்டு நான் பிரமித்து விட்டேன்; அதிர்ந்தே போனேன். வண்டியிலேயே மண்டியிட்டு அமர்ந்தபடி 'ராமா, ராமா' என்று உருவேற்றலானேன். நான் அறிந்திருந்த ஆன்மீக வழிபாடு அது ஒன்றுதான். எஞ்சிய பிரயாணத்தில் அதையேதான் செய்தேன்.

என் அன்னை சிறிது காலம் கடந்துதான் வந்து சேர்ந்தாள்: சகோதரியைத் தேற்றுவதற்காக வந்தவள் அதே காரணத்துக்காகத் தனக்கு ஒருவர் தேறுதல் சொல்ல வேண்டிய நிலை ஏற்பட்டிருப்பதைக் காணவே வந்து சேர்ந்தாள்!

நான் காஷாயம் உடுத்து விட்டேன். ஆனால் ஏதோ நானாகத் தியாகம் செய்ததாலோ, துறவு பூண்டதாலோ அல்ல. குருவின் கீழ் அதிக காலம் வசிக்கும் பாக்கியம் பெற்றவனுமல்ல நான். சந்நியாசம் ஏற்ற முதல் நாளிலிருந்தே ஜாஜ்வல்யமான ஒரு தர்பாரின் சகலவிதமான சுகங்களும், பொறுப்புகளும் என்னைச் சூழ்ந்து கொண்டன.

ஆனால் ஒன்று; என் பரம குருவின் பரம சிஷ்யர்களான தும்மலூரு ராமகிருஷ்ணய்யா, அடையபலம் பசுபதி அய்யர் என்ற இருவர் நான் துறவு பெற்றபோது கலவையில் இருந்தார்கள். அவர்களுக்குத் தென் ஆர்க்காடு மாவட்டக் கோர்ட்டில் உத்தியோகம். நான் என் இளமைப் பருவத்தில் என்னைத் தக்கபடி உருவாக்கிக் கொள்ளத் தங்களால் இயன்ற சகலமும் செய்வதென அவர்கள் சங்கல்பம் பூண்டிருந்தது நாளடைவில் தெரிய வந்தது.

ராமகிருஷ்ணய்யா பத்திலௌ மனப்பாங்கு படைத்தவர்தான். எனினும் ஏராளமான குடும்பச் சுமைக்கு அவர் ஆளாகிவிட்டதால், என் விஷயமாக அவர்கள் வகிக்க முற்பட்டிருந்த பாரம் முழுவதையும் பசுபதியின் தோளே தாங்க வேண்டியதாயிற்று. வேலையிலிருந்தபோது தமது ஓய்வு நேரங்களையெல்லாம் ஏகாந்த தியானத்திலும், ஸ்ரீ சங்கரரின் பிரகரணங்களிலும் செலவிட்டவர் பசுபதி. அப்படிப்பட்டவர் நான் பீடம் ஏறிய உடன் வேலையிலிருந்து ஓய்வு பெற்று அனவரதமும் என்னுடனேயே இருக்கலானார். என்னுடைய செய்கையையும், பேச்சையும், கண் இமைத்தலையும் கூட அவர் கண்காணித்து வந்தார். மடத்தின் வரவு செலவு நிர்வாகத்தை மேற்பார்ப்பதற்காகத் தமது தியான காலத்தைக் கூடக் குறைத்துக் கொண்டார்.

என்னை அவ்வப்போது தனிமையில் காண்பார் அவர். அந்த இடைவெளிகளில் என்னிடம் காணப்பட்ட ஒவ்வொரு பலவீன அம்சத்தையும் குறிப்பிட்டுச் சொல்வார். அவற்றைத் தவிர்ப்பதற்காக அவர் கூறும் யோசனைகளின்படி நான் நடக்க வேண்டுமெனக் கேட்டுக்கொள்வார். அவர் என்னிடம் மிகவும் கடுமையாக நடந்துகொள்ள வேண்டியிருந்த சந்தர்ப்பங்களும உண்டு. அப்போதெல்லாம் அவர், தம்மைவிட மேலான ஆசிரமத்திலுள்ள ஒருவரிடம் அபசாரம் செய்வதாகவும், நான் குறையற்ற துறவியாகப் பரிணமித்தபின் அதற்குப் பிராயச்சித்தம் செய்யப் போவதாகவும் கூறுவார்.

தமது மனத்தை அதுவே அலசிக் கொள்ளுமாறு இருப்ப வேண்டுமென்று ஒவ்வொரு நாளும் தம் நண்டர் ஒவ்வொருவரையும் தூண்டுவார் அவர். இகவாழ்வே இறுதி என்றிருந்து தாம் என்னென்ன நிரந்தரப் படிப்பினை பெற முடிந்தது என்பதை மனம் விட்டுச் சொல்வார். தமது பலவீனங்களை அப்பட்டமாக எடுத்துக்கூறி, உபநிஷதமும், ஸ்ரீ சங்கரரின் நூல்களும் கூறும் பரிகாரங்களை இவ்விஷயத்தில் பரீட்சை பார்க்கலாமா என்று கேட்பார்.

தெருவில் செல்லும் பரிச்சயமற்றவர்களைக் கூடச் சந்தித்து அவர்களுடைய இடர்களையும் இன்னல்களையும் கேட்டறிவார். அவர்களையும் ஆண்டவனின் மெய்யடியார்களாக, வேதாந்தத்தை அனுசரிப்பவர்களாக, ஸ்ரீ சங்கரரின் உண்மைச் சீடர்களாக உயர்த்தி விடுவார்.

1926 வரை, அதாவது பதினெட்டு ஆண்டுகள், அவர் என்னோடு நெருக்கமாக வாழ்ந்து பாஷ்ய பாடங்களைக் கேட்டார். என் பொருட்டே, கொசவுக்கும் கால் வீக்கத்துக்கும் 'புகழ்' வாய்ந்த கும்பகோணத்தில் தங்கியிருந்து அந்த நோயையும், காய்ச்சலையும் ஏற்றார். இத்தனையிலும் அவர் என்னைப் பிரிய வேண்டுமே!

கடலூரில் தம் இல்லத்தில் சில மாதங்களாக அவர் நோய்வாய்ப்பட்டிருந்தபோது தான் நானும் என் யாத்திரையில் அங்கு சென்றேன். என்னை ஊர்வலமாக அழைத்துச் சென்றபோது அவர் மடத்து யானையைத் தட்டிக் கொடுத்தார். அன்றிரவே அவர் இறுதி மூச்சுப் பிரிந்தது.

பயமோ, பட்சபாதமோ இன்றிப் பிறருக்காகவே, இறுகிய அன்புடன் வாழ்ந்த ஒரு வாழ்வு அது.

**1923**-ம் ஆண்டு. திருச்சி மாவட்டத்தில் யாத்திரை. கிராமமொன்றில் தங்கியிருக்கிறேன். அங்கே சிறுமி ஒருத்தி - பன்னிரண்டு வயசுதான் இருக்கும் — தன் தம்பி ஒரு பொய் சொல்லிவிட்டான் என்பதற்காக அவனைக் கண்டிப்பதைக் கேட்கிறேன். அந்தச் சிறுமி, சத்தியத்துக்காகக் கட்சி ஆடியதும், தம்பி கெட்டுப்போகக் கூடாது என்று கரிசனம் கொள்ளும் அளவுக்கு அவன் மீது அன்பு வைத்திருந்ததும், மாமுனிவர்களின் ஆக்ஞைக்கும் மேலாகப் படுகின்றன. இவ்வளவு காலத்துக்குப் பின்னும்கூட அந்நிகழ்ச்சியை நான் மறப்பதற்கில்லை.

கேரளப் பயணத்தின்போது ஒரு பொதுச் சத்திரத்தில் நான் முகாமிட நேர்ந்தது. அங்கே ஓர் அறையில் வைதான சில நம்பூதிரிகள் பேசிக் கொண்டிருந்தனர். ஒருவர் தம் பூஜையைத் தொடங்குவதற்காகப் பூஜைப் பெட்டியைத் திறந்தார். எனினும் வம்பில் கலந்தபடியேதான் இருந்தார். சிறிது நேரமான பின் தவறுணர்ந்து பூஜையில் கவனத்தைச் செலுத்தினார். செலுத்தியவர், உடனேயே பூஜையைக் கட்டி வைத்துவிட்டார். வம்பில் கலந்து கொண்டதால், பூஜை செய்யத் தேவையான சமநிலையில் மனத்தை வைப்பதற்குத் தாம் உள்ளுறச் செய்த முயற்சி தோற்று விட்டதாக அவர் காரணம் சொன்னார். உள்ளம் நிச்சலமாக இல்லாதபோது, பூஜை செய்வதாகப் பகட்டுச் செய்வதைவிடப் பூஜை செய்யாதிருப்பதே சிலாக்கியமெனக் கருதுவதாகவும் கூறினார்.

என் நினைவில் அப்படியே பசுமையாக உள்ளது இந்தச் சம்பவம். ஆத்ம சாதகனுடைய நோக்கம் எவ்வளவு அந்தரங்க சுத்தமாக இருக்க வேண்டுமென்பதை இது வலியுறுத்திக் கூறுகிறது.

சந்நியாசி ஒருவரைச் சந்தித்தேன், வட ஆர்க்காடு மாவட்டத்தின் எல்லையிலுள்ள ஒரு கிராமத்தில். இது நடந்தது 1929-ல். அவருக்குத் தமிழும் தெரியாது; தெலுங்கும் தெரியாது. மராத்தி, ஹிந்திதான் தெரியும். ராமேசுவரத்துக்கு ரயில் மார்க்கமாகப் போனாராம். வழியில் அவரது தண்டம் காணாமற் போய்விட்டதாம். வேறு தண்டம் பெறும்வரை அவர் உபவாசமிருந்ததாகவே தோன்றியது. எனவே, சம்ஸ்காரம் செய்து முறைப்படி தண்டம் ஒன்றை அவருக்கு அளித்தேன். அப்போது எண்பது வயதைக் கடந்திருந்தார் அவர். என்றாலும், அன்றிலிருந்து என்னையே தம் குருவாகக் கருதலானார். நான் அவரது ஆசிரம தருமத்தைக் காப்பாற்றினேனாம், அதனால் அப்படியாம்! 1945ல் ஸித்தி அடையும் வரையில் என்னை விட்டு நொடியும் நீங்க மறுத்தவர் அவர்.

அவர் எங்களோடு சேர்ந்த புதிது. 1929-ம் வருஷ சாதுர் மாஸ்யம். நான் மலேரியாக் காய்ச்சலில் படுத்த படுக்கையாகி விட்டேன் நாற்பது நாட்கள். அதுவரையில் என்னை எவருமே தொட்டு வழக்கமில்லை. அப்போதோ என்னால் உதவியின்றி நடக்கவும், நிற்கவும்கூட முடியவில்லை. புதிதாக வந்த இந்த முதியவர்தான் இந்த உதவியை எனக்கு அளிக்க முன் வந்தார். தாமும் சந்நியாசி என்பதால் அதை ஓர் உரிமையாகப் பெற்று, கடமையாகச் செய்தார்.

அவருக்கு முன்கோபம் அதிகம். குரலே ரொம்ப அதிகாரமாகத்தான் இருக்கும். அக்கம் பக்கத்துக்கெல்லாம் அவரிடம் ஒரு நடுக்கம். மத்திய பாரதத்தில், தேவாஸ் சம்ஸ்தானத்தில், ரெவினியூ இலாகாவில் பணி ஆற்றியவராம் அவர். ஆனால் அதிகாரத்திலென்னவோ அந்த நானாசாகேபும் ஜான்ஸி ராணியும்கூட அவரோடு போட்டி போட முடியாது!



தஞ்சையில் நடந்த பாவை மகாநாட்டில் போழகுடி சகோதரர்களுக்குப் பொன்னாடை போர்த்தித் தங்கப் பதக்கத்தில் "பாவை மணி" என்ற பட்டம் அளித்துக் கௌரவித்தனர். படத்தில் விழாத் தலைவர் உக்கடை திரு அப்பாவுத் தேவர், வழக்கறிஞர் திரு பாலசுப்பிரமணியம், போழகுடி சகோதரர்கள், ஸ்ரீ ஆசார்யாளின் பிரதிநிதி முதலியோர் உள்ளனர்.

ஒருநாள் தவறாமல் அவர் என் பாதங்களைப் பூஜிப்பார். இதிலிருந்து அவரை யாராலும் தடுக்கவும் முடியவில்லை. பூஜை செய்யும்போது அவர் முகத்தில் கண்ணீர் உருண்டோடும்.

காஞ்சியில் இருந்த சமயம். அவரது உறவினர் ஒருவர் ராமேசுவர யாத்திரை மார்க்கத்தில் அங்கு வந்தார். கிழவருடன் பேசிவிட்டு என்னிடம் திரும்பியவர் என்னை நன்றாகக் கடிந்து கொண்டார். நூறு வயதை எட்டிப் பிடிக்கும் ஒருவர் என்னையே கடவுளுக்கும் மேலாகக் கருதிச் சரண் புகுந்திருக்கிறார்; நானோ அந்தப் பான்மையைச் சிறிதும் பிரதிபலிக்காமல், உணர்ச்சியின்றி யிருக்கிறேன். இது தமக்குப் புரியவே இல்லை என்றார் அந்த உறவினர். இந்த ஏச்சும் என்னிடம் எவ்வித எதிர் விளைவையும் ஏற்படுத்தவில்லை — மேலெழுந்தவாரி நோக்குத்தான் என் இயற்கைக் குணமாயிற்றே!

ஒருசமயம் நாங்கள் திருப்பதி சென்றிருந்தோம். அந்தத் தொண்டு கிழ சுவாமிகளும் முகாமில் இருந்தார். பெருமாளைத் தரிசிப்பதற்காக நான் மலை ஏறிச் சென்றேன். தரிசனம் ஆயிற்று. கோவிலிலிருந்து நான் வெளிவந்த அதே சமயத்தில் கிழவனார் எங்கள் முன் வந்து நிற்கிறார். எப்படியோ சமாளித்துக் கொண்டு, அந்த விருத்தாப்பியத்திலும் மலையைக் கடந்து விட்டிருக்கிறார்! அவரது வயது, ஆசிரமம், மடத்துடன் தொடர்பு இவற்றுக்கு மரியாதை செலுத்தி, அவருக்கும் பெருமாளைத் தரிசனம் செய்து வைக்க முன் வந்தனர் ஆலய அதிகாரிகள். அவரோ அப்படியே என் காலடியில் வீழ்ந்தார். "இவர்தான் அந்தப் பெருமாள். உங்கள் உபசரிப்பை நான் ஏற்பதற்கில்லை. மன்னிக்கவும்" என்று கூறினார். கடைசியில், பெருமாளைத் தரிசிக்காமலே திரும்பினார்.

இந்த முதியவருக்குப் பல விதங்களில் மாறுபட்ட வேறு இருவரிடமும் நான் தொடர்பு கொண்டேன். இவர்களில் ஒருவருக்கு மற்றவரைத் தெரியாது. வயதிலும் அவர்களுக்குள் முப்பதாண்டுகள் வித்தியாசம். என்றாலும் அவர்கள் ஒரேமாதிரி எண்ணினர்; செயல் பட்டனர்.

என் பாதத்தை வழிபடுவதில் இருவருக்குமே நிரம்பிய பரவசம். என் நினைவிலேயே இரவும் பகலும் ஊறியிருந்தார்களாம். எந்த உத்பாதத்தையும், மனச் சபலத்தையும் இலேசாக்குமளவுக்கு அது அவர்களுக்குப் பெரும் பலத்தைத் தந்திருந்ததாகச் சொல்லிக் கொண்டார்கள்.

பின்னர்தான் அவர்களுக்கு என் குறைபாடுகளும், சுபாவமாக எதிலுமே ஊன்றியில்லாதவன் நான் என்பதும் தெரிய வந்தன. அவ்வளவுதான்! அவர்கள் பாத பூஜையை நிறுத்தி விட்டார்கள். அதோடு மட்டுமின்றி வேறு யாராவது என் பாதத்தை அண்டுவதையும் முடிந்தமட்டும் தடுக்கலானார்கள். ஓரளவுக்கு, என் பாதத்தை பக்தர்கள் பூஜிப்பதே என் குறைபாட்டுக்குக் காரணம் என்பது அவர்கள் நம்பிக்கை.

இவர்களும் தங்கள் வாழ்வின் இதர பொறுப்புக்கள் சகலத்தையும் துறந்தனர். என்னைத் திருத்திக் கொள்ளுமாறு என்னிடமே கேட்டுக் கொள்வதிலும், வேண்டிக் கொள்வதிலும், நான் திருந்த வேண்டுமென்பதற்காகவே ஜபமும் பிரார்த்தனையும் செய்வதிலும் தங்கள் எஞ்சிய வாழ்நாள் முழுவதையும் செலவிடச் சங்கல்பித்துக் கொண்டார்கள் அவ்விருவரும்.

வாழ்க்கை எனக்கு இதைத்தான் கற்பித்திருக்கிறது: "பிறருக்காகமட்டுமே வாழ்வதற்கென்று பகவான் சில ஆத்மாக்களைப் படைத்திருக்கிறான்." நன்றி: பவன்ஸ் ஜர்னல்

## 59

உறுவது இது என்று.

உனக்கு ஆள்-பட்டு நின்கண்
பெறுவது எதுகொல் என்று.
பேதையேன் நெஞ்சம்
மறுகல் செய்யும் - வானவர் தான
வர்க்கு என்றும்
அறிவது அரிய அரியாய அம்மானே!

தேவர்களுக்கும் தானவர்களுக்கும் எக்காலத்திலும் அறிதற்கு அரியவனே! நரசிம்மாவதாரம் எடுத்த அம்மானே! உனக்கு அடிமை செய்வதே உயிரெடுத்ததன் பயன் என்று உனக்கு ஆட்பட்டேன். அதன்பின் உன்னிடம் என்ன பெறுவேன் என்று ஞானமடையாத நான் உள்ளத்தைக் குழப்பிக் கொண்டு நிற்கிறேனே, என்ன மடமை என்கிறார்.

'அற்றது பற்றெனில் உற்றது வீடு உயிர் செற்று அது மன்உறில் அற்று இறை பற்றே" என்று ஆழ்வார் முன்னமே உபதேசித்தார் அல்லவா? கீதாசாரியனும் 'எல்லாப் பற்றுக்களையும் விட்டொழித்து என்னை அடைவாய்' என்று பலவேறு முறையில் வற்புறுத்தி உபதேசித்தானல்லவா? பகவானை மனத்தில் நிறுத்திப் பிரார்த்தனை முறையில் ஈடுபடும்போது இது வேண்டும், அது வேண்டும், இதைத் தருவாய், அதைத் தருவாய் என்று விஷயங்களைத் தியானித்துக் கொண்டிருந்தால் அது உண்மை பகவத் தியானமாகாது; விஷய தியானமே யாகி விடும்! விட்டுவிட வேண்டிய விஷயப் பற்று இன்னும் உறுதியாகி விடும். ஆசைகள் குறைவதற்குப் பதில் விருத்தியாகும். இதை கீதாசாரியனும் சொல்லி யிருக்கிறான். ஆனபடியால் "பெறுவது எதுகொல் என்று பேதையேன் நெஞ்சம் மறுகல் செய்யும்" என்று ஆழ்வார் இந்தப் பாசுரத்தில் வருந்துகிறார். மறுகல்-தடை "உறுவது இது என்று" ஆட்பட்டு நிற்பதே மார்க்கம் என்கிறார்.

இந்தப் பாசுரத்தில் வரும் "பெறுவது எதுகொல் என்று பேதையேன் நெஞ்சம் மறுகல் செய்யும்" என்பதற்கு ஈடு வியாக்கியானம் வேறுவிதம். கிரமத்திலே (அதாவது நிதானித்து) செய்கிறோம் என்று என்னை சம்சாரத்தில் நீடித்து இருக்கச் செய்வாயோ அல்லாது என் ஆசையை அறிந்து உடனே தரிசனம் தருவாயோ என்றெல்லாம் சந்தேகப்பட்டு நெஞ்சம் கலங்கி நிற்கிறேன் என்பதாக.

உருஆகிய ஆறு சமயங்கட்கு எல்லாம்
பொருஆகி நின்றான் அவன் -
எல்லாப் பொருட்கும்
அரு ஆகிய ஆதியை, தேவர்கட்கு
எல்லாம்
கரு ஆகிய கண்ணனை, கண்டு
கொண்டேனே.

"உருவாகிய ஆறு சமயங்கட்கு எல்லாம் பொருளாகி நின்றான்" என்பதற்கு 'தோன்றிய ஆறு வைதிக சமயங்களுக்கு எல்லாம் ஒப்ப நின்றவன்' என்று பொருள் கொள்ளலாம். அதாவது அந்தச் சமயங்களில் ஒவ்வொன்றிலும் சொல்லப்பட்ட தெய்வம் நாராயணனே ஆவான் என்றபடி. இதற்கு வைஷ்ணவ பரம்பரைப் பொருள்: ஒரு மதம் என்று மேல் எழுந்த பார்வையில் காணப்படும் புறச் சமயங்கள் ஆறுக்கும் தடையாக நின்றவன் என்பது. அந்தப் பொய்யான புறச் சமயங்களில் நான் புகாதபடி தடுத்து நின்ற கண்ணன் என்றவாறு.

பொரு என்பதற்குப் பல பொருள்கள்—ஒப்பு, தடை, யுத்தம். எல்லாப் பொருட்கும் அருவாகிய ஆதியை— எல்லாப் பொருள்களிலும் அவற்றின் அந்தராத்மாவாகவும் அவற்றின் உருவத்துக்கு ஆதார காரணமாகவும் நிற்பவன். அரு-கண்ணுக்குப் புலப்படாத உயிர் தேவர்கட்கு எல்லாம் கருவாகிய கண்ணன் - எல்லாத் தேவர்களுக்கும் காரணன் ஆனவன்.

கண்டுகொண்டேன்-அவதாரகாலத்திலும் சிசுபாலன் முதலாயினோர் காண ஒண்ணுதவனை நான் என் அன்பினுல் காணமுடிந்தது என்கிருர்.

கண்டு கொண்டு என்கண் - இணை
ஆரக் களித்து.
பண்டை வினையாயின பற்ருேடு
அறுத்து.
தொண்டர்க்கு அமுது உண்ணச்
சொல்-மாலைகள் சொன்னேன்-
அண்டத்து அமரர் பெருமான்
அடியேனே.

என்னுடைய இரண்டு கண்களாலே உன்னைக் கண்டு கொண்டு மிக மகிழ்ந்து தொன்றுதொட்டு வருகின்ற பாபங்களை வாசனை அறப் போக்கிக் கொண்டு, அடியார்களுக்காக அவர்கள் அமுதம்போல் அனுபவிக்கும் சொல் மாலைகளைப் பாடினேன். ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அமிர்தம் ஆகும் திருவாய் மொழி. தாம் தரிசனம் பெற்று மகிழ்ந்தது மல்லாமல் அடியார்களுக்கு அவனை அனுபவிக்கும் வழியாகிய திருவாய்மொழியும் பாடினேன் என்கிருர்.

அடியான் இவன்என்று எனக்கு ஆர்
அருள்செய்யும்
நெடியானை, நிறைபுகழ் அம் சிறைப்
புள்ளின்
கொடியானை, குன்ருமல் உலகம்
அளந்த
அடியானை, அடைந்து அடியேன்
உய்ந்தவாறே!

இவன் எனக்கு அடியவன் என்று இரங்கி அருள் செய்யும் பகவான். அவன் நெடியான், திரிவிக்கிரமன். கொள்ளுகிற என் அளவில் அல்ல அவன் அருளினது. தன் நெடிய ஆகாரத்துக்குத் தக்கதான மிகப் பெரிய அளவில் அருளினுன்.

குன்ருமல் உலகம் அளந்த அடியான்—ஓர் இடம் விடாமல் உலகத்தை அளந்த திருவடிகளை உடையவன். அடியானை அடைந்து அடியேன் உய்ந்தவாறே — அவனை அடைந்து நான் செய்யவேண்டியதை யெல்லாம் செய்து முடித்து மனம் நிறைவு பெற்றேன், கிருதார்த்தன் ஆனேன் என்று வியந்தும் மகிழ்ந்தும் பாடுகிருர்.

## ஞான பண்டிதர் மறைந்தார்

வேதாந்த சாஸ்திரத்திலும் வைதிக தர்மத்திலும் பற்றுள்ள தென்னிந்தியக் குடும்பங்களில் பிரும்மஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரியார் நன்கு அறிமுகமான பெயர். முறைப்படி ஸம்ஸ்கிருத மொழி பயின்று காவிய அலங்கார புராணுதிகளிலும் முதிர்ந்த தேர்ச்சி பெற்று, ஜோதிஷ சாஸ்திரத்தில் அபார அறிவும் ஆற்றலும் பெற்று விளங்கியவர். தென்னுட்டுக்கு ஒரு திலகம் போல் பிரகாசித்த மன்னர்குடி ராஜு சாஸ்திரிகளிடம் வேதாந்த சாஸ்திரத்தைக் குரு-சிஷ்ய பாவத்துடன் கசடறக் கற்றறிந்தவர். தாம் அறிந்தவற்றை உலகினுக்கு அளித்து ஞான ஒளியையும், வைதிக தர்மத்தையும் பரப்ப வேண்டுமென்ற நல்லெண்ணத்தினுல் பல உயர்ந்த நூல்களை ஸம்ஸ்கிருத மூலத்திலிருந்து மொழிபெயர்த்து பதவுரை, பொழிப்புரை, கருத்துரைகளுடன் அச்சிட்டு வழங்கி, வித்யாசந்ததியை ஏற்படுத்திக் கொண்டவர். சங்கர பகவத் பாதருடைய பிரம்ம சூத்ர பாஷ்யத்துக்குத் தமிழில் உரை எழுதி உலகினுக்கு ஈந்தது ஒன்றினுலேயே அவருடைய பெயர் என்றென்றும் நிலைத்திருக்கும். ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவிடம் கொண்ட அளவிலா அந்தரங்க பக்தியினுல் எழுந்த ஸ்ரீ பாகவதத் தமிழுரையும் நாராயணீய ஸ்தோத்திரமும், "அந்த அப்பன் கோபாலனை"யே பரவசமாக்கும். புத்தகங்களை எழுதியதுடன் திருப்தியடையாமல் பகவத் கீதையையும், சூத்ர பாஷ்யங்களையும் காலை வேளைகளில் சிஷ்யர்களுக்குச் சாந்தி பாடக் கிரமப்படி பாடம் சொல்லிக் கொண்டு ஞானகுருவாகத் தமது கடைசிக் காலம் வரையில் வாழ்ந்தார். அவருடைய விருதுகளைக் கேட்டாலே பிரமிப்பு ஏற்படும். அபிநவ வ்யாச, குலபதி, அபிநவ சுகப்ரம்ம, தர்சன கலாநிதி, ஜ்யோதிஷ் தந்த்ரப்ரவீண, வித்யா வாசஸ்பதி, கோபாலதத்வ ரக்ஷாமணி. இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு துறையில் பண்டித நடேச சாஸ்திரியார் அடைந்த சிறப்பைக் கூறுகிறது. சிவராத்திரி புண்ணிய தினத்தன்று அவர் சிவலோகப் பிராப்தி அடைந்ததானது அவர் எத்தகைய புண்ணிய சீலர் என்பதைக் குறிப்பிடுகிறது. சாஸ்திரியாரின் பிரிவினுல் வருந்த முற்றிருக்கும் அவருடைய மாப்பிள்ளை செங்காலிபுரம் பிரும்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதருக்கும், குடும்பத்தினருக்கும் நம் மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



## உயர்ந்ததை வாங்குங்கள் அதுவே







# எவரஸ்ட்

### தையல் மிஷின்கள்

## ஷாரதா மெஷினரி கார்ப்பரேஷன்

**11, பூஸா ரோடு, புது டெல்லி - 5**

சென்னை ஏஜண்டுகள் :

முஹம்மது இப்ராஹிம் & கோ. பிரைவேட் லிட்., விக்டர் ஹவுஸ், 7-8, மவுண்ட் ரோடு, சென்னை - 2

---

# தபால் நிலையங்களில் மெட்ரிக் யூனிட்டுகள்

பிப்ரவரி 1உ. முதல் தபால் பரிவர்த்தனைகள் எல்லாவற்றிலும் மெட்ரிக் முறை பின்பற்றப் படுகிறது. மாற்றப்பட்டுள்ள சில முக்கியமான தபால் விகிதங்கள் பின்வருமாறு :

**உள்நாடு**

| | |
|---|---|
| **கடிதங்கள்** | |
| முதல் 15 கிராம் | 15 ந.பை |
| கூடுதல் ஒவ்வொரு 15 கிராம் | 10 ந.பை |
| **பாக்கெட்டுகள்** | |
| முதல் 50 கிராம் | 8 ந.பை |
| கூடுதல் ஒவ்வொரு 25 கிராம் | 3 ந.பை |
| **பார்சல்கள்** | |
| ஒவ்வொரு 400 கிராம் அல்லது அதன் பாகம் | 15 ந.பை |
| **பாக்கெட்டுகளுக்கு விமான சர்சார்ஜ்** | |
| ஒவ்வொரு 10 கிராம் அல்லது அதன் பாகம் | 4 ந.பை |

**வெளிநாடு**

| | |
|---|---|
| **கடிதங்கள்** | |
| முதல் 20 கிராம் | 30 ந.பை |
| கூடுதல் ஒவ்வொரு 20 கிராம் | 20 ந.பை |
| **அச்சடித்த பொருள் முதலியவை** | |
| முதல் 50 கிராம் | 12 ந.பை |
| கூடுதல் ஒவ்வொரு 50 கிராம் | 6 ந.பை |
| வர்த்தக காகிதங்களுக்கும் சாம்பிள்களுக்கும் குறைந்த பட்ச கட்டணம் | 30 ந.பை |

**மற்ற விகிதங்களைப்பற்றிய முழு விவரங்கள் எந்த தபால் நிலையத்திலும் கிடைக்கும்**

தபால் தந்தி இலாகா

DA 60/686

# சங்கமம்

வீ. சுவாமிநாதன்

**வா**ழ்வென்று அமைந்து விட்டால் அதில் 'வட்டங்களிட்டும் குளமகலாத மனிப் பெருந் தெப்பத்தைப் போலே' நெஞ்சப் பதிவிலிருந்து மறையாது நின்று விட்ட நிகழ்ச்சிகள்தான் எத்தனை யெத்தனை! நினைவின் அடிவாரத்திலிருந்து நெஞ்சின் மலர்ச்சியாய் அந் நிகழ்ச்சிகள் இதழ் விரித்துச் சிரிக்கையில் மனம் நெக்கு விட்டல்லவா உருகுகிறது.

கும்பகோணம் செல்ல நேர்ந்த போதெல்லாம் புரண்டடித்துக் கொண்டு வெள்ளம் ஓடும் காவேரிக் கரையில் அமைந்த சகாஜி நாயக்கன் தெருவில் ஒரு முறையாவது நடை பயிலாமல் ரகுவினால் ஊர் திரும்ப முடியாது. அப்போதெல்லாம் தனக்கே புரிந்த தன் ரகசியத்தில் மேனி சிலிர்க்க அச்சம், பயம், ஆனந்தம் என்ற உணர்ச்சிக் கலவையினூடே அந்நிகழ்ச்சி இமைத் திரையில் சுழன்று நீந்தும்.

வடிவமற்று ஜீவன் மட்டுமாய்ச் சுடரொளியில் அவ்வுயிரைப் பார்ப்பதுபோல் தோன்றுகையில், அதன் தெய்வீக ஜீவ எழிலினிலே மெய்ம்மறந்து போவான் ரகு.

ஆமாம், தெய்வ அழகுதான் அது! தெய்வந்தான் அவள்! தெய்வமும் அவளும் வேறு அல்ல!

*   *   *

"தெய்வ அழகுதான் அது! தெய்வந்தான் அவள்! தெய்வமும் அவளும் வேறல்ல" தன்னை மறந்து இப்போது இந்தச் சொற்கள் அவனிடமிருந்து கிளம்பியதும், ஏற்றி வைத்ததும் தன்னுள் அடங்கிய சுகந்தத்தை அலை அலையாய்ப் பரப்பும் ஊதுவர்த்திபோல் நினைவு இழையோடி வந்தது. சிந்தனை வெள்ளத்தில் கரைந்து போயிற்று.

முதன் முதல் புதிதாய் மலர்ந்த மலரைக் கண்டாற்போல், அவன் கண்ட அவள் முகம் அவனெதிரே ஒரு கணம் தோன்றி நழுவியது.

ஆதரவாய் நோக்கும் விழிகளின் தண்ணொளி—முறுவலில் சுழல் விழும் கன்னங்களின் மென்னொளி—ஈரம் படர்ந்த மலரதரங்களின் கனிவொளி—ஒளி ஜாலந்தான் அவள்......

சந்திர—சூரிய, தாரகைகள் அவள் கூட்டம். அவைகளின் ஒளியெல்லாம் அவளின் ஜன்யங்கள்: அவள் ஜனனி! அதனால்தானோ என்னவோ அவள் பெயரும் ஜனனி!

ஜனனி!

அவளைப் பார்த்ததும் அவனுக்குப் புரிந்து போயிற்று. அவள்தான் ஒளிகளின் ஜனனி என்று. அவள் முகவொளி அவளைக் காட்டிக் கொடுத்துவிட்டது. அவன் உடல் மயிர்க்கூச்செறிந்தது. ஆனால் அந்த மகத்தான உண்மையை அவன் மற்றவர்களிடம் சொல்லிய பின் கூட ஏன் அவர்கள் அதைப் புரிந்து கொள்ளவில்லை? புரியாமல் நிற்பதுதான் தெய்வ நியதியின் தெய்வீகமோ என்னவோ?

அவன் மனைவி லலிதாவே அதைப் புரிந்துகொள்ளவில்லை, பாவம்! இப்போதுதான் நடந்தாற்போல் இருக்குமென்று அந்த நினைவும் பசுமையாய், பொலிவுடன் மலர்ந்துவரும் இப்போதும் சிற்சில சமயம் அவளையும் அறியாமல் லலிதாவிடம் ஜனனியைப் பற்றிப் பேசத் தொடுப்பான். லலிதா பயத்தில் மிரண்டு போய்ப் பொறாமையில் நடுங்குவாள். அவள் தவிப்பு ரகுவுக்கு வேடிக்கையாய் இருக்கும்.

தெய்வத்தைக் கண்டு நம்மால் பொறாமைப் பட முடியுமோ? இல்லை, பொறாமைதான் படலாமோ?—அவள் ஜனனி! அவள் தெய்வம்!

ஜனனி!

நிறையழகின் பெருவடிவத்துக்குத் தந்த சொல்லாய்ச் சிந்தும் 'ஜனனி' என்ற பெயரின் நெடுங் குளிர்ச்சியில் சுவையும் சாந்தியும் தவிர வேறெதையும் உணர முடியவில்லை. இப்போது போலிருக்கிறது.—

கும்பகோணத்துக்கு, பெற்றோர் வீட்டுக்குத் திடீரென்று நினைத்துக் கொண்டு கிளம்பி வந்து விட்டாள் லலிதா. அவள் போகிறேன் என்றதும் ரகு அனுமதி தந்துதான் அனுப்பினான். எத்தனை வளர்ந்தாலும், உள்ளந்தான் எத்தனை முதிர்ந்தாலும் அம்மா-அப்பா என்ற அழைப்பில் சொற்களில் தேங்கிச் சிந்தும் இனிமைக்கும், அவர்களின் ஆதரவின் நயத்துக்கும் ஏங்கும் ஏக்கம் தீருவதில்லை. அந்த இன்பத்துக்கு என்றும் ஈடில்லைதான். நம் உயிரின் ஆதார ஒலியே அவர்கள்தானே!

அதுவும் மணமான புதிது அப்போது. வாழ்வின் புதுத் திருப்பத்தை லலிதா இன்னும் சரியாகப் புரிந்து கொள்ளாது நின்ற நேரம். தாய் தந்தைக்குச் செல்வமாய், அவர்களின் மலர்ந்த அரவணைப்பிலிருந்து பிரிந்து, அவனைப் பற்றிக் கொண்டதும் எழுந்த தெளிந்ததும் தெளியாததுமான எண்ண வேகத்தில் தவித்த நாட்கள் அவை. அந்தத் தவிப்புக்கு மாற்றாக அடிக்கடி பிறந்த ஊருக்குச் சென்று வரும் ஆசை தோன்றும். குரல் கெஞ்ச அவனை அனுமதி கேட்பாள்.

அவள் அவஸ்தையைக் கண்டு அவனுக்கு ஒருபுறம் சிரிப்பு வரும்; ஒருபுறம் பாவமாய் இருக்கும். அவன் 'சரி' யென்றதும் அவள் நயனங்கள் நிறைந்து பளபளக்கும்.

ஆனால் லலிதா சென்றதும் அவனுடைய சுய பலம் எல்லாம் வடிந்து தடுமாறுவான். பிரிவின் வேதனை அவனைப் பிசாசாய் ஆட்டி வைக்கும். கண்ணெதிரே பூஞ்சோலை அழிந்து பாலையானாற்போல் வீடு வெறுமையாய், பயங்கரமாய்த் தோன்றும். அலுவலகம் விட்டதும் வீடு திரும்ப விருப்பமின்றி, ஊரெல்லாம் சுற்றிவிட்டு, நள்ளிரவுக்கு அடிபட்ட புறாவாய் வந்து விழுவான். விளக்கைக் கூட ஏற்றாமல் குமைந்த இருளில் உட்கார்ந்த நிலையிலேயே தூக்கமின்றி இரவைத் தள்ளுவான். தன்னை அன்பினால், தழுவலால் மயக்கிவிட்டு, தான் மயங்கி அடிமையான பின் அலட்சியமாய்த் தன்னை விட்டு அவள் பிரிவதை நினைக்கையில் அவனுக்கு ஆத்திரம் பொங்கி வரும்.

அப்படி ஒரு பிரேமை அவனுக்கு அவள் மேல். அவள் தன் உரிமை என்ற தைரியத்தில் தன் எண்ணம், தன்னிதயம், தன்னுசை எல்லாவற்றையும் அவள் தளிர்க் கையில் அன்புப் பரிசாய்த் தந்துவிட்டுத் துடித்தான். ஆனாலும் அதனால் தான் படும் துன்பங்களும் வேதனைகளும் உள்ளூற இனிமையாக இருந்தன. வாழ்வின் அந்தரங்கமே அதுதானோ?

பத்து நாட்களுக்குள் பரிதவித்துப் போய் இனியும் இந்தத் துயர் தாங்கமுடியாது என்ற நிலை நேர்ந்து, அவன் லீவெடுத்துக் கொண்டு தானே கும்பகோணம் கிளம்பி விடுவான். அங்கே அவனை எதிர்பார்த்து நிற்பாள் லலிதா. சொற்களே இல்லாத தங்களுக்கே உரிய மொழியில் ஒருவரையொருவர் கண்டு விட்ட ஆனந்தத்தை அவளும் அவனும் பரிமாறிக் கொள்வது வீட்டிலுள்ள பெரியவர்களுக்கு வேடிக்கையாய் அமையும். ஆனால் அவனுடைய அன்பு அழைப்பில் அவள் மேனியின் கதிர்ப் பச்சை மணம் அதற்குள் உள்ளொடுங்கிச் சூழ்நிலையே அவர்களுக்கு மறந்திருக்கும்.

இம்முறையும் அப்படித்தான். கும்பகோணம் ஸ்டேஷனில் இறங்கி, சகாஜி நாயக்கன் தெருவுக்குச் செல்லும் வரை நெஞ்சின் பரபரப்பு சகிக்க முடியவில்லை. பறந்து விடு செல்லச் சிறகு இல்லாதது தாங்கலாய் இருந்தது.

அவனுடைய லலிதா அவள்! அவளுடைய ரகு அவன்!

விடிந்தும் விடியாத நேரம். பிரிந்தும் பிரியாததுமான இருளுடன் கலந்து விளையாடிய ஒளியின் பரவல். தண்மையாய்ப் படியும் பனிச் சரங்கள். தழுவி நழுவும் இலேசான காற்று.

தெருவின் திருப்பத்தைக் கடந்ததும், தெருவின் நடுவே, பூவும், குலையுமாய் வாசலை அடைத்து நிற்கும் வாழை மரங்கள் கொண்ட வீட்டைத் தாண்டும் போது—

முதல் முதலாக அப்போதுதான் ஜனனியைப் பார்த்தான் ரகு.

ஜனனி!

அப்போது அவள் பெயர் அவனுக்குத் தெரியாது. ஆனால் ஒளிகளின் ஜனனி அவள்தான் என்று அப்போதே தெரிந்து போயிற்று.

உலகத்தின் வாயிற்படியில் தன் எண்ணிலடங்காக் கரங்களை எங்கெங்கும் விரித்துக் கொண்டு உதித்து வரும் பொன்னொளியில் தண்ணொளியாய் அவள் நின்றாள்.

துயில் மயக்கம் கலையாமல், நீர் தெளிக்கும் தரையிலெல்லாம் உதிர்ந்து கமழும் பவழ மல்லிகையை வலது கை ஏந்தும் கூடையில் பொறுக்கியெடுத்துக்கொண்டு அவள் நிமிர்வதைப் பார்த்தபடி செயலிழந்து போனான் ரகு ஒரு கணம்.

ஒளி உதயத்தின் அதிதேவதை தன் வலக் கரத்துப் பொற்கூடையில் எழில் எழிலாய் மலர்கள் சேர்த்து, தரணிக்கு மகுடம் சூட்டக் காத்திருப்பது போல் நின்றாள் அவள்.

அவன் பார்வை அவள் மேல் பதிந்து கிடந்த அந்தக் கணம் அவள் பார்வையும் அவன் மேல் சட்டென்று நிலைத்து நகர்ந்தது. அப்போது மின்னிய அவள் விழி நோக்கின் ஆதரவான தண்ணொளியும், முறுவலில் கழல் கன்னங்களின் மென்னொளியும், ஈரம் படர்ந்த மலரதரங்களின் கனிவொளியும் எங்கெங்கும் பூ வாணமாய்ச் சிதறிக் கொட்டின.

'எழிலென்றால் இதுதான் எழில்! இளமையின் மேனி எழில் நித்தியமில்லை. ஆனால்: இந்த எழிலுக்கு என்றென்றும் அழிவில்லை! இந்த எழில் என்றும் அழிய முடியாதது! அழியாததெல்லாம் தெய்வம்! அதனால் இந்த எழிலும் தெய்வம்!'

ஊரின் எல்லையில், குளக்கரைக் கோவிலில், அகல் விளக்கின் மங்கிய சுடரில், விழிகளின் தண்ணொளியும், முறுவலின்



மென்னொளியும், மலரதரங்களின் கனிவொளியுமாய்த் தைலக் காப்பு சாத்திக்கொண்டு தேவி இப்படித்தான் நிற்பாள். இதே வடிவம் - இதே எழில் - அந்தத் தேவிதான் இவள்! தெய்வந்தான் இவள்! தெய்வமும் இவளும் வேறல்ல!

ரகுவின் பிடரி புல்லரித்தது. பிடிபடாத சிருஷ்டி விநோதத்தின் உள் ரகசியத்தைப் புரிந்து கொண்டு விட்டாற் போன்ற உணர்வில் அவன் நின்ற இடத்தில் பூமி நடுங்கியது.

கண்ணின் வழியே பார்வையோடு கலந்து வந்த இறையழகு உள்ளம் எனும் ஆலயத்தில் கம்பீரமாய் விசுவரூபம் கொண்டது. அந்தக் கணமே அவன் எண்ணத்தின் மாசுகளும், தூசுகளும் கருகி உதிர்ந்தன. துன்பம், ஏக்கம், துயரமெல்லாம் மறைந்து மகிழ்வும் வலிவும் இணைந்து உணர்ச்சிகளில் குழைந்தன.

பூக்கூடையில் மலர் வழிய அவள் தன் வீட்டினுள் சென்று மறைந்தாள்.

யாரும் காணாத காட்சியாய், கருத்தையெல்லாம் ஈர்க்கும் அதிசய எழிலைக் கண்டு விட்ட திகைப்புடன் தன்னுணர்வின்றியே, இரண்டு வீடு தாண்டி, தன் இல்லம் அடைந்தான் ரகு.

வழியெல்லாம் விழியாய்த் தன்னை எதிர் பார்த்து நின்ற லலிதா இத்தனை நேரமும் தன் நடப்பைக் கவனித்து விட்டதைக்கூட உணரும் உணர்வில்லை அவனுக்கு. அவள் முகத்தில் சந்தேகத்தின் ரேகைகள் படிவதும் அவன் கண்ணில் படவில்லை. மனப் புழுக்கத்தைப் புதைத்துக் கொண்டு, நளினமாய்க் கைவளை குலுங்க அவள் வரவேற்றதும் அவன் கவனத்தில் ஏறவில்லை.

மோனத்தின் ஆச்சரியமான மலர்ச்செறிவில் அமிழ்ந்து. தெய்வீக அருட்காட்சியில் மூக்குளித்து மீண்ட பின்னர் அன்று முழுதும் நிலைக்களத்தையே சரியாய்ப் புரிந்துகொள்ள இயலவில்லை.

ஆனந்தச் சுழலின் போதை அது. வேதாந்த ரகசியமே அதுதானோ?

பேச்சோடு பேச்சாக லலிதாவின் மனக் குமுறல் அவன் சொற்களில் நிழல் தட்டியது.

"நீங்கள் திடீரென்று மாறிப்போயிருக்கிறீர்கள்!"

"யார் அப்படி உனக்குச் சொன்னது?"

"நீங்கள் மறைத்தாலும் எனக்குத் தெரிகிறது. காலையில் நீங்கள் வந்ததிலிருந்து ஏதோ போன்று தான் இருக்கிறீர்கள்!"

ரகுவின் கண்களில் நீர் கரந்தது. "நான் இன்று எங்கிருந்தோ மீண்டேன். எனக்கு அதைச் சொல்லத் தெரியவில்லை."

அவள் அவனை நிமிர்ந்து பார்த்தாள். களங்கமில்லாது பிரகாசிக்கும் அவன் முகத்தைக் கண்டதும், அதற்குமேல் அவனை எதுவும் கேட்கத் தோன்றவில்லை.

மாலையில், முற்றத்தில் தூணின் மேல் சாய்ந்தபடி உட்கார்ந்திருந்தான் ரகு. 'டிக் டிக்'கென்று மெட்டியொலி கேட்டுப் பார்வையை உயர்த்தினான். துளசி மாடத்தின் பிறையில், திரியின் சுடர் தட்டி, தீபமேற்றினாள் லலிதா. ஒளிர்ந்த நீக்குச்சியில் முனைத்த தீ மொட்டு தீபத்தின் திரிக்குத் தாவி நலுங்கும் எழிலிலே அறையில் இருள் சிதைந்து செவ்வொளி பாய்ந்தது.

மலர்ந்த ஒளியில், மனத்தின் ஒளி அந்தகார முகத்திரை களைந்து சௌந்தர்ய தேவதையாக ஆக்கிரமித்துக்கொண்டது. அவ்வொளியின் ஜனனியாய்—

ஜனனி!...ஜனனி!...

ரகுவுக்குச் சிறகு விரித்துப் பறக்க வேண்டும் போலிருந்தது. சட்டென்று எழுந்து துண்டைப் போட்டுக் கொண்டு கிளம்பினான்.

வானத்தில் மூட்டம் போட்டு, கரும் பெரும் மேகங்கள் ஓடின. பன்னீர் தெளிப்பதுபோல் ஓரிரு தூறல் உடம்பில் பட்டது.

தெருவின் நடுவே, பூவும் குலையுமாய் வாசலை அடைத்து நிற்கும் வாழை மரங்கள் கொண்ட வீட்டெதிரே நின்றான்.

தன் நினைவு இல்லாமலே, தயக்கமின்றி வீட்டினுள் நுழைந்து, அவளை அணுகினான். ஆனால் அவள் அருகே நிற்க முடியவில்லை.

விழிகளின் கருணையும், கன்னங்களின் கனிவும், மலரதரங்களின் அருளுமாய் அவள் அவனை நோக்கினாள். இதயத்தைத் தாக்கும் அந்த அன்பில் தோய்ந்து, தானாகவே அவன் கரங்கள் குவிந்து அஞ்சலி செய்தன.

'டிக் டிக்' என்ற மெட்டியொலி, தொலைவில் வெட்டவெளியிலிருந்து கிட்டே வந்து அவனைச் சுயநினைவுக்கு இழுத்தன.

"லலிதா!..."

அவள் அவனைத் துருவிப் பார்த்தாள்.

"வாருங்கள், போகலாம்!"

"லலிதா!"

"அப்பாவும் அம்மாவும் பார்ப்பதற்குள் திரும்ப வேண்டும்; வாருங்கள்!"

லலிதாவின் தளிர் விரல்கள் அவன் விரலைப்பற்றி அழைத்தன. அவள் பின்னே அவன் நடந்தான். கர்ப்பக்கிருகத்தில் நின்றவாறு தேவதேவியாய் ஜனனி தன்னையும் லலிதாவையும் ஆசி கூறி அனுப்புவது போலிருந்தது அவனுக்கு.

பின்னர் கனவு மயக்கத்தில் ரகுவுக்கு மாலை சென்றதும் தெரியாது, இரவு படர்ந்ததும் தெரியாது. முற்றத்திலிருந்து பார்க்கையில் வானத்தில் மூட்டம் பிரிந்து, பால் வெள்ளமாய்ப் பொன் நிலவு மொட்டை மாடியில் பொழிந்து கொண்டிருந்தது மட்டும் சட்டென்று தெரிந்தது. இயற்கை தன்மையாய் அவனை வாவென்று அழைப்பது போல் தோன்றியது.

தடதடவென்று படியேறி மாடியை வந்தடைந்தான் ரகு.

அங்கே, வெற்றுத் தரையில், மடித்த கைகளில் முகத்தைப் புதைத்துக் கொண்டு லலிதா விசும்பியபடி தன்னந்தனியாய்ப் படுத்திருப்பது நெஞ்சை முட்களாய்த் தைத்தது. மண்டியிட்டு அவள் முகத்தருகே குனிந்தான்.

"லலிதா!"

அவன் குரலின் ஆதரவு அவளுடைய இதயத்தைத் தொட்டிருக்க வேண்டும். அவள் கொடிக்கரங்கள் அவன் கழுத்து வளையில் படர்ந்து தழுவின. தன்னை அவன் மார்பில் அழுத்திக்கொண்டு கேவினாள். அவன் கைகள் அவள் தோள்களையும் முதுகையும் பட்சமாய் வருடிக்கொண்டிருந்தன.

ரூ 125 லட்சம்
செலவில்
தயாரிக்கப்பட்ட
# பிரமாண்டமான
திரைப் படம்

திலீப் குமார் ☆ மதுபாலா ☆
பிருத்விராஜ் கபூர் ☆ துர்கா கோட்டே
நடித்தது



# அக்பர்
(மொகலே ஆஜம் - தமிழ்)

சங்கீதம்: நௌஷாத்

இதைப் போன்ற படம்
இதுவரை வெளிவந்ததில்லை...
இனி வரப் போவதுமில்லை

**மார்ச் 3உ**
தமிழ்நாடெங்கும் வெளிவருகிறது...

ஜெமினி ரிலீஸ்

இப்படத்தின் இனிய பாட்டுகளை H M V ரிகார்டுகளில் கேளுங்கள்



"லலிதா!"

"ஊம்!"

"அழுகிறாயே இப்படி, நீ என்ன அசடா?"

"நான் அசடாகி விடுவேனோ என்றுதான் பயப்படுகிறேன்."

"அவசியமில்லை, லலிதா! அவள் தெய்வம்! தெய்வத்துக்குத்தான் அந்த அழகுண்டு!"

லலிதா அவசரமாய் அவன் வாயைப் பொத்தினாள்.

"அப்படிச் சொல்லாதீர்கள். பாபம் வந்து சேரும். தெய்வமாவது தெய்வம் — எனக்குத் தெரியும், அவள் பெண்ணே இல்லை. மோகினிப் பிசாசு."

"லலிதா!"

"குழந்தை போல உங்கள் மனசு கோழை மனசு! அதனால்தான் இந்த எண்ணமெல்லாம் பிரமாதமாய் வருகிறது! ஆனால் ஊரில் அவள் பெயர் சொல்லக்கூடக் கூசுகிறார்கள். அவளுக்கு மான வெட்கம் எதுவுமில்லை. பணப்பேராசை பிடித்தவள். அவள்—அவள்—அவள் ஒரு—"

அவன் துள்ளித் துடித்து அவள் மேல் விழுந்தான்.

"லலிதா!"

"அவளால் அழிந்தவர்கள் எத்தனையோ!"

"போதும், லலிதா, போதும்!"

லலிதா இன்னும் நிறுத்தவில்லை. "நீங்கள் என்னை இன்று என்ன அடக்கினாலும் நான் கேட்கப் போவதில்லை. உங்களை அவளிடம் இழந்துவிட்டு என்னால் தவிக்க முடியாது."

"என்ன லலிதா, உனக்குப் பைத்தியமா பிடித்து விட்டது!"

"பைத்தியந்தான் எனக்கு! தெய்வ சாட்சியாய்ச் சத்தியம் செய்து கொடுங்கள், அவள் வீட்டு வாசல் வழிகூட இனிமேல் போகவில்லை என்று!"

ரோஜா இதழாய்ச் செவ்வண்ணம் வழியும் தன் உள்ளங்கையை ரகுவின் முன் நீட்டினாள் லலிதா. "சத்தியம் செய்து கொடுங்கள்!"

அவள் தயக்கம் அவன் நெஞ்சில் புயலாய்த் தோன்றி, தொண்டையை அடைத்துக் கொண்டு அழுகையாய் எழுந்தது.

"அழாதே, லலிதா, அழாதே! நீ அழுதால் என்னால் தாங்க முடியவில்லை! என்னை நிச்சயமாய் நம்பு! இனிமேல் சத்தியமாய் நான் அந்த வீட்டு வாசலுக்குக் கூடப் போகவில்லை" என்று தேற்றினான்.

புதுநிறைவில் அவள் இதழ்கள் கண்ணிமைகளின் மேல் உதிர்ந்து பனித்தன. அன்பினால், அரவணைப்பால், கெஞ்சலால் அவனை வென்று 'தன்னுடையவன் மட்டுமே' என்றாக்கிக் கொண்டுவிட்ட கர்வச் செருக்கு மிளிர்ந்தது. அத்துடனே நிம்மதியாய் அவன் மடியில் தூங்கிவிட்டாள்.

பேதை லலிதா! நேரே போய்ப் பார்த்தால் தான் பார்த்ததா? கண்ணுக்குள் கண்ணாய்க் கண்டால் போதாதா? நெஞ்சுக்குள் நெஞ்சாய் வைத்துப் போற்றினால் போதாதா?

அவளுடைய எழிலில் எத்தனை மாசு கலந்தாலும், எத்தனை தீமை சேர்ந்தாலும் அத்தனையும் அக்கணமே ஜுவாலையாகும் - வேள்வித் தீயில் ஊற்றிய நெய்த் தோய்வாய்! சிறுமையும் பெருமையும் அவளின் படைப்புகள்; சிறுமையும் பெருமையும் அவளுக்கில்லை. தெய்வமும் அவளும் வேறல்ல. ஜனனியின் மகத்தான தோற்றத்தின் அரவிந்தங்களிலே மனம் லயிக்க, அவனும் உறக்கத்தில் அழுந்திப் போனான்.

மறுநாள் காலையில் கண் விழித்ததும், தன் கழுத்தைச் சுற்றிய லலிதாவின் கைகள் தழலாய்த் தகிப்பது கண்டு துடித்து எழுந்தான் ரகு.

"லலிதா! லலிதா!..."

பதிலில்லை. சுயநினைவு தவறி நெடுநேரம் ஆகியிருக்க வேண்டும். அவன் பதற்றத்தில் தடுமாறினான்.

டாக்டர் வந்து லலிதாவைப் பரிசோதனை செய்தார். ஏதோ மருந்து தந்தார். இந்தப் புது விஷ ஜுரம் ஊரெங்கும் பரவியிருப்பதாகக் கூறினார். மாலையில் மறுபடியும் வருவதாகக் கூறினார். லலிதாவின் அப்போதைய நிலையைப் பற்றி மட்டும் எதுவும் சொல்லாமலே போய் விட்டார்.

நேரம் செல்லச் செல்ல லலிதாவின் நிலையும் மோசமாகிக் கொண்டு வந்தது. ஜன்னி எல்லை மீறிப் பிதற்றலும், பிடுங்கலும் தோன்றி விட்டன.

"என்னை யாரோ கூப்பிடுகிறார்கள்! எங்கிருந்தோ கூப்பிடுகிறார்கள்! நான் போகிறேன்!" யார் கூப்பிடுகிறார்கள்? எங்கிருந்து கூப்பிடுகிறார்கள்?

"லலிதா...லலிதா..."

நேற்றிரவு வரையில் நன்றாய் இருந்தவள் இப்போது கசங்கிய பூவாய், மஞ்சத்தில் கிடக்கும் வேதனைதான் என்ன? பிழைப்பாளா; அவள் இருப்பாளா?

நேற்று ஜனனியைப் பற்றிக் குற்றம் கூறியதால் வந்த வினையா இது? தெய்வத்திடம் ஆயிரம் குறை இருக்கலாம். அதைச் சொல்ல நாம் யார்? தெய்வ சாபத்தை நம்மால் தாங்க முடியுமா?

அருள் கொண்டு தெய்வந்தான் இப்போது லலிதாவைக் காப்பாற்ற வேண்டும்.

மாலையில் வந்து பரிசோதனை செய்த டாக்டரும் அதைத்தான் சொன்னார்.

"தெய்வத்தை வேண்டிக் கொள்ளுங்கள். கனவில்கூட நடக்க முடியாத எத்தனையோ அதிசயங்கள் கண்ணெதிரே தெய்வ அருளால் நடக்கின்றன. என் கையில் இனி ஏதுமில்லை."

ஓடிப் போய், பூவும் குலையுமாக வாசலை அடைத்து நிற்கும் வாழை மரங்கள் கொண்ட வீட்டினுள் நுழைந்து, அவள் கால்களில் சரிந்து, அவனுடைய அன்பு லலிதாவை அவனிடமே திருப்பித் தந்து விடுமாறு கெஞ்சிக் கதற நெஞ்சம் துடித்தது. மாடியை விட்டு எழுந்த நடையைச் சத்தியம் தடுத்தது.

'என் லலிதாவின் உயிரோடு விளையாடாதே. என் செல்வமெல்லாம் அவள் தான்! என் அன்பெல்லாம் அவள்தான்.'

கைகூப்பி, வானவெளியின் இருள் நீல வண்ணத்துக்கு அஞ்சலி செய்தான் ரகு. ஆலயத்துக்குச் சென்றால்தான் தெய்வமா? அல்லது, ஜனனியின் எதிரே நின்றால்தான் தெய்வமா? வெட்ட வெளியில், விளங்காத சூன்யத்தில், மேன்மையில், தாழ்வில், எங்கெங்கும் இல்லையா அந்தத் தெய்வம்?

தொடுவானத்தின் அடிவாரத்துக்கு ஒரு கீதம் எழுந்து, வானத்தின் அந்தரத்தில் காற்றலையாய் மூலைக்கு மூலை தாவி, இறுதியில் அவன் ஜீவனின் அந்தரத்தோடு இழைந்து கலந்தது.

தூக்கி வாரிப்போட்டு எழுந்தான் ரகு. திடீரென்று மாடியின் தனிமை பயங்கரமாய்த் தோன்றியது. கீழே இறங்கி வந்ததும் அவனுக்கு ஆச்சரியம் காத்திருந்தது.

ஜன்னி தெளிந்து, முகம் மலர்ந்து, லலிதாவின் கண்ணிமைகள் பிரிந்து கொடுத்தன. புரியாத உணர்வில் வாயடைத்துப் போய் நின்றான் ரகு.

ஜனனி! தெய்வந்தான் அவள்! தெய்வமும் அவளும் வேறல்ல!....

விடிந்ததும் விடியாததுமாய் வேவு பார்க்க வருவது போல் தயங்கித் தயங்கி அடிவைத்து நுழைந்த டாக்டரைக் கட்டிலின்மேல் அமர்ந்த நிலையில் லலிதாவே வரவேற்றாள்.

"தெய்வந்தான் எங்கள் லலிதாவைக் காப்பாற்றியது, டாக்டர்!..." மகிழ்வோடு லலிதாவின் தாயும் தந்தையும் தெரிவித்தனர்.

"இல்லை, ஜனனிதான் லலிதாவைக் காப்பாற்றினாள்!..." என்று அலற வேண்டுமென்றிருந்தது ரகுவுக்கு. ஆனால் நா எழவில்லை.

"நீங்கள் அதிருஷ்டசாலி!..." டாக்டர் அமைதியாய்க் கூறினார்.

அவருடைய இப்போதைய அமைதி தன்னுள் புயலையும், இடியையும் உள்ளடக்கிக் கொண்டிருப்பது போல் ரகுவுக்குத் தோன்றியது. ஏதோ செய்தியை எதிர்பார்த்து இமைக்காமல் அவரையே பார்த்து நின்றான்.

"இந்த ஜுரம் வந்து பிழைத்தவர்கள் மிகவும் குறைவு!"

"....."

"இரண்டு வீடு தள்ளி அடுத்த வீட்டில் ஜனனி என்று ஒரு பெண்ணிருந்தாளே, அவளுக்கும் இதே ஜுரம், இதே போன்று! திடீரென்று மாலை ஆறு மணிக்கு வந்தது. இரவு ஒரு மணிக்குள் தவறி விட்டாளாம்!..."

லலிதா மீண்டு வந்த அதே நேரத்தில் ஜனனி போயிருக்கிறாள். தொடுவானத்தில் எழுந்து அவன் நெஞ்சில் கலந்த கீதம் ஜனனிதானா?

ரகுவுக்குப் புது வெளிச்சம் உண்டாயிற்று. அதிராமல் நின்ற நிலையில் அவன் ஒரு காட்சி கண்டான். லலிதாவின் உயிர்ப் பிச்சை கேட்டு அவள் காலடியில் அவன் கதறுவதும், விழிகளில் கருணையும் கன்னங்களில் கனிவும் கொண்டு தெய்வமாய் அவள் மறைந்து போவதும் தெரிகிறது.

அவன் கண்கள் நிறைந்தன. அவள் ஜீவன் இசைத்த மெல்லிய குழலோசை அவன் இதய ஜோதியை ஜனனிக்காக ஏற்றி வைத்தது.

பிறப்புக்கும் இறப்புக்கும் காரணமாய், பிறப்பும் இறப்பும் தானாகிய தெய்வத்தின் எழில் வடிவத்துக்குப் பிறப்பேது? இறப்பேது? அவதாரத்தின் நோக்கம் நிறைவேறியதும் மறைவது சங்கமம்தானே!

ஜனனியின் சங்கமம் தெய்வத்தின் சங்கமம்!

உலகத்தின் ஒளி உயர்வாய், இறைவின் எழில் வடிவாய்த் தோன்றி, அருளில் மேன்மையும், வாழ்வில் தாழ்மையுமாய் நின்று, மேன்மையும் தாழ்மையும் தவக்கல்ல என்று அவள் தெரிவித்ததைத் தெரிந்து கொண்டவர்கள் எத்தனை பேர்கள்? குழலின் கீதத்தில் எச்சில் வராததுபோல் உயிரின் தூய்மையில் வாழ்வின் தாழ்மை கலக்கவில்லை என்று தெளிந்தவர் எத்தனை பேர்கள்! ஒளிகளின் எழிலெல்லாம் இறைவனின் அழகு என்று கண்டவர்தான் எத்தனை பேர்கள்!

யார் எது சொன்னால் என்ன? எப்படிப் புரிந்து கொண்டால் என்ன? ஜனனியின் ஒளிக் கொடியான புன்னகையில் தானே ஒளியாகி, ஒளியின் உள்ளொளியெல்லாம் புரிந்து கொண்டு விட்ட பின் தெளிந்து விட்டவன் ரகு.

ஜனனி!

தெய்வந்தான் அவள்! தெய்வமும் அவளும் வேறல்ல!

# பாரதம் கண்ட பரங்கியர் பெருங்குடி

'சுவாதி'

1857-ம் வருஷத்திய விக்டோரியா மகாராணியின் பிரகடனத்திலிருந்து 1947-ம் வருஷத்திய இந்திய சுதந்திரச் சட்டம் வரையில் இந்திய சர்க்காரின் பொறுப்புக்கள் யாவும் பிரிட்டிஷ் மகுடத்தின் பெயரிலேயே ஆற்றப்பட்டு வந்தன. வைஸ்ராயின் பதவி விசுவாசப் பிரமாணத்திலிருந்து ஜாலியன்வாலா பாக் படுகொலை வரை சகலமும் பிரிட்டிஷ் மன்னர் பெயரிலேயே நடைபெற்று வந்தன. எனினும் இந்த நடவடிக்கைகள் இந்திய மக்கள் மீது எத்தகைய விளைவுகளை ஏற்படுத்தின என்பது பற்றி அந்த பிரிட்டிஷ் மன்னருக்கு அநேகமாக ஏதுமே தெரியாது

ஆண்டுதோறும் மகாராஜாக்களையும், நவாபுகளையும் மட்டுமேதான் அவர் சந்தித்து வந்ததெல்லாம். இவர்கள் யாவரும் பிரிட்டனின் நல்லெண்ணத்தையே முற்றிலும் நம்பி வாழ்ந்ததைப் பற்றித்தாம் 'வருத்தமும், அநுதாபமும் சேர்ந்த கலப்பு உணர்ச்சியை'ப் பெற்றிருப்பதாக விக்டோரியா மகாராணி எழுதியிருக்கிறார்.

பட்டத்து இளவரசுகள் என்ற முறையில் கோமக்கள் இந்தியாவுக்கு விஜயங்கள் செய்ததும் உண்டு. அப்போதும் பிரிட்டிஷ் ஆட்சியின் அடியாட்களும் வால்பிடிப்பவர்களுமே 'வியூகம்' வகுத்து 'அமோக நல்வரவு'கள் நல்கி, பொது மக்களைப் பற்றி அந்த மன்னர் குலத் தோன்றல்கள் ஏதுமறியாதபடி செய்து விடுவது வழக்கம். எனினும் கூட 1875-ம் ஆண்டு, பிரிட்டிஷ் ராஜ வம்சத்திலிருந்து முதன் முதலாக ஏழாவது எட்வர்ட் விஜயம் செய்தபோது, பயபக்தியுடன் வரவேற்ற இந்திய மக்களுக்கும், 1922-ம் ஆண்டில் அவரது பேரர் எட்டாவது எட்வர்ட் வந்தபோது அவரைப் பகிஷ்கரித்த நிரப் பிரஜைகளுக்கும் உள்ள பெரும் வித்தியாசம், யாருக்கும் தெற்றெனப் புலனாகியிருக்கக் கூடியதேயாகும்.

1875-ம் ஆண்டில் விக்டோரியா மகாராணி தமது பிள்ளையாகிய வேல்ஸ் இளவரசரை (பின்னர் ஏழாவது எட்வர்டு மன்னரானவர்) இந்தியாவுக்கு அனுப்பி வைத்தார். சிப்பாய்க் கலகம் என்று பிரிட்டிஷார் நாமகரணமிட்டுள்ள முதல் சுதந்திரப் போரின் தழும்புகள் அப்போதும் குணமானபாடில்லை. எனினும், தேசிய உணர்ச்சியைத் திரட்டிய இந்திய தேசிய காங்கிரஸ் அமைக்கப்பட்டது இதற்கு இருபதாண்டுகளுக்குப் பின்னர் தான். ஆகவே வேல்ஸ் இளவரசர் சந்திக்கக் கூடியதெல்லாம் நவரத்தின கசிதமான அங்கிகளும், வைரம் வைத் திழைத்த வாட்களும் அணிந்திருந்த ஆட்சித் தலைவர்களை மட்டும்தான்.

ராஜகுமாரருக்கு அவர்கள் அளித்த மகோன்னதமான வரவேற்புகளுக்கு அழகு செய்த பாவட்டாக்களின் வாசகங்கள் பிரிட்டிஷ் மகுடத்தின்பால் இந்தியப் பிரஜைகள் கொண்டிருந்த 'ராஜ விசுவாச'த்தைப் பறைசாற்றின! ராஜகுமாரருடைய மாட்சிமை தங்கிய தந்தையாரின் நலனைப் பற்றி விசாரித்தன; தங்களை, மகிமை பொருந்திய அவரது மாதாவுக்கு நினைப்பூட்டி, தாங்கள் மகிழ்ச்சியுடன் இருப்பதாகத் தெரிவிக்குமாறு இளவரசைக் கேட்டுக் கொண்டன. உணர்ச்சி மிக்க வங்காளம் மட்டுமே இதற்கு விதிவிலக்கு. அங்கு மன்னர் மகனுக்கு மரியாதை செலுத்திய சீமான்களை ஏளனம் செய்து நாடகங்கள்கூட நடைபெற்றன.

• • •

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐந்தாம் ஆண்டு. அப்போதைய பட்டத்து வாரிசு பின்னர் ஐந்தாம் ஜார்ஜ் அரசராவதற்கு இருந்தவர். அவர் இந்தியாவுக்கு விஜயம் செய்தபோது இந்திய அரசியல் வானில் வைகறை புலர்ந்திருந்தது. ஐரோப்பிய இனத்தை யாருமே வெற்றி காண முடியாது என்ற 'கதை'யை ஜப்பான் தன்னுடைய ரஷ்ய வெற்றி மூலம் பொய்யாக்கி விட்டது. சுவாமி விவேகானந்தர் போன்ற ஜீவ சக்தி வாய்ந்த புருஷர்கள் சுதந்திரத் தீவர்த்தியைத் தூண்டி விட்டிருந்தார்கள். இந்திய தேசிய காங்கிரசும், ஆரம்பத்திலிருந்தது போல் 'ராஜ விசுவாசப் பிரஜை'களின் சங்கமாக இல்லை. அந்த ஆண்டுதான் ஸ்ரீ கோபால கிருஷ்ண கோகலே நாட்டின் ஆட்சியில் இந்தியர்களும் பங்குபெற வேண்டுமென வற்புறுத்தி யிருந்தார்.

பம்பாய் வந்திறங்கிய கோமகன் நாடு முழுதும் விஜயம் செய்தார். சமஸ்தானாதிபதிகளும், மாகாண கவர்னர்களுமாகப் பிரமாதமான வரவேற்புகள்

அளித்தனர். மத்திய இந்தியாவில் நடைபெற்ற ஒரு விருந்துபசாரத்தில் இந்திய தேசிய காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ கோகலேயும் பிரசன்னமாகி இருந்தார். மன்னர் மகனுக்கும் அவருக்கும் சந்திப்பு நிகழ்ந்தது.

"காசி காங்கிரஸ் கூட்டத்தில் நீங்கள் நிகழ்த்திய உரையைப் படித்துப் பார்த்தேன். நிர்வாகத்தில் இந்தியர்கள் இன்னும் அதிகமாகப் பங்கு பெறுவாரானால் இந்தியாவுக்கு நல்லதாக இருக்கும் என்று சொல்லி யிருக்கிறீர்கள். நானும் சில மாதங்களாக இந்தியாவில் சுற்றுப் பயணம் செய்து வருகிறேன்; ஏராளமான மக்கட் கூட்டத்தைப் பார்த்து வருகிறேன்; அவர்களைவிட மகிழ்ச்சியாகத் தோன்றும் மக்களை நான் எங்குமே கண்டதில்லை.....சரி, மிஸ்டர் கோகலே, நீங்களே சொல்லுங்கள்! நீங்கள் ஆட்சி நடத்தினால் இதைவிட அவர்கள் மகிழ்ச்சியாக இருப்பார்களா?" என்று கோகலேயை இளவரசர் கேட்டார்.

"அவர்கள் மேலும் மகிழ்ச்சியாக இருப்பார்கள் என்று நான் சொல்லவில்லை. ஆனால் அவர்களுக்கு மேலும் சுயமரியாதை இருக்கும்" என்று இதற்கு ஸ்ரீ கோகலே விடை பகர்ந்தார்.

தம் விஜயத்தை ஒட்டி ஏற்பாடாகியிருந்த பிரும்மாண்டமான வரவேற்பைக் கண்டு பாமர மக்கள் அடைந்திருந்த பரபரப்பைத்தான் அந்த அரசகுமாரர் வேறுவிதமாக, தவருக, மதிப்பிட்டு விட்டார். என்ருலும்கூட, எதிர்காலத்தை சூசனை செய்யும் மெல்லிய குமுறல்களை அப்போதே இளவரசர் ஓரளவுக்குக் கேட்டுத் தானிருந்திருக்கிருரென்பது அவருடைய ஒரு குறிப்பிலிருந்து காணக் கிடைக்கிறது. இந்திய தேசிய காங்கிரஸின் செல்வாக்கு பெருகி வருகிறதென்பதை அவர் உணர்ந்திருந்தார் என்பதை அக் குறிப்பு தெரிவிக்கிறது. 'தப்பபிப்பிராயங்களைப் பரப்புவதில் அதற்குள்ள ஆற்றலானது அறியாத மக்களின் மீது' பொருத்த விளைவுகளை உண்டாக்கக் கூடும் என்றும் அவர் கண்டிருக்கிருர்.

அவரே பின்னர் சக்கரவர்த்தியான பிறகும் இந்தியாவுக்கு விஜயம் செய்தார். அதை யொட்டி இந்தியாவுக்கு ஒரு கோடி ரூபாய் அன்பளிப்பு வழங்க வேண்டுமென அவர் விரும்பினர். எனினும் மந்திரி சபை மறுதளித்து விட்டது. அவரது விஜயம் முக்கியத்துவம் பெறுவதற்காக அவர் இரண்டு அறிவிப்புகள் செய்தாலே போதுமென்று அது முடிவு செய்தது. இந்தியாவின் தலைநகரைப் புது டில்லிக்கு மாற்றுவது, வங்காளப் பிரிவினையை ரத்து செய்வது ஆகியவற்றைப் பற்றியே இவ் வறிவிப்புக்கள்.

* * *

மேலும் பத்தாண்டுகள் உருண்டன. பட்டத்து இளவரசரான எதிர்காலத்து எட்டாம் எட்வர்டு மன்னரை இந்தியா செல்லுமாறு மந்திரி சபை கேட்டுக் கொண்டது. இப்போது நாட்டின் அரசியல் நிலை முற்றிலும் மாறிவிட்டது. முதல் உலக மகாயுத்தம், ஜாலியன் வாலாபாக் படுகொலை இவற்றுக்குப் பின்னரும் இந்தியாவுக்கு சுயாட்சி அளிக்கப் பிரிட்டன் முன் வராததால் தேசமே மகாத்மா காந்தியின் கீழ் ஒன்று திரண்டு இளவரசர் விஜயத்தைப் பகிஷ்கரிப்பதென முடிவு செய்தது.

"என் விஜயத்தைக் காந்தி எதிர்ப்பது பல பிரச்னைகளைக் கிளப்பும் என்று இங்கிலாந்திலிருந்தபோதே நான் சிந்தை கொண்டிருந்தேன்" என்று இளவரசர் தமது ஞாபகக் குறிப்புகளில் வெளிப்படையாகச் சொல்லியிருக்கிருர்.

பம்பாயில் வந்திறங்கிய பட்டத்து வாரிசை எப்போதும் போலவே மன்னர்களும், அதிகாரிகளும், இச்சகம் பாடுவோரும் பிரமாதமான முறையில் வரவேற்றனர். உதயப்பூரில் அவரை உபசரித்த மகாராணு பகிஷ்கரிப்பு நடத்திய

## தொழில் யுகத்தில் நல்ல காலம்

'காலமறிந்து செய்நகுதன் உலகத்தை விடக் கூடப் பெரிது' என்கிறது குறள். அப்படியானல் அந்தக் காலத்தையே அறிவதற்குச் செய்யும் உதவி எவ்வளவு பெரிதாகும்? இந்த உதவியைத்தான் செய்ய முன்வந்திருக்கிறது பிரெஞ்சுக் கூட்டுழைப்பில் பம்பாய் போனிக்ஸ் கம்பெனியார் அடுத்த மாதத்தில் தொடங்கவிருக்கும் இந்தோ—பிரெஞ்சு வாட்சுக் கம்பெனி. பம்பாயின் புறநகராகிய கோரேகானில் இந்தக் கைக்கடிகார உற்பத்திசாலை நிறுவப்படும். முதலீட்டில் இருநாடுகளுக்கும் சம பங்கு. இயந்திரம், தொழிலறிவு எல்லாம் பிரான்ஸ் அளிக்கிறது. இந்தியாவிலேயே கடிகாரம் உற்பத்தி செய்வதற்காகச் சர்க்கார் அங்கீகாரம் அளித்த முதல் தொழிற்சாலை இது. அதுவும் அனுபவம் வாய்ந்த தனியார் துறையிலேயே அமையப் போவது என்பது பெருமைக்குரிய விஷயமல்லவா?

காங்கிரஸையும் கண்டித்தார் ; தாம் என்றுமே ஆங்கிலேயரின் நண்பர்தான் என்று ஊர்ஜிதம் செய்து கொண்டார். எனினும் க்ஷத்திரிய வகுப்பைச் சேர்ந்த அவர் தம்முடன் சமபந்தி போஜனம் செய்ய முன் வராததையும் அந்த பிரிட்டிஷ் கோமகன் கவனியாது போகவில்லை.

அலகாபாத்தில் பண்டித ஜவாஹர் லால் நேருவைச் சிறைப் படுத்தியிருக்கிறார்கள், இல்லாவிடில் அவர் மன்னர் மகன் பயணத்தின் போது 'விசுவாசப் பிரஜைகளுக்கு இன்னல் உண்டாக்கக் கூடும்' என்பதாக. ஆனால் கோமகனே, இவ்வாறு கைது செய்ததே பகிஷ்கா ரத்தை வலுப்படுத்தி விட்டது என்று பின்பு சொல்லியிருக்கிறார். பட்டணப் பிரவேசமும், சாலைசாலையாகப் பவனியும் நடைபெறுகிறது அலகாபாத்தில். அந்த ஊர்வலத்தின் போதுதான் எத்தனை எத்தனை அடைத்த கதவுகளும் சாத்திய சாளரங்களும் 'வரவேற்பு' அளித்தன, தெரியுமா? கடைசியாக அரசருக்கு எழுதினார் பின்னே, இந்திய மக்கள் காட்டும் வெறுப்பு தம் ஊக்கத்தை எல்லாம் பறித்து விட்டதாக. எல்லா உபத்திரவமும் இந்தக் காந்தியால்தான் என்று அரசர்பிரானும் தம் கருத்தைத் தெரிவித்தார். எனினும் புதல்வருக்குத் தைரிய மூட்டினார். "1857-ம் வருஷத்திய கலகம் மீண்டும் நடக்காது. ஏனென்றால் சுதேச மன்னர்களும் அவர்கள் ராணுவமும் கட்டுக்கோப்பாக நம் பின்னர் உள்ளன" என்று எழுதினார்.

என்றாலும் சம்பவங்கள் துரித கதியில் நடந்தன. உப்பு சத்தியாக்கிரகம், வட்ட மேஜை மகாநாடு இப்படி. ஐந்தாம் ஜார்ஜ் காலமானார். எட்டாவது எட்வர்டு சிறிதுகால ஆட்சிக்குப் பின் மகுடத்தைத் துறந்தார். ஆறாம் ஜார்ஜ் மன்னர் இந்தியச் சக்கரவர்த்தியானார். காங்கிரஸ் சொல்லைக் கேட்டு 'தப்பு வழி' செல்லும் இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையேதான் மாறுபாடுகள் இருந்தனவே தவிர, மற்றபடி ராஜ விசுவாசமுள்ள இந்திய சம்ஸ்தானாதிபதிகளின் கீழ் இந்தியா அடங்கி யிருப்பதாகவே ஆறாம் ஜார்ஜ் கருதி வந்தார் என்பது அவரது நாட் குறிப்புக்களிலிருந்து தெரிய வருகிறது.

1942ம் ஆண்டு மார்ச்சு மாதம் கூட அவர் எழுதினார் : "இன்னமும் ஏராளமான இந்தியர்கள் என்னைத் தங்கள் சக்கரவர்த்தியாகக் கருதி விசுவாசம் செலுத்தவே விரும்புகின்றனர்" என்று. ஆனால் விதி வேறு விதமாக இருந்தது. இதே ஆறாம் ஜார்ஜின் ஆட்சிக் காலத்திலேயே பாரத நாடானது பிரிட்டிஷ் மகா சாம்ராஜ்யத்திலிருந்து வெளியேறிற்று. பிரிட்டனின் முடியாட்சிக் கடங்கிய 'இந்திய சாம்ராஜ்யம்' எடுபட்டுப் போயிற்று. இதையொட்டி இந்தியச் சக்கரவர்த்தி என்ற பிரிட்டிஷ் மன்னரின் விருதையும் நீக்க வேண்டியதாயிற்று. பிரிட்டிஷ் ஆட்சிக்குட்பட்ட எல்லா டொமினியன்களும் அங்கீகாரம் அளிக்கும் வரையிலாவது இந்த விருதை ஆண்டு அனுபவிக்கலாமே என்று ஆறாம் ஜார்ஜ் மன்னருக்குக் கொள்ளை ஆசை. ஆனால் பிரதமர் ஆட்லியோ மகா பிடிவாதக்காரர். 1947-ம் ஆண்டு ஆகஸ்டு பதினைந்தாம் தேதியன்றே இந்த விருதுக்கும் சீட்டுக் கிழித்து விட்டார் அவர்.

"இந்தியச் சக்கரவர்த்தி என்பதைக் குறிக்கும் I என்ற எழுத்து இல்லாமல் பெர்டீ (ஆறாம் ஜார்ஜ்)- எனக்கு முதன் முதலாகக் கடிதம் எழுதியபோது துயரமுற்றேன்" என்று. அவரது 18-8-47 ந் தேதி கடிதத்தைக் கண்ட பெரிய ராணி மேரி சொல்லியிருக்கிறார். பெண்ணுள்ளம், பாவம்!

1911-ம் வருஷம் டில்லியில் நடைபெற்ற தர்பாரின்போது, எட்டு லட்ச ரூபாய் செலவில் செய்து சூட்டிய இந்திய மணிமகுடம் மட்டுமே பிரிட்டிஷ் மன்னருக்குத் 'தக்கிறது'. இந்தியாவும், பாகிஸ்தானும் காமன்வெல்த்தில் உள்ள மட்டும் அது ஒன்று மட்டுமே அவர்கள் செலுத்திய ஆட்சிக்கு ஓர் அடையாளமாக ஆங்கில அரசின் வசத்தில் இருந்து வரும்.

வேறொரு ஞாபகார்த்தத்தையும் ஆறாம் ஜார்ஜ் மன்னர் கேட்டுப் பெற்றார். அதுதான் 1857 ம் ஆண்டிலிருந்து லட்சுமணபுரி ரெஸிடென்ஸியில் பறந்து வந்த யூனியன் ஜாக் கொடியாகும் !

சுதந்திரத்துக்குப் பின்னரும் பாரதத்தைக் காமன்வெல்த் நாடாகப் பெற்றிருப்பதும் ஓரளவுக்கு ஆறாம் ஜார்ஜ் மன்னரின் தனிப்பட்ட யோசனையின் பேரில்தான். 1949-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் மன்னரின் இந்த யோசனைக்கு நன்றிதெரிவிப்பதற்காக பிரதமர் நேருஜி பக்கிங்ஹாம் அரண்மனைக்குச் சென்றார்.

"எனக்கு நன்றி செலுத்தாதீர்கள்" என்று கூறிய ஜார்ஜ் மன்னர் பெருத்த மனவெழுச்சியுடன் தொடர்ந்தார்: "சர்வ சக்தனான ஆண்டவன்தான் உங்களுக்கு வழிகாட்டி யிருக்கிறான் என்று நம்புகிறேன். அவனுக்குத்தான் நம் யாவருடைய நன்றியும் உரித்தாகும்."



## உங்கள் கேசத்திற்கும் தலைக்கும் ஆரோக்கியத்தையும் போஷாக்கையும் அளியுங்கள்!

கால்கேட் ஹேர் டானிக் லெனோலின் என்ற ஓர் அற்புதமான எண்ணெயுடன் சேர்த்துத் தயாரிக்கப்பட்டது. இது தலையில் இயற்கையாக உண்டாகும் எண்ணெய்களை வற்றாது புதுப்பித்து... கேசத்தை ஆரோக்கியத்துடனும், சேர்த்தியாகவும் இருக்க உதவுகிறது.






## புதிய கால்கேட் ஹேர் டானிக்

*லெனோலின் கலந்தது*

---

ஆழமான அல்லது ஆழமில்லாத கிணற்றுக்கு

# Myers or Wasp

மையர்ஸ் அல்லது வாஸ்ப்

**தானே இயங்கும் எலக்ட்ரிக் பம்புகள்**

விற்பனை, ஸ்பேர்கள்
திருப்திகரமான சேவை:

**வாட்டர் சப்ளை ஸ்பெஷலிஸ்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்**

தபால் பெட்டி 1707
45, தம்பு செட்டித் தெரு
சென்னை - 1

பம்புகள் அமைப்பதில் 80 ஆண்டுகளுக்கு மேல் அனுபவமுள்ளவர்கள்





## 15 இது என்ன அநுதாபமா ?

# மணிபல்லவம்

**நா. பார்த்தசாரதி**

கலியிருள் அகலக் காவிரியணைந்த மாபெரும் நகர்க்குப்பொலிகதிர் பரப்பிப் பகல் செய்த கதிரவன் மெல்ல மெல்ல மேற்கே மறைந்து கொண்டிருந்தான். விரிநீல மணித் திரையில் விட்டெறிந்த ஒளி மலர்களென விண்மீன்கள் மின்னத் தொடங்கியிருந்தன. திசைமுகங்கள் பசந்து மங்கிய நிறம் பூசிக் கொள்ளலாயின. அகன்ற வான் வெளியில் சந்திரன் அணிநிலா விரித்தான். பொழுதும் பருவமும், காலம் கற்பிக்கும், இயற்கையெழில்களும் எல்லா இடத்திலும் அழகு தருவனவாக இருப்பினும் பூம்புகார் நகரைச் சார்ந்து வரும்போது பன்மடங்கு பேரழகு தருவனவாக இருந்தன. இயற்கை நிகழ்ச்சிகள் தாம் நிகழுமிடத்தைப் பொறுத்தே அழகு பெறுகின்றன. கதிரவன் உதயம் கடற்கரையிற் பேரழகு. தென்றல் சோலைகளின் நடுவே வீசும்போது பேரழகு. அருவி மலைமுகடுகளில் இறங்கும்போது பேரழகு.— என்று சார்ந்த இடம், சூழ்நிலை ஆகியவற்றால் அழகு பேரழகாவது போல் தன்னைச் சார்ந்து நிகழும் யாவற்றையும் பேரழகாக்கிக் காட்டும் பெரும் பேரழகை முதலீடாகக் கொண்டது பூம்புகார் நகரம்.

வளம் மலிந்த அந் நகரத்தில் காலையும் அழகு, மாலையும் அழகு, நண்பகலும் அழகு, இரவும் அழகுதான். நேரத்துக்கு நேரம் விதம் விதமாக அலங்கரித்துக் கொண்டு நிற்கும் வனப்பும், வசதிகளும், உள்ள அழகி போல் ஒவ்வொரு பொழுதும், பருவமும், ஒவ்வோர் அழகு தோன்றித் துலங்கும் அரச கம்பீர வாழ்வுள்ள நகரமாயிருந்தது அது. நகரின் எல்லாப் பகுதிகளுக்கும் அழகைச் சுமந்து கொண்டு வந்த அந்தி மாலை நேரம் பட்டினப்பாக்கத்தில் அழகுக்கே அழகு செய்வது போல் வந்தது. மாளிகைகளின் முன்புறங்களில் பசுமையழகுக்காகப் படர விட்டிருந்த முல்லையும், மல்லிகையும், அரும்பு நெகிழ்ந்து மணம் பரப்ப, அந்த மணம் அந்த நேரத்தில் வீசிக் கொண்டிருந்த மெல்லிளந் தென்றலிற் கலந்து பரவியது. அந்தி மாலைக்காக இல்லங்களின் முன் பக்கத்து மாடப்

பிறைகளில் மங்கல விளக்கேற்றி வைக்கும் பெண்களின் வளையொலியும், சிரிப்பொலியும், இன்கிணிச் சிலம்பொலியும் வீதியெல்லாம் நிறைந்து ஒலித்தன. முகமே ஒரு மங்கல விளக்காய் அதில் முத்து நகை சுடர் விரிக்க, முறுவல் நிகழும்போது விழிகளில் நளினம் ஒளி பரப்பத் தீபம் ஏற்றி வைக்கும் பெண்களே தீபங்களைப் போல் வீதிகளில் தோன்றினர். வீதிகளிலிருந்து யாழிசையும், குழலிசையும், மத்தளம்-முரசங்களின் ஒலியும், பல்வேறு கோவில்களின் மணியோசையும், மறை முழக்கமும், பண்ணிசை ததும்பும் பாடல்களும் கலந்தெழுந்து ஒலிக் காவியம் படைத்தன.

இந்த அற்புதமான நேரத்தில் சுரமஞ்சரியும் அவளுடைய சகோதரி வானவல்லியும், வேறு பணிப்பெண்களும், தங்கள் பெருமாளிகையின் ஏழாவது மாடத்துக்கும் மேலே நிலா முற்றத்தில் அமர்ந்திருந்தார்கள். மிகவும் உயரமான அந்த நிலா முற்றத்திலிருந்து * நான்கு காவதச் சுற்றளவுக்குப் பரந்திருந்த பூம்புகார் நகரத்தின் எல்லாப் பகுதிகளும் நன்றாகத் தெரிந்தன. ஒளி வெள்ளம் பாய்ச்சினாற்போல் இந்திர விழாவுக்கான தீபாலங்காரங்கள் நகரத்தைச் சுடர் மயமாக்கியிருந்தன. நாளங்காடிக்கும் அப்பால் கிழக்கே மருவூர்ப்பாக்கம் முடிகிற இடத்தில் நீல நெடுங்கடல் அலைபாய்ந்து கொண்டிருந்தது. துறைமுகத்திலும், காவிரியின் சங்கம வாயிலிலும் பெரிய கப்பல்களில் வைத்திருந்த விளக்குகள் பல நிறத்தினவாய்ப் பலவிதத்தினவாய் நீர்ப்பரப்பில் ஒளிக் கோலம் காட்டிக் கொண்டிருந்தன. மேற்கிலிருந்து கிழக்கு முகமாகப் பாய்ந்து கடலோடு கலக்கும் காவிரி பேரொளிக் கோடுபோல் நீண்டு தெரிந்தது. காவிரிவாயில் சங்கம முகத்தில் கலங்கரை விளக்கத்துத் தீ செந்நாக்குகளை விரித்து எரிந்து கொண்டிருந்தது. தன் மாளிகை நிலா முற்றத்திலிருந்து காவிரிப்பூம் பட்டினத்தின் அந்தி மாலைக் காட்சி வனப்பை எத்துணையோ முறை கண்டு வியந்திருக்கிறாள் சுரமஞ்சரி. ஆனால் இன்று மாலையில் காணும்போது அந்தக் காட்சி வனப்பில் புதிதாக வியப்பையும், அழகையும் உணரும் ஏதோ ஓர் உற்சாக உணர்வு அவள் உள்ளத்துள்ளே குறுகுறுத்தது. பிணியுற்றுக் கிடந்தவர்களுக்குப் பிறந்த நாள் வந்ததுபோல் அந்த உற்சாக உணர்வை முழுமையாக அநுபவிக்க முடியாத மனக்குறையும் சிறிது இருந்தது அவளுக்கு. இளங்குமரனை நினைக்கும்போது அவள் மனம் களிப்படைந்து துள்ளியது. அவனுடைய திமிரையும், அவன் தன்னிடம் நடந்து கொண்ட விதத்தையும், நினைத்துப் பார்த்தால் அவள் மனம் வாடித் துவண்டது.

சுரமஞ்சரியின் சகோதரி வானவல்லிக்கு '**வங்கியம்**' எனப்படும் புல்லாங்குழல் வாசிப்பதில் இணையற்ற திறமை உண்டு. அப்போதும் அவள் அதை வாசித்துக் கொண்டுதான் இருந்தாள். அந்த மாளிகையைச் சேர்ந்த மற்றோர் இசையணங்கு மகர யாழிலே இன்னிசை எழுப்பிக் கொண்டிருந்தாள். வேறொருத்தி மத்தளம் வாசித்தாள். நிலா முற்றத்தில் தன்னருகே பரவிப் பாய்ந்து கொண்டிருந்த இந்த இசை வெள்ளத்தில் மூழ்காமல் இளங்குமரனைப் பற்றிய நினைவு வெள்ளத்தில் மூழ்கியிருந்தாள் சுரமஞ்சரி. தந்தத்தில் இழைத்து முத்துப் பதித்த சித்திரக் கட்டிலில் இரத்தினக் கம்பள விரிப்பின் மேல் அமர்ந்து இசை அரங்கு நிகழ்த்திக் கொண்டிருந்தவர்கள், சுரமஞ்சரி தங்கள் இன்னிசையில் ஆழ்ந்து மூழ்கி அநுபவித்துக் கொண்டுதான் எதிரே அமர்ந்திருக்கிறாளென நினைத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் சுரமஞ்சரியின் இதயத்தை யாழாக்கி அதன் மெல்லிய உணர்வு நரம்புகளில் இளங்குமரன் என்னும் எழில் நினைவு வாசிக்கப்பட்டுக் கொண்டிருந்ததை அவர்கள் அறியவில்லை. 'வெள்ளி வெண் குடத்துப் பால் சொரிவது போல்' தண்மதிக் கதிர் பரவும் நிலா முற்றத்தில், உடலை வருடிச் செல்லும் இதமான காற்றும் வீசும் நிலையில் சுரமஞ்சரி நினைக்கலானாள் :

'இந்திரவிழாக் காலத்தில் இந்த மாளிகைக்கு வந்தவர்களை விருந்துண்ணச் செய்யாமல் அனுப்பும் வழக்கமில்லை. மாளிகைக்குள்ளே வந்து உணவு முடித்துக்கொண்டு போகலாம்' என்று எவ்வளவு அன்போடும், ஆர்வத்தோடும் அவரை அழைத்தேன்! 'நான் இந்தமாளிகைக்கு விருந்து உண்ணவரவில்லை' என்று சிறிதும் தயங்காமல் முகத்தில் அறைந்தாற்போல் பதில் கூறிவிட்டாரே. அது தான் போகட்டும்! தந்தையார் ஏன் அப்படி மரங்களின் மறைவில் ஒளிந்தாற் போல் நின்று அவரையும் எங்களையும் கவனித்தார்? திடீரென்று மறைவிலிருந்து வெளிப்பட்டு, 'இந்தப் பிள்ளையை நான் இதற்கு முன்பு எங்கோ

---

* பூம்புகார் நகரின் சுற்றுப்பரப்பு நான்கு காவதம் எனச் சிலப்பதிகாரம் கூறுகிறது. சுமார் முப்பது சதுர மைல் பரப்பு என்று சதாசிவ பண்டாரத்தார் ஆராய்ந்து கூறியுள்ளார்.



பார்த்தாற்போல் நினைவிருக்கிறதம்மா' என்று கூறி எங்களையும் அவரையும் திகைப்படையச் செய்ததுமல்லாமல் அவரருகில் சென்று அநாகரிகமாக அவரை உற்று உற்றுப் பார்த்தாரே தந்தையார்? அதன் நோக்கமென்ன? எவ்வளவோ உலகியலறிவும், நாகரிகமும் தெரிந்த தந்தையார் இன்று தோட்டத்தில் ஏன் அப்படி நடந்து கொண்டார்? தந்தையாரின் எதிர்பாராத வருகையும், பேச்சும், உற்றுப் பார்த்த பார்வையும், அவருக்கு அநாகரிகமாகத்தான் தோன்றியிருக்கும். இல்லாவிட்டால், 'நடந்து போகாதீர்கள். பல்லக்கு வருகிறது. அதில் ஏறிக்கொண்டு போகலாம்' என்று நான் கூவியபோது திரும்பியும் பார்க்காமல் அலட்சியமாக வீதியில் இறங்கி நடந்திருப்பாரா அவர்? நல்ல வேளை! நான் அப்போது காட்டிய குறிப்பைப் புரிந்து கொண்டு என் பக்கத்தில் நின்ற வசந்தமாலை அவரைப் பின்தொடர்ந்து சென்றிருக்கிறாள். என்னுடைய தோழிகளிலேயே வசந்தமாலைக்குத்தான் குறிப்பறியும் திறன் அதிகம். பின்தொடர்ந்து போய் அவரைப் பற்றிய விவரங்களையும், அவர் வசிக்கும் இடத்தையும் நன்றாகத் தெரிந்து கொண்டுதான் திரும்பி வருவாள் அவள்!'- வசந்தமாலை விரைவில் திரும்பி வந்து அவரைப் பற்றிய எல்லா விவரங்களையும் கூறிவிடமாட்டாளா என்று ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் சுரமஞ்சரி. 'ஒருவேளை தனக்குத் தெரியாமலே வசந்தமாலை இதற்குள் திரும்பி வந்திருப்பாளோ?' என்று சுரமஞ்சரிக்கு ஐயம் ஏற்பட்டது. நிலா முற்றத்திலிருந்து கீழே இறங்கிப்போய்ப் பார்த்துவிட்டு வரலாமென்றால் புல்லாங்குழல் வாசித்துக் கொண்டிருக்கும் வானவல்லியும், மற்றவர்களும் தான் இருந்தாற்போலிருந்து நடுவில் எழுந்து போவதைத் தவறாகப் புரிந்து கொண்டு வருந்தலாகாதே என்று தயங்கினாள் சுரமஞ்சரி.

சிறிது நேரத்தில் நிலா முற்றத்து இசையரங்கு தானாகவே முற்றுப் பெற்றது. வானவல்லியும் மற்றப் பெண்களும் வேறு பேச்சுக்களைப் பேசத் தொடங்கினார்கள். தான் நிலா முற்றத்திலிருந்து கீழே இறங்கிப் போய் 'வசந்தமாலை வந்திருக்கிறாளா?' என்று பார்த்துவிட்டுத் திரும்புவதற்கு இதுதான் ஏற்ற நேரம் என்று தீர்மானம் செய்து கொண்டவளாய் எழுந்தாள் சுரமஞ்சரி.

"வானவல்லீ! நீ இவர்களோடு சிறிது நேரம் பேசிக் கொண்டிரு. நான் கீழே



போய் [illegible] வந் இருக்கிறாளா என்று [illegible] விட்டு வருகிறேன்" எனக் கூறிவிட்டு அவன் புறப்பட்டபோது வானவல்லி அவனைத் தடுக்கவில்லை. நிலா முற்றத்திலிருந்து கீழ்ப் பகுதிகளுக்குச் செல்லும் படிகளில் வேகமாக இறங்கினாள் காமஞ்சரி.

சம நிலத்திலிருந்து ஓங்கி நின்ற அந்த எழடுக்கு மாளிகை அரண்மனை போன்று ஒரே கட்டிடமாக உயர்ந்து தோன்றினாலும் எழு

மாடங்களும் ஏழுதனிமாளிகைகள்போல் வசதிகள் நிறைந்தவை. நோக்குமிடமெல்லாம் சித்திரங்கள், நுகருமிடமெல்லாம் நறுமணங்கள், அமரவிரும்புமிடமெலாம் பட்டுவிரித்த மஞ்சங்கள், பஞ்சணைகள், பாங்கான இருக்கைகள்,-எல்லாம் எல்லா இடங்களிலும்பொருந்திய பெருமாளிகை அது. அந்தி நேரங் கழிந்து இரவு தொடங்கி விட்டதால் வண்ண வண்ண விளக்குகள் வேறு மாளிகையை ஒளி மயமாக்கி யிருந்தன. எழுநிலை மாடங்களில் கீழிருந்து மூன்றாவதாக அமைந்த மாடமும் அதைச் சார்ந்த அறைகளும் சுரமஞ்சரியின் பழக்கத்துக்கென அவள் தந்தையாரால் விடப்பட்டிருந்தன. 'இளங்குமரனைப் பின் தொடர்ந்து சென்றிருந்த வசந்தமாலை திரும்பி வந்திருந்தால் இந்த மூன்றாவது மாடத்துக்குள்தான் எங்கேயாவது இருப்பாள்' என்பது சுரமஞ்சரிக்குத் தெரியும். அன்று பிற்பகலில் ஓவியனிடம் வரைந்து வாங்கிய இளங்குமரனின் ஓவியத்தை இந்த மூன்றாவது மாடத்துக்குள் அமைந்திருந்த சித்திரசாலையில்தான் சுரமஞ்சரி வைத்திருந்தாள். காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்த சிறந்த ஓவியர்களிடமிருந்தும், இந்திரவிழாக் காலங்களில் பல தேசங்களிலிருந்து பூம்புகாருக்கு வந்துபோகும் ஓவியர்களிடமிருந்தும், வகைவகையான அபூர்வ ஓவியங்களை யெல்லாம் வாங்கித் தனது சித்திரசாலையில் சேர்த்து வைத்திருந்தாள் சுரமஞ்சரி. அவளுடைய சித்திர சாலையை ஒருமுறை சுற்றிப் பார்த்தால் போதும். ஓவியங்களில் அவளுக்கு இருக்கும் ஆர்வத்தைப் புரிந்து கொண்டு விடலாம்.

'தோழி வசந்தமாலை இன்னும் வந்து சேர்ந்திருக்கவில்லையானால் நமது சித்திர சாலையில் போய் அவருடைய ஓவியத்தின் அழகை ஆர்வம் தீரக் கண்டுகொண்டே சிறிது நேரத்தைக் கழிக்கலாம்' என்ற எண்ணத்தோடு மூன்றாவது மாடத்துக்குள் நுழைந்தாள் சுரமஞ்சரி. தனக்குச் சொந்தமான அந்த மூன்றாவது அடுக்கு மாளிகையை மிக அலங்காரமாக வைத்துக் கொண்டிருந்தாள் அவள். மாளிகையின் முன் கூடத்தில் யாரும் இல்லாததால் வசந்தமாலை இன்னும் வந்து சேரவில்லை என்பதை அவள் புரிந்து கொண்டாள். முன் கூடத்தை அடுத்து அவளுடைய இசைக் கருவிகள் வரிசையாக அடுக்கிவைக்கப்பட்டிருக்கும் கீத மண்டபமும் அதையடுத்து நாட்டிய மாடும் காலத்தில் பயன்படுத்தும் நிருத்திய மண்டபமும் அணிமணிகள் உடைகள் புனைந்து கொள்ளும் தனியான அலங்கார மண்டபமும், இறுதியாகச் சித்திரசாலையும் அமைந்திருந்தன. இவ்வளவு இடங்களையும் கடந்து செல்ல வேண்டிய இறுதிப் பகுதியாக அமைந்திருந்த காரணத்தால் சுரமஞ்சரியோ, அவள் தோழியோ உடன் அழைத்துச் சென்று அன்றி அவளுடைய சித்திர சாலைக்குள் பிறர் நுழைவது வழக்கமில்லை. 'வசந்தமாலை திரும்பி வருகிற வரை சித்திரசாலையில் பொழுதைக் கழிக்கலாம்' என்ற நினைப்புடன் தனிமை தந்த உல்லாசத்தில் ஒரு பாடலை மெல்ல இசைத்துக் கொண்டே கீத மண்டபத்தைக் கடந்து சித்திரசாலைக்குச் செல்வதற்காக மேலே நடந்தாள் சுரமஞ்சரி.

இதழ்களில் மெல்லிசை இழைந்து ஒலிக்க நடந்து சென்றவள் அலங்கார மண்டபம் முடிந்து சித்திரசாலைக்குள் இறங்கும் படி அருகிலேயே திகைத்து நிற்க வேண்டிய நிலை ஏற்பட்டது. நாவி



லிருந்து எழுந்த மெல்லிசை நின்றது. அவள் முகத்தில் வியப்பும் பயமும் நின்றன. காரணம்? சித்திரசாலைக்குள்ளிருந்து மெதுவாகவும் மர்மமாகவும் பேசிக் கொள்ளுகிற ஆடவர் பேச்சுக் குரல் அவள் செவிகளை எட்டியது. 'நான் பேணிப் பாதுகாத்து வரும் என்னுடைய சித்திர சாலையில் சொல்லி அனுமதி பெறாமல் என் தந்தையார்கூட நுழைய மாட்டாரே? இப்படி நான் இல்லாத வேளையில் துணிந்து இங்கே நுழைந்திருக்கும் இவர்கள் யாராயிருக்கலாம்?' என்ற பயம் கலந்த சந்தேகத்துடன் ஓசைப் படாமல் சித்திரசாலைக்குள் இறங்கும் இரண்டாவது படியில் காலை வைத்து மெல்லத் தலையை நீட்டி எட்டிப் பார்த்தாள் அவள்.

அப்படிப் பார்த்தபின் சுரமஞ்சரியின் வியப்பு இன்னும் அதிகமாயிற்று. 'தன்னுடைய அனுமதியின்றி அவரும் நுழைய மாட்டாரே' என்று சற்றுமுன் யாரைப்

பற்றி அவன் பெருமையாக நினைத்துக் கொண்டிருந்தானோ, அவரே தான் அங்கே இளங்குமரனின் ஓவியத்துக்கு முன் நின்று கொண்டிருந்தார்! ஆம்! அவனுடைய தந்தையார்தாம் நின்று கொண்டிருந்தார். பிற்பகலில் இளங்குமரன் சென்ற சிறிது நேரத்தில் நூறு பொற்கழஞ்சுகளைப் பெற்றுக் கொண்டு போயிருந்த ஓவியன் மணிமார்பனும் தன் தந்தைக்கு அருகில் இப்போது சித்திரசாலைக்குள் நிற்பதைக் கண்டான் சுரமஞ்சரி. தம் கை ஊன்றுகோலால் இளங்குமரனுடைய ஓவியத்தைச் சுட்டிக் காட்டி 'ஏதோ செய்யுமாறு' எதிரே பயந்து நடுங்கி நிற்கும் ஓவியனைத் தன் தந்தை மிரட்டுவதையும் படியில் நின்று கொண்டிருந்த சுரமஞ்சரி கண்டான். 'பொற்கழஞ்சுகளை வாங்கிக் கொண்டு ஓவியன் போய்விட்டதாக நான் நினைத்துக் கொண்டிருந்ததுதான் தவறு.'

தந்தையார் ஏதோ ஓர் அந்தரங்க நோக்கத்துக்காக ஓவியனைத் தடுத்துத் தங்க வைத்திருக்க வேண்டுமென்று அவளுடைய உள்ளுணர்வு அவளுக்குக் கூறியது. ஆனால் அது என்ன அந்தரங்கம் என்பதை மட்டும் அப்போது அவளால் விளங்கிக் கொள்ள முடியவில்லை. சித்திரசாலையில் மேலும் என்னென்ன நிகழ்கின்றன என்பதை மறைந்திருந்து கவனிக்கலானாள் சுரமஞ்சரி.

# 14. செல்வ முனிவர் தவச்சாலை

'அருட்செல்வ முனிவரைக் காணவில்லை' என்பதால் ஏற்பட்ட திகைப்பும் மலைப்பும் வீரசோழிய வளநாடுடையார் மனத்தில் கலக்கத்தை உண்டாக்கியிருந்தன. அந்தக் கலக்கத்தினால்தான் 'போகும் போது இளங்குமரனைத் துணைக்கு அழைத்துக் கொண்டு போயிருந்த தம் மகள் முல்லை திரும்பி நாளங்காடியிலிருந்து எவர் துணையுமின்றித் தனியே வந்ததைக்கூட அவர் கவனித்துக் கோபம் கொள்ளவில்லை. இல்லாவிட்டால் அவளைத் தனியே அனுப்பி விட்டு எங்கோ போனதற்காக இளங்குமரனைப் பற்றி வாய் ஓய்வடையும் வரை வசை பாடித் தீர்த்திருப்பார்.

நாளங்காடியிலிருந்து முல்லை திரும்பி வந்து வீட்டுப் படியேறியபோது அவளுடைய சிந்தனையாற்றல் முழுதும், 'முனிவர் எதற்காக என்னிடம் சொல்லிக் கொள்ளாமல் திடீரென்று இங்கிருந்து கிளம்பிப் போனார்? அதுவும் ஏதோ சிறைப்படுத்தப் பட்டிருந்தவன் தப்பி ஓடிப் போகிறதுபோல் பின்புறத்து வழியாகத் தப்பிப் போக வேண்டிய அவசியமென்ன?' என்னும் வினாக்களுக்கு விடை காண்பதில் ஈடுபட்டிருந்தது.

அருட்செல்வ முனிவர் தம் இல்லத்திலிருந்து வெளியேறிச் சென்றதற்குக் காரணத்தை அவரால் உறுதியாகத் தீர்மானம் செய்ய முடியவில்லையே தவிர, 'இன்ன காரணமாகத்தான் இருக்கலாம்' என்று ஒருவாறு அநுமானம் செய்து கொள்ளமுடிந்தது. 'இளங்குமரனுடைய பிறப்பு வளர்ப்பைப் பற்றி ஏதாவது தூண்டிக் கேட்க ஆரம்பித்தாலே அவர் பயப்படுகிறார். அதில் ஏதோ ஒரு பெரிய மர்மமும், இரகசியமும் இருக்கும் போல் தோன்றுகிறது. இன்றைக்கு நான் அவரிடம் இளங்குமரனைப் பற்றிய பேச்சைத் தொடங்கியிரா விட்டால் இப்படி நேர்ந்திருக்காது. அந்தக் கேள்வியைக் கேட்டதும் அவர் முகம்தான் எப்படி மாறிற்று? 'சில நிகழ்ச்சிகளை இதயத்துக்குள்ளேயே இரண்டாம் முறையாக நினைத்துப் பார்ப்பதற்குக்கூட அச்சமாக இருக்கிறதே! வெளியே எப்படி வாய் விட்டுக் கூற முடியும்?' என்று பதில் கூறும்போது முனிவரின் குரலில்தான் எவ்வளவு பீதி? எவ்வளவு நடுக்கம்?' என்று நிகழ்ந்தவற்றைக் கோவையாக மீண்டும் சிந்தித்துப் பார்த்தார் வளநாடுடையார். இளங்குமரனைப்பற்றி முனிவரிடம் விசாரிக்க நேர்ந்தபோதெல்லாம் பல முறையில் இது போன்ற அநுபவங்களையே அடைந்திருக்கிறார்.

"இப்படியே முனிவரைக் காணவில்லை என்று பேசாமல் உட்கார்ந்து கொண்டிருந்தால் என்ன செய்வது அப்பா? தேடுவதற்கு ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டாமா? இன்னும் சிறிது நேரத்தில் அண்ணனும் முனிவருடைய வளர்ப்புப் பிள்ளையாகிய அவரும் அங்கே வந்து விடுவார்களே? அவர்களுக்கு என்ன பதில் சொல்வது?" என்று முல்லை கேள்வி கேட்ட போதுதான் வளநாடுடையாருக்கும் ஏதாவது முயற்சி செய்ய வேண்டும் என்ற உணர்வு வந்தது.

முனிவரைப் பற்றி முல்லை தன் மனத்துக்கு மட்டும் தெரிந்த உண்மை ஒன்றைத் தந்தையிடம் சொல்ல விரும்பவில்லை. அதுபோலவே தனிமையில் முனிவரிடம் தாம் கேட்ட கேள்விகளைப்



பற்றியும் முனிவர் அங்கிருந்து கிளம்பிச் செல்ல அந்தக் கேள்விகளும் ஓரளவு காரணமாயிருக்கலாம் என்பதைப் பற்றியும் தந்தை மகளிடம் சொல்லவில்லை. முதல் நாள் நள்ளிரவில் முனிவருக்கும் இளங்குமரனுக்கும் நிகழ்ந்த உருக்கமான உரையாடலையும், அந்த உரையாடலின் போது முனிவர் துயரம் தாங்காமல் அழுததையும் அறிந்திருந்த முல்லை தன் தந்தையாரிடம் அவற்றைக் கூறியிருப்பாளாயின் அவருக்கு அவற்றைக் கொண்டு முனிவர் மேல் இன்னும் சில சந்தேகங்கள் கொள்ள இடம் கிடைத்திருக்கும். அதேபோல் முனிவரிடம் தாம் தனிமையில் பேசிய பேச்சுக்களை வளநாடுடையார் தம் மகளிடம் கூறியிருந்தால் அவளுக்கு முனிவர் ஏன் ஓடிப் போனார் என்ற சந்தேகம் தீர்ந்து போயிருக்கும். இரண்டு காரியங்களுமே அப்படி நிகழாததனால் சந்தேகங்களும் குழப்பங்களும் இன்னும் அதிகமாயின.

“நானும் துணைக்கு வருகிறேன், அப்பா! புறப்படுங்கள். முனிவரைத் தேடிப் பார்க்கலாம்” என்று உடன் புறப்படத் தொடங்கிய முல்லையை வர வேண்டாமென மறுத்துவிட்டார் அவர்.

“நீ வேண்டாம் முல்லை! நானே மறுபடியும் போய் நன்றாகத் தேடி விட்டு வருகிறேன். நம் வீட்டுப் பின்புறம் ஆரம்பமாகிற நெடுமரச் சோலை சம்பாபதி வனம். சக்கரவாளக் கோட்டம் ஆகிய இடங்கள்வரை நெடுந் தொலைவு இடைவெளியின்றிப் பரந்துகிடக்கிறதே! இதில் எங்கேயென்று குறிப்பிட்டு அவரைத் தேடுவது?” என்று கூறிக் கொண்டே திண்ணையில் அடுக்கியிருந்த வேல்களில் ஒன்றை உருவினார் வளநாடுடையார். அந்த வேலை ஊன்றுந் துணையாகக் கொண்டு வீட்டின் பின் பக்கத்துத் தோட்ட வழியாக அவர் புறப்பட்டபோது பிற்பகல் நேரம் முதிரத் தொடங்கியிருந்தது.

முடிந்தவரை எல்லா இடங்களிலும் தேடி விட்டு இறுதியாகச் சக்கரவாளக் கோட்டத்திலுள்ள அருட்செல்வ முனிவரின் தவச் சாலைக்கும் போய்ப் பார்த்து விடலாம் என்பது கிழவர் வீரசோழிய வளநாடுடையாரின் எண்ணமாக இருந்தது. இளமையிலும், நடுத்தர வயதிலும் காவல் வீரனாகவும். காவற் படைத் தலைவனாகவும் அந்தப் பெருவனத்தின் ஒவ்வொரு பகுதியிலும் வேலும் கையுமாகச் சுற்றிய நினைவு வந்தது அவருக்கு. அப்போது சுற்றியதற்கும், இப்போது சுற்றுவதற்கும் இடையில்தான் எத்துணை வேறுபாடுகள்? வீரமும், மிடுக்கும், வலிமையும் கொண்டு சுற்றிய அந்தக் காலம் எங்கே? தளர்ந்த உடலோடு வேலை ஊன்றிக் கொண்டு நடக்கும் இந்தக் காலம் எங்கே? முல்லையின் தாயார் காலமாகும் வரையில் அவருக்கு மனத் தளர்ச்சி இருந்ததில்லை. முல்லையின் குழந்தைப் பருவத்தில் ‘அவள்’ காலமானபோது அவருக்கு மனமும் தளர்ந்தது. அந்தச் சமயத்தில் கட்டிளம் காளையாக வளர்ந்திருந்த புதல்வன் கதக்கண்ணனைக் காவற்படை வீரனாகச் சோழ சைன்யத்தில் சேர்த்துவிட்டுத் தாம் வீட்டோடு இருந்து கொண்டார் அவர். அந்த நாளிலிருந்தே அருட்

செல்வ முனிவரை அவருக்கும், அவரை அருட்செல்வ முனிவருக்கும் நன்றாகத் தெரியும். அருட்செல்வ முனிவரின் வளர்ப்புப் பிள்ளையாகிய இளங்குமரனும், வளநாடுடையாரின் மூத்த மகனாகிய கதக்கண்ணனும் போர் முறைகளும் படைக்கலப் பயிற்சிகளும் பெறுகிற இளமையிலேயே சேர்ந்து கற்றவர்கள், சேர்ந்து பயின்றவர்கள். மருவூர்ப் பாக்கத்தில் '**நீல நாகன் படைக்கலச்சாலை**' என்று ஒன்று இருந்தது. அந்தப் படைக்கலச் சாலையின் தலைவனை **நீல நாகமறவன்** பூம்புகாரிலேயே பெரிய வீரனாகப் போற்றுதல் பெற்றவன். இளங்குமரனும், கதக்கண்ணனும் தங்களுடைய உடல் வலிமையை வளர்த்துக்கொள்வதற்குக் காரணமானவன் அந்த மறவன்தான். அந்த மறவனிடம் இளங்குமரனையும், கதக்கண்ணனையும் கொண்டுபோய்ச்சேர்த்தது வளநாடுடையார்தாம். அருட்செல்வ முனிவரைத் தேடிக்கொண்டு அலைந்தபோது வளநாடுடையாருக்கு இந்தப் பழைய நினைவுகள் எல்லாம் உண்டாயின. கந்திற்பாவை கோட்டம், உலக அறவி, சம்பாபதி கோவில் போன்ற இடங்களில் எல்லாம் தேடி அலைந்துவிட்டு அவற்றைச் சார்ந்திருந்த சக்கரவாளக் கோட்டத்தின் மதிலருகே வந்து நின்றார் வளநாடுடையார். மாலைப்போது நெருங்கிக் கொண்டிருந்தது. சக்கரவாளக் கோட்டத்துக்குள் நுழைவதற்கு நான்கு புறமும் வாயில்கள் உண்டு. செழுங் கொடி வாயில், நலங்கிளர் வாயில், வெள்ளிடைவாயில், பூதம் நின்ற வாயில் என்னும் நான்கு மாபெரும் வாயில்கள் சக்கரவாளக் கோட்டத்து நாற்புற மதில்களில் அமைந்திருந்தன. அவற்றுள் பூதம் நின்ற வாயில் வழியாக நுழைந்து போனால் அருட் செல்வ முனிவரின் தவச்சாலையை எளிதாக அடையலாம். பூதம் நின்ற வாயில் என்பது விநோதமான அமைப்பை உடையது. பெரிய பூதம் ஒன்று சிலைவடிவில் தன் இரண்டு கால்களையும் அகற்றி நிற்பது போல் அவ்வாயில் கட்டப்பட்டிருந்தது. வானளாவி நிற்கும் அந்தப் பூதச் சிலையின் இரு கால்களுக்கும் இடையே தான் கோட்டத்துக்குள் போவதற்கான சாலை அமைந்திருந்தது. தைரியமில்லாத மனங் கொண்டவர்கள் பூதம் நின்ற வாயிலில் நடந்து உள்ளே போகும்போது கூட அந்தச் சிலை அப்படியே கைகளை நீட்டித் தங்களை அமுக்கிவிடுமோ என்று வீணாகப் பிரமை கொள்ள நேரிடும். அவ்வளவு பிரும்மாண்டமான அமைப்புடையது அந்த வாயில். அதைப் பார்த்துக் கொண்டு நின்றால் கால்களினிடையே வழி கொடுத்துக் கொண்டே பூதம் நகர்ந்து வருவது போலவே தொலைவில் தோன்றும். வீரசோழிய வளநாடுடையார் பூதம் நின்ற வாயிலின் வழியே சக்கரவாளக் கோட்டத்துக்குள் நுழைந்தார். அந்த மாலை நேரத்தில் அருட்செல்வ முனிவரின் தவச்சாலையும் அதைச் சூழ்ந்திருந்த மலர்வனமும் ஆளரவமற்ற தனிமையில் மூழ்கித் தோற்றமளித்தன. 'அருட்செல்வ முனிவரே' என்று இரைந்து கூவியழைத்தவாறே தவச்சாலையின் ஒவ்வொரு பகுதியிலும் சுற்றிச் சுற்றி வந்தார் வளநாடுடையார். அவர் உரத்த குரலில் கூப்பிட்ட முனிவரின் பெயர்தான் அந்த வனத்தின் ஒவ்வொரு பகுதியிலிருந்தும் திரும்பத் திரும்ப எதிரொலித்ததே தவிர, வேறு பதில் இல்லை. தவச்சாலையின் ஒரு பகுதியில் சுவடிகளை விரித்து வைத்து அருகில் தீபமும் ஏற்றி வைக்கப்பட்டிருந்ததால் மாலைப்போது நெருங்குகிற அந்த வேளையில் யாரோ அங்கு வந்திருக்கிறார்களென்பதை வளநாடுடையாரால் புரிந்துகொள்ள முடிந்தது. 'சுவடிகள் தாமாக விரித்துக் கொண்டு கிடக்கப் போவதில்லை! தீபமும் தானாக ஏற்றிக் கொண்டு ஒளி தரப் போவதில்லை! யாரோ இப்போது இங்கே இருக்கிறார்கள்! ஆனால் என் முன்னால் வரத் தயங்குகிறார்கள்'-என்று சந்தேகம் கொண்டார் வளநாடுடையார். 'சுவடிகளைப் படிக்க ஏற்ற முறையில் விரித்துத் தீபமும் ஏற்றி வைத்தவர், தாம் அங்கே வந்து நுழைவதைப் பார்த்து விட்டு வேண்டுமென்றே தமக்காகவே மறைந்திருக்கலாமோ?'—என்று தோன்றியது வளநாடுடையாருக்கு. மறைந்திருக்கும் ஆளை வெளியே வரச் செய்வதற்காக மெல்ல ஒரு தந்திரம் செய்தார் வளநாடுடையார்

"சரிதான்! இங்கு எவரையும் காணவில்லை. நாம் வந்த வழியே திரும்பிப் போக வேண்டியதுதான். முனிவரை அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்"—என்று சற்று இரைந்த குரலில் தமக்குத் தாமே சொல்லிக் கொள்கிறார் போல் சொல்லிக் கொண்டு திரும்பி நடந்தார் அவர். நடந்தார் என்பதை விட வேகமாகத் திரும்பிச் செல்வதுபோல் போக்குக் காட்டினார் என்பதே பொருந்தும்.

வளநாடுடையார் நினைத்தது நடந்தது. அவர் தவச்சாலையின் வாயில்வரை வேகமாக நடந்து போய்த் திடீரென்று நடையை நிறுத்தி மெல்லத் திரும்பவும் அந்தச் சுவடிக்கும் தீபத்துக்கும் அருகில் யாரோ வந்து உட்காரவும் சரியாக இருந்தது. திரும்பியும் திரும்பாமலும் அரைகுறையாக ஓரக் கண்களால் பார்க்க முயன்ற அந்தப் பார்வையால் வந்து உட்கார்ந்த ஆளை அவரால் நன்றாகக் காண முடியவில்லை. **(தொடரும்)**

# நாம் பியார்

பி.வி.பாரதீயன்



பொற்குடம் ஒன்று காற்றிலே மிதந்தாடி வண்டியினுட் புகுந்து அமர்ந்துவிட்டாற் போலத்தான் இருந்தது. வைத்த கண் வாங்காமல் அவளையே பார்த்தன அத்தனை நயனங்களும். தும்பைப் பூவைப் பழிக்கும் வெண்மையிலே மிளிர்ந்தது அவள் சுற்றியிருந்த புடவை. ஆமாம்! உடலோடு உடலாகச் சுற்றி விட்டாற் போலத்தான் அவள் கட்டியிருந்தாள்.

தியாகத்தை நினைவுறுத்தும் காவி நிறத்திலே சோளி. நெற்றியிலும், தலைமயிர் வகிட்டின் நெற்றிச் சரையிலும் செவ்வப்புக் குங்குமம். படஅன்னம்போல் லாவண்யமாக விற்று விழிகளைச் சுழற்றி அத்தனை பேரையும் ஒரு நோட்டம் விட்டாள். எல்லா உள்ளங்களும் எங்கேயோ உயர ஏறி இறங்கினாற் போல் பிரமை பூண்டன. வெறும் மின்னல் என்று யாரேனும் நினைக்க முடியுமா?

இரயில் புறப்படப் பத்துநிமிடங்களே இருந்தன. அவளைக் கண்ட மயக்கத்தில் அவளோடு வண்டி ஏறி இடையூறு செய்த இரண்டு பெரிய பெட்டிகளை யாருமே இலட்சியம் செய்யவில்லை. மொத்தம் பதிவு செய்த பதினாறு நபர்களே உட்கார வசதியிருந்த பெட்டியின் சிறு பகுதி. நான்கு வரிசையாக இருந்தன உட்காரும் இடங்கள். அதிலே ஏழாவது, 'நம்பர் ஸீட்' அந்த அழகியினுடையது. அதாவது ஏறக்குறைய பெட்டியின் மையத்திலேதான் அங்கிருந்த உள்ளங்களை ஈர்த்த அழகியின் இருக்கை. ஓரமாகக் காணப்பட்ட வங்காளிக் குடும்பம்- கணவன், மனைவி, இரண்டு குழந்தைகள் ஆகியோர். புதிதாக வந்த பெண்ணின் எழிலைப்பற்றி ஒரு மூலையிலே குசுகுசுவென்று பேச்சரவம் கேட்டது.

சன்னலருகே வெளியே பார்க்க வசதியான இடத்தில் அமர்ந்திருந்தான் சங்கரன். கட்டிளங்காளை. அவனிடம் அவளை வழியனுப்ப வந்திருந்த நடுத்தர வயசு ஆசாமி சுத்தமான ஹிந்தியில் கூறினார்:

''குழந்தையைத் தனியாகப் பம்பாய் அனுப்புகிறேன். வண்டியில் உள்ள நீங்கள்

எல்லாம்தான் துணை. நாகபுரி மார்க்கமாகப் போகும் பம்பாய் மெயிலில் இடம் கிடைக்காமல் போய்விட்டது. அலகாபாத்தைச் சுற்றிப் போகவேண்டும் என்று இருந்தது போலிருக்கிறது தலைவிதி!...''

பொறுப்பேற்றுக்கொள்ளும் தோரணையில், ''அதனால் என்ன, நீங்கள் கவலைப்படாதீர்கள். நாங்களெல்லாம் கவனித்துக் கொள்கிறோம்'' என்று தைரியமூட்டினான் சங்கரன்.

பக்கத்தில் இருந்த உத்தரப் பிரதேசத்தைச் சேர்ந்த



ஆசாமி, ''ஆமாம், ஆமாம். ஒன்றும் பயமே வேண்டாம்!'' என்றார் தமது கட்டு மீசையை வளைத்துவிட்டவாறு.

''பிமலா, போனதும் கடிதம் எழுது!''

''கட்டாயம் எழுதுகிறேன்!''

பெயர் காதில் விழுந்ததும் நல்ல பெயர் தான் என்று எண்ணிக்கொண்டான் சங்கரன். அவனது உள்ளம் அந்தப் பெயரை உச்சரித்துப் பார்த்தது. ''பி ம லா!''

குறிப்பிட்ட நேரத்துக்குக் கூடவே பத்து நிமிடங்களாகி மணி எட்டரையான பிறகுதான் ஹௌரா ரயிலடியை விட்டு வண்டி பெருங் குரல் கிளப்பிக் கொண்டு புறப்பட்டது. உடனே சங்கரனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த மனிதர் கதவருகே பாய்ந்தார். வெளியிலிருந்து திறக்க யத்தனித்த யாரையோ, ''இதில் ஏறாதே! 'ரிசர்வ்ட்' 'ரிசர்வ்ட்'!'' என்று கூச்சலிட்டுத் தடுத்தபடியே கதவின் தாழைத் திறக்க முடியாமல் அழுத்திப் பிடித்துக் கொண்டார். வெளியிலிருந்த ஆசாமி விடாப்பிடியாக ஓட ஆரம்பித்துவிட்ட வண்டியின் படியிலே நின்றான். ஓட்டத்தின் வேகம்கூட ஆரம்பித்து விட்டது. இனி எப்படி இறங்க முடியும்? வண்டிக்குள்ளிருந்த பெரியவர் ஒருவர், ''பாவம், கீழே விழுந்து உயிரை விட்டுவிடப் போகிறான். கதவைத் திறவுங்கள். உள்ளே வந்து தொலையட்டும்!'' என்றார். பல குரல்கள் ''ஆமாம்! திற. திற!'' என்றன.

வண்டியினுள் நுழைந்தவனைக் கண்டபோது எல்லோருக்குமே மனசுக்குப் பிடிக்கவில்லை. ஒரே அழுக்கு. பொத்தான் போடாத சட்டை, வெள்ளை கால்சராய். வெள்ளையா அது? இல்லை. அது வெள்ளையாக இருந்திருக்க வேண்டும். கிராப்புத் தலை காடாக நின்றது.

எண்ணெய் கண்டு எத்தனை நாட்களோ! அவன் இலட்சணத்துக்குச் சிகரம் வைத்தாற் போல் முகம் நிறையக் குழி பாய்ச்சியிருந்த அம்மை வடுக்கள். மூக்கு கொஞ்சம் சப்பை. விழிகளை உருட்டி அவன் பார்த்தபோது கொஞ்சம் பயமாகத்தான் இருந்தது.

ஓர் ஓரமாகக் கீழே உட்கார்ந்து விட்டான் அந்த அவலட்சணம். சங்கரனுக்குப் பக்கத்திலிருந்த 'கட்டு மீசை' இரகசியமாக ஓதினார்.

''இவன் சரியான ஜேப்படிக்காரன்! பார்த்தையா தம்பி, அவன் கையிலே ஒரு சின்ன பைகூட இல்லே! நள்ளிரவில் யாருடைய பெட்டியையாவது எடுத்துக் கொண்டு கீழே இறங்கிப் போய்விடுவான்!''

அவரவர்கள் தூக்கத்துக்கு எப்படி அனுசரித்துப் படுப்பது என்ற திட்டத்தை ஓரளவு தங்களது செய்கைகளாலேயே ஏற்பாடு செய்திருந்தனர் அனைவரும். வங்கக் குடும்பத்தினரின் முனகல் தங்களுக்குள் மெல்லிய குரலில் கேட்டது. ''எதற்கும் சாமான்களெல்லாம் ஜாக்கிரதை!''

பெரியவர் கீழே உட்கார்ந்திருந்த அந்த அழுக்குப் படிந்த ஆடையுடையவனை நோக்கி, ''நீ எங்கே போகிறாய்?'' என்று சற்று அழுத்தமாக வினவினார்.

அவன் அவருடைய முகத்தைப் பார்த்துவிட்டுத் தலையைத் திருப்பிக் கொண்டான்.

''ஊமையோ?''

''செவிடு!''

''ஒருகால் கொஞ்சம் புத்தி சுவாதீனம் இல்லையோ என்னவோ?''

பெரியவர் விடவில்லை.

''டிக்கட் இருக்கிறதா உன்னிடம்? எந்த ஊருக்குப் போகிறாய்?'' என்றார் மீண்டும் அதட்டலாக.

அதற்கும் பதில் இல்லை.

சங்கரன் அதிகார தோரணையில் சொன்னான்: ''அடுத்து வண்டி நின்றதும் நீ இறங்க வேண்டும். பத்தரைக்குள் பர்த்வான் ரயிலடி வந்துவிடும். இறங்காவிட்டால் உன்னைப் பிடித்துக் கொடுத்து விடுவோம்!'' மறுகணம் தன் தைரியத்தை அவள் — பிமலா தான் — எப்படி வரவேற்கிறாள் என்பதைக் காண அவள் முகத்தை நோக்கினான்.

பிமலா இதழவிழ்த்து இன்முறுவல் கூட்டினாள். அப்பா! பெரிய பனிக்கட்டியையே நெஞ்சில் வைத்து விட்டாற்போல் குளிர்ந்தது சங்கரன் மனசு. மேலே என்ன பேசினாள், தெரியுமா? ''பாவம், அவனுக்கு என்ன கஷ்டமோ? அகதியாக இருந்தாலும் இருக்கலாம்! அவன் ஓர் ஓரமாக உட்கார்ந்து பம்பாய்வரை வேணுமானாலும் வரட்டுமே!''

பிமலா கூறியதைக் கேட்டவுடன் அவள் முகத்தைப் பார்த்து அந்த அழுக்குச் சட்டை கன்னம் கிழியப் புன்முறுவல் பூத்தான். அதைப் பார்த்தால் நிரம்பவும் பழக்கப்பட்டவனின் சிரிப்பாகத் தோன்றியது. 'இந்தப் பெண்ணுக்கு எத்தனை இளகிய மனசு!' என்று எண்ணிக்கொண்டிருந்த சங்கரன் திடீரென்று அவள் முகத்தில் தோன்றிய அச்சக்குறி கண்டு திகைத்தான். 'பைத்தியம்' சிரித்ததைக் கண்டு பயந்து விட்டாளோ அவள்?

வண்டியிலிருந்த எல்லோரும் படுக்கத் தயாராகி விட்டனர். தாமதமாகக் கிளம்பியிருந்ததால் வண்டி பர்த்வான் ரயிலடி வரும்போது மணி பத்தரை ஆகிவிட்டது. ஒருவர் கதவைத் திறந்தார். ''இறங்கு, இறங்கு!'' என்றனர் பலர் வேண்டாதவனைப் பார்த்து. பிமலாவைச் சங்கரன் கவனித்தான். அவள் முகத்தில் மாறுதலே இல்லை. படர்ந்த பயம் அழியக் காணோம்!

பெரிய வெற்றி அடைந்துவிட்டவர் போல் கதவைத் திறந்து அவனை வெளியேற்ற முற்பட்டவர் 'படார்!' எனக் கதவை அடித்துச் சாத்திவிட்டு எல்லோரையும் ஒரு பெருமிதப் பார்வை பார்த்தார்.

சங்கரனின் பார்வை அழகி பிமலாவின் மீது விழுந்தது. அவள் சன்னலுக்கு வெளியே பார்த்துக் கொண்டிருந்தாள், யாரையோ தேடுவது போல!

''கூல்......!'' என்ற இராட்சதக் குரல் ஒலித்தது. வண்டி பர்த்வான் ரயிலடியிடம் விடைபெறும் சமயம். 'வெற்றி வீரர்' அப்போதுதான் படுக்கையிலே தலையைச் சாய்த்திருந்தார். மீண்டும் கதவருகே தோன்றினான் அந்த வேண்டாத ஆசாமி. அவ்வளவுதான்! சட்டென்று பாய்ந்து கதவின் தாழைப் பிடித்துக் கொண்டு ''உள்ளே வராதே, போ! போ!!'' என்று கத்தினார்.

கொஞ்ச தூரத்திலே நின்று கொண்டிருந்த ரயில்வே அதிகாரி ஒருவரைக் கையைக் காட்டி, ''சார்!......'' என்று அழைத்தான் சங்கரன்.

அங்கே வந்த அவரிடம், ''இந்த அரைப் பைத்தியத்தை நிறுத்துங்கள். வண்டிக்குள் வந்து எங்களுக்கு இடையூறு செய்கிறான். டிக்கெட் கூட இல்லை போலிருக்கிறது. ஹௌராவிலேயே ஏறிவிட்டான். இப்பத்தான் இறக்கிவிட்டோம். மறுபடி......'' என்று படபட வென்று பொரிந்தான் சங்கரன்.

''போய்த் தொலைகிறான். நான் டிக்கெட் பரிசோதகரிடம் சொல்லுகிறேன். அவனை அசன்சால் ரயிலடியில் போலீசாரிடம் கொடுத்துவிடலாம். இப்போது பெட்டிக்குள்ளேயே உட்காரட்டும்'' என்று கூறிய அதிகாரியைப் பார்த்துப் பல்லை இளித்து இரு கைகளையும் கூப்பினான் அரைப் பைத்தியம். வண்டி நகர்ந்தது.

சங்கரனுக்குப் படுதோல்வி! 'கட்டு மீசை'க் காரரைப் பார்த்தான்.

''ஆமாம் தம்பி, அவர் செய்தது சரிதான்! இது இல்லாவிட்டால் அடுத்த பெட்டியில் ஏறி வருவான் அவன். அசன்சால் ரயிலடியில் போலீசு கையிலே ஒப்படைத்துவிட்டால் யாருக்குமே தொந்தரவு இல்லை பார்!''

அவர் சொன்னது அவன் காதில் அரைகுறையாகத்தான் விழுந்தது. காரணம்? பிமலாவின் முகம் மேலும் கலக்கமடைந்திருந்தது! அவளுடைய உறவினருக்குப் 'பார்த்துக் கொள்வதாக'த் தான் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற வேண்டிய கடமை தனக்கு இருப்பதாக அவனுக்குத் தோன்றியது. எனவே, ''உங்களுக்குப் பயமாக இருக்கிறதோ?'' என்று தனது குரலை அன்பாக ஓடவிட்டான் சங்கரன்.

# கார் மூலம் இந்தியாவைக் காண

# **கால்டெக்ஸ்**

தென் இந்தியாவில், வங்காள விரிகுடாக் கரையோரத்தில் நிற்கிறது பல்லவர்களின் புராதனத் தலைநகராகிய மகாபலிபுரம். சென்னையிலிருந்து முப்பதே மைல்கள் பயணத்தில், நுணுக்கக் கலையின் நிபுணத்துவத்தால் சமைந்த மகோன்னதமான ஒற்றைக்கல் சிற்பங்கள் விளக்கும் ஒரு சகாப்தத்தில் நீங்கள் பிரவேசிக்கிறீர்கள். கல்லைக் குடைந்து செய்த சிற்பங்கள் — ஆக்க எழிலும், கற்பனையை ஊக்கும் திறனும் பெற்ற சிற்பங்கள்—நிரம்பி வழிகிறது. ஏழு கோபுரங்கள் என்னும் பெயர்பெற்றுள்ள இந்த மகாபலிபுரத்தில், நுங்கும் நுரையுமான அலைகள் கடற்கரைக் கோயிலின் பாறைச் சுவர்களில் ஆக்ரோஷமாக மோதுகின்றன. எனினும் அது அமைதியைத் தவழ விட்டவாறு நிற்கிறது—சென்று போன சாம்ராஜ்யமொன்றின் நினைவுச் சின்னமாக.

எல்லாப் பெரிய நகரங்களிலுள்ள கால்டெக்ஸ் சர்விஸ் நிலையங்களிலிருந்தும்
இக் காட்சியின் [வண்ணப் பிரதிகளைக் கோரிப் பெறலாம்




கார் மூலம் இந்தியாவைக் காண்பதற்கு நீங்கள் எங்கிருந்து புறப்பட்டாலும் சரி, கார் தொந்தரவுகளின்றி, பயணம் மகிழ்வாகவும் உல்லாசமாகவும் இருக்க கால்டெக்ஸ் லூப்ரிகண்ட்களையும் பெட்ரோலையும் தேர்ந்தெடுங்கள்.

*Caltex (India) Limited*

''அப்படி ஒன்றும் இல்லை! எதற்காகப் பயம்?'' என்ற பிமலாவின் பதில் நடுக்க முடையதாகவே இருந்தது. பேசிவிட்டு அந்த அவலட்சண முகத்தின் பக்கம் திரும்பிப் பார்த்தாள். அவளைப் பார்த்து அது சிரித்தது.

சங்கரனுக்கு மனசு நிம்மதியே இல்லை. 'சே, என்ன பெண்கள், ஒன்றுமில்லாததற்கெல்லாம் பயந்து கொண்டு!' என நினைத்துக் கொண்டான். மேலே 'சாமான்களுக்கு மாத்திரம்' என்று பெயரிடப்பட்ட பலகையில் அவனது 'ஹோல்டாலை' விரித்திருந்தான். ஏறிப் படுக்க விருப்பமில்லை. ஒரு வழியாக அசன்சால் ரயிலடியில் அந்த டிக்கெட் இல்லாத பிரயாணியை இறக்கி விட்டு, பிறகுதான் அவனால் தூக்கத்தில் லயிக்க முடியும். 'கட்டு மீசை' அவன் எழுந்த பின்னரே சற்று வசதியாகத் துயில் கொள்ளலாம். உட்கார்ந்தபடியே உறக்க மாடினார் அவர்.

நள்ளிரவு. மணி பன்னிரண்டாகிவிட்டது. தூங்கவும் விரும்பாமல் தவிர்க்கவும் முடியாமல் தவித்த அவர்களுக்கெல்லாம் பெரிய ஆறுதலாக அசன்சால் ரயிலடி வந்து விட்டது. சங்கரன் கண்களைத் துடைத்து விட்டுக் கொண்டான். அரைப் பைத்தியம் தானே இறங்கத் தயாராக நின்றான். சங்கரனுக்குப் பிமலாவின் முகத்தைப் பார்க்கச் சகிக்கவில்லை. அத்தனை பாவமாக இருந்தது.

'வெற்றிவீரர்' எழுந்து வழியனுப்பத் தயாராக நின்றார். அழுக்குச் சட்டைக்காரன் கதவைத் திறந்து கொண்டு வெளியே இறங்கினான். இரண்டு போலீசு ஜவான்கள் அவன் எதிரே வந்து நின்றனர். கூடவே ரயில்வே அதிகாரி ஒருவரும் வந்தார். ஜவான்கள் இருவரும் அந்த அரைப் பைத்தியத்துக்கு விரைப்பாக நின்று 'சல்யூட்' அடித்தனர்.

மூவரும் வண்டிக்குள் ஏறினார்கள். அது வரை வாய் திறந்து பேசாதிருந்த அழுக்குச் சட்டைக்காரன் பிமலாவைப் பார்த்து, ''இங்கேயே இறங்கிவிடு!'' என்றான்.

சங்கரனுக்குள்ளே வியப்பும் பயமும் கலவையாகப் புகுந்து வகை கூற முடியாத ஒரு செயலற்ற நிலை ஏற்பட்டுவிட்டது. இருந்தும் எப்படியோ துணிச்சலை வரவழைத்துக் கொண்டு, ''மிஸ்டர்! எதற்காக அவளை இறங்கச் சொல்லுகிறீர்? உமக்கு என்ன அதிகாரம்?'' என்று பேசி விட்டான்.

சிரித்தவாறு 'அழுக்குச் சட்டை' கூறினான்: ''இந்தப் போலீசு ஜவான்கள் போதாதா உமக்குச் சாட்சி? இடைமறித்தால் நீரும் சேர்ந்து வரலாம். வண்டியை அநாவசியமாகத் தாமதிக்கச் செய்ய வேண்டாம், பாருங்கள்!''

சங்கரனின் தைரியம் அவனை விட்டு நழுவி எங்கேயோ ஓடிவிட்டது. முகம் வெளிற, ''அதற்கில்லை. 'அரெஸ்ட்' செய்ய உத்தரவு இருக்கிறதா என்றுதான்...'' என்று பணிவுடன் இழுத்தான்.

''ராம் பியாரி, அந்தப் பெட்டியைத் திற!'' என்றான் 'அழுக்குச் சட்டை.'

அங்கிருந்த எல்லோருக்கும் தூக்கி வாரிப் போட்டது. 'ராம் பியாரியா? இவள் பிமலா இல்லையா?'

அவள் தயங்கினாள்.

''சாவியைக் கொடு!'' அதட்டல் அத்தனை பேரையுமே அச்சுறுத்தியது.

போலீசு சேவகர்களில் ஒருவன் பிமலாவின் சாவியை வாங்கிப் பெரிய பெட்டியைத் திறந்தான். 'அழுக்குச் சட்டை' மேலாக இருந்த துணிகளையெல்லாம் விலக்கி விட்டு உள்ளிருந்து இரண்டு தங்கக் கட்டிகளை எடுத்துக் காண்பித்தான் வெளியே.

''பெட்டி நிறைய இருக்கிறது கட்டி!''

அடுத்த கணம் பிமலா, ராம்பியாரியாகவே மாறி விட்டாள். இனி தப்ப முடியாது என்று புரிந்து கொண்டு விட்டாள் போலிருக்கிறது.

''சரி, சரி, இறக்குங்கள் பெட்டிகளை. இதோ நானும் இறங்குகிறேன்!'' என்று துணிவாகப் பேசிக் கொண்டு எழுந்து அன்ன நடையாகக் கீழே இறங்கினாள். அப்போது சங்கரன் கண்களுக்கு, அருகே வந்த செந்நாகம் ஒன்று வெறுமனே சீறிவிட்டு மெல்ல நெளிந்து ஓடினாற்போல் இருந்தது.

வெளியே நின்ற டிக்கெட் பரிசோதகர் 'கட்டு மீசை'யிடம், ''தெரியாதா? இவர் பிரபலமான இரகசிய போலீஸ் இன்ஸ்பெக்டர் கோபிகுட்டன் நாயர்தான்! எத்தனையோ கள்ளக் கடத்தல் கேசுகளை வெகு சுளுவாகப் பிடித்திருக்கிறார். ஆள் பாதிக்கு மேலே அப்படி 'மேக்—அப்'. இந்த ராம் பியாரியும் வெகு நாட்களாக அகப்படாமல் தப்பித்துக் கொண்டிருந்தாள். இன்றைக்கு வளைத்து விட்டார் நாயர்!'' என்று சண்டப் பிரசண்டமாகக் கூறி முடித்தது சங்கரன் காதிலே தெற்றென விழுந்தது.

ரயில் திரும்பவும் பயணத்தைத் தொடங்கியது. பெரியவர் சங்கரனைப் பார்த்து, ''இந்த உலகமே மாயை. அதனால்தான் பெரியவர்கள் 'காண்பதை நம்பி ஏமாறாதே. பூடகமான பெரும் பொருளை நாடு' என்று சொல்லியிருக்கிறார்கள். கண் முன்னே இந்த இரண்டு மூன்று மணி நேரத்தில் எத்தனை பெரிய மாயா நாடகம் நடந்தது!'' என்று கொட்டாவி விட்டவாறு கூறினார்.

சங்கரனுக்கு மன அமைதி ஏற்படவில்லை. கெட்ட கனவு கண்டு விழித்துக் கொண்டவனது நிலையில் இருந்தான் அவன்.

'பெரியவர் கூறிய மாயை பிமலாவைப் பொறுத்த மட்டிலா, இல்லை, அந்த அவலட்சணமாகத் தோன்றிய மேதாவியையும் சேர்த்தா?' உள்ளுக்குள்ளேயே நிகழ்ந்த சர்ச்சைக்குக் கட்டு மீசைக்காரர் பதில் கொடுப்பது போல், ''தம்பி! உன்னைப் போல் சிறு பிள்ளைகளுக்காகத்தான் தாத்தா சொல்கிறார். பிமலாவை நினைத்து மனசை அலட்டிக் கொள்ளாமல் விடிவதற்கு முன்னால் உறங்கு!'' என்றார்.

மற்றவர்கள் இலேசாகப் பேசி விட்டு மறந்து விட்டார்கள். சங்கரனுக்கு மறுநாள் விடிந்த பிறகு மட்டுமல்ல, பல நாட்கள் விடிந்த பின்னரும்கூடப் பிமலாவைப் பற்றிய நினைப்புக்கள் இருந்து கொண்டிருந்தன. உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் பிமலாவின், இல்லை இல்லை: ராம்பியாரியின் எழில் உருவத்தை, தவறு செய்தாள் என்பதற்காக அவனால் மறக்க முடியுமா?

# வீரத்தின் விளைநிலம்

விஜயசுமதி

ஆயிரத்து எண்ணூற்றுப் பதினெட்டாம் ஆண்டு மார்கழியின் பிற்பகுதி. துன்பம் நிறைந்த சோகத்திருத்தாயின் கண்ணீர் வெள்ளம் போல் எங்கும் பனி மழை. துணிவென்னும் சுடர் நீங்கிப் பணிவு படர்ந்திருக்கும் மக்கள் மனத்தில் கவிந்திருக்கும் துன்பத் துருவைப்போல் எங்கும் இருள். கண்டித் தீவுக் குளத்தில் பனிமீது படர்ந்து விளையாடும் ஊதல் காற்றின் சோவென்ற மெல்லிரைச்சல் மக்களின் மனக்குமுறல்போல் இசைந்து கொண்டிருந்தது. அவ்வேளையில் 'டக் டக்' என்ற ஒலி மட்டும் எங்கிருந்தோ கேட்டுக் கொண்டிருந்தது.

அச்சத்தம் ஒரு பாரசீக வெண்புரவியின் காலடியோசை. அதன்மேல் ஆஜானுபாகுவான ஓர் உருவம். யாரென்று இருளில் சரியாகத் தெரியவில்லை. வெகு நேரம் கண்டிமா நகரைச் சுற்றி வந்த அப்புரவி இப்பொழுது மாவலி நதி தீரத்தின் வழியாகச் சென்று கொண்டிருந்தது. வெண் மணலில் குதிரைக் குளம்புகள் பட்ட இடமெல்லாம் பெரும் குழிகளாகக் காணப்பட்டன. இதிலிருந்து புரவியில் போகிறவன் கோபத்தோடு செல்கிறான் என்று உணர முடிந்தது. ஆற்றின் எதிர்த் திசையாக அந்தப் புரவி வெகுதூரம் வந்துவிட்டது.

ஓரிடத்தில் குதிரை நின்றது. அவ்வுருவம் குதிரையைப் பக்கத்தில் உள்ள மரத்தில் கட்டி விட்டுப் பற்றைகளை விலக்கிக் கொண்டு நடந்து சென்றது.

மாவலி கரை முழுதும் சீலை விரித்தது போல் எங்கும் கூடாரங்கள். கூடாரங்களுக்கருகில் தீ மூட்டப்பட்டிருந்ததின் அடையாளமாகச் சிற்சில குழிகளில் புகை கிளம்பிக் கொண்டிருந்தது. அது கண்டி மாநகர மக்களின் மனம் போல் கனன்று கொண்டிருந்தது. கூடாரம் அத்தனையிலும் மரண அமைதி நிலவியது.

வந்த உருவம் ஒரு பெரிய கூடாரத்தின் திரையை நீக்கி உட்புகுந்தது. அங்கு வைக்கப்பட்டிருந்த விளக்கின் மங்கிய ஒளியில் அது யாரென்று நம்மால் கணிக்க முடிகிறது. அவன் மணிபல்லவன். என்ன சிங்களத் தீவினில் பல்லவனா, தமிழனா? ஆச்சரியம் வேண்டாம். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் பல்லவச் சக்கரவர்த்தி இலங்கைக்கு ஒரு படையனுப்பினார் அல்லவா; அதன் எஞ்சிய வாரிசுகளில் ஒரு சிறு பிண்டம்தான் இந்த மணிபல்லவன்.

உள் நுழைந்த மணிபல்லவன் கூடாரத்தை ஒரு முறை நோட்டம் விட்டான். ஒரு கட்டிலில் ஒரு பெரிய மனிதர் உறங்கிக் கொண்டிருந்தார். அவரது தலைமாட்டில் ஒரு சிறு அலங்கார மேடை. ஆ...அதோ இருக்கிறதே பல்லவன் தேடி வந்த பொருள். ஆம்! அது ஓர் ஓலை. பல்லவன் மெதுவாக அதை எடுத்தான். விளக்கின் மங்கிய ஒளியில் அதைப் படித்தான். அவன் முகத்தில் கோபக் கனல் பறந்தது.

ஓலையைச் சுருட்டிக் கையிலெடுத்துக் கொண்டு மணிபல்லவன் வெளியேறினான். பொழுது புலரப் போகிற அடையாளமாக வானத்தில் விடி வெள்ளி பூத்திருந்தது. கூடாரத்தில் உள்ளவர்கள் விழித்து விடுவார்கள் என்று மெதுவாக நடந்தான். புகைந்து கொண்டிருந்த குழிகளின் மேல் நாட்டப்பட்டிருந்த கழிகளில் இறைச்சி வறுக்கப்பட்டதன் நிண நாற்றம் எழுந்தது. அவைகளைத் தன் கால்களினால் உதைத்து நெருப்பில் தள்ளினான். கட்டிருக்குமே அவன் கால்கள்? அது அவன் பட்டிருக்கும் வேதனைகளைவிட ஒன்றும் பெரிதல்ல. மெல்ல மெல்லப் பதுங்கி வந்த அவன் தன் குதிரை கட்டியிருந்த இடத்தை யடைந்தான்.

''இந்திரா! நல்லவர்கள் நினைப்பதுதான் நடப்பதில்லை போலும்.'' குதிரையுடன் பேசினான் பல்லவன். குதிரை கனைத்திருக்கும். ஆனால், கூடாரத்தில் உள்ளவர்கள் விழித்துக்கொண்டு விட்டால் தலைவன் பிடிபட்டு விடுவானே என்ற பயத்தால் தயங்கி விட்டது. சோர்வுடன் குதிரைமீதேறித் தென் திசையில் தட்டிவிட்டான் மணிபல்லவன்.

ஆங்கில சாம்ராஜ்யத்தை உலகெங்கும் பரப்பி வந்த வெள்ளையர்கள், கிழக்கு நாட்டிலே நல்லதொரு ராஜ்யமான இந்தியாவைக் கைப்பற்றினர். அதைக் கட்டிக் காப்பதற்குத் தடையாக இருந்தனர் பிரஞ்சுக்காரர். அவர்களை ஓட்டிவிட வேண்டுமானால் ஈழத்தில் ஒரு கடற்படைத்தளம் தேவையாக இருந்தது. அந்த ஆசை 1796-ல் நிறைவேறிவிட்டது. திருமலை சிறந்த கடற்படைத் தளமாக மாற்றப்பட்டது. அது நடந்து பன்னிரண்டாண்டுகள் ஓடிவிட்டன.

மறுநாள் பொழுது புலர்ந்தது. ஆனால் கண்டி நகர மக்கள் மனம் மாத்திரம் புலரவில்லை. ஆதவனது பொற்கிரணம் கன்னென்று பட்ட பிறகுதான் சிலர் வேண்டா வெறுப்பாக எழுந்தனர். சிலர் எழவேயில்லை. அப்படி யெழுந்தவர்களில் ஒருவர் 'கனுகுமார தேவதாகே செம்மப் பெருமாள்' என்பவர். கண்டி ஆங்கிலேயர் வசப்பட்டதும் அவரும் துன்ப வசப்பட்டு விட்டார்.

பழக்கத்தினால் காலையிலெழுந்து தீவுக் குளத்தின் கால்வாயில் தம் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு தளதா மாளிகையை நோக்கிச் சென்றார். ஒவ்வொரு படியாகத் தள்ளாடித் தள்ளாடி வந்த அவர் புத்த தந்தம் வைக்கப்பட்டிருந்த பிராகாரத்துக்குள் நுழைந்தார். ஓரிடத்திலாவது ஒரு பிக்குவையும் காண முடியவில்லை. எங்கும் அமைதி

நிலவியது. கலுகுமாரர் புத்த தேவனின் திரு உருமுன் நெடுஞ்சாண்கிடையாக வீழ்ந்தார். அவரது கண்களில் நீர் ஆறாகப் பெருகியது. மெள்ளத் தலையைத் தூக்கி எழுந்தார். புத்தபிரானின் முன்னிருக்கும் பொன் தந்தத்தைக் கட்டிப் பிடித்தார். இதுவரை கட்டி வைத்திருந்த துயர வெள்ளம் பெருக்கெடுக்கத் தொடங்கியது. தந்தத்தைப் பிடித்தவாறே 'ஓ'வென்று அலறிவிட்டார். ''அஹிம்சை அறம் காக்க அவனியிற் பிறந்த புத்த தேவா, உன் அன்புக்குப் பாத்திரமாய் நாங்கள் வாழ்வது உனக்குப் பொறுக்கவில்லையா? அடுத்து அடுத்து எமக்குத் துன்பத்தையே தருகிறாயே. இது சரியா? நாங்கள் உன் அன்பு வழி நடப்பது உனக்குப் பிடிக்கவில்லையா? புத்ததேவா, அதோ பார்! மார்கழி மாதத்தில் பனி வென்றும் பாராது புது மலர் கொய்து உன் பாதம் சூட்டும் மகளிர் மானம் காக்க மறைந்து வாழ்கின்றனர். உன் திரு உருமுன் பல்லாயிரம் பேர் கூடி ஆராதிக்கும் இந்நேரத்தில் நான் ஒருவன் மாத்திரம் இங்கிருந்து அலறுகிறேனே, என் செய்வேன்: என்னால் முடியவில்லையே அந்த வெள்ளையர்களை எதிர்க்க!'' என்று ஓலமிட்டார்.

என்ன நினைத்தாரோ, கண்ணீரைத் துடைத்துக் கொண்டு மன்னன் விக்கிரம ராஜசிங்கன் சிலைக்கு முன் வந்து நின்றார். அவர் வாய் பேசியது. ''வீரத்தின் விளைநிலமே! அந்நிய ஆட்சியில் நாம் அடிபணிவதா என்று வீறு கொண்ட இளவலே! நீ மறைந்துவிட்டாய். மண்ணோடு மண்ணாகி விட்டாய். நாம் படும் துன்பத்தைப் பார்க்காமலேயே சென்று விட்டாய். இறுதிக் காலத்தில் நீ கண்டியர்களைத் துன்புறுத்தினாலும், உன் உண்மை வீரம் என்னைக் கவருதடா மகனே! நீ தமிழனானும், சிங்களவர் மீதும், புத்த தேவன் மீதும் கொண்ட அன்பும் அருளும் உன்னிடம் என்னை ஈர்க்கின்றன. காட்டிக் கொடுத்த துரோகி எல்லேப்பொல என் இனம். ஆனால் தன் உயிரையும் திருணமாக மதித்து உளவறியச் சென்றிருக்கிறானே மணிபல்லவன், அவன் உன் இனம்'' என்றார் உணர்ச்சி வசப்பட்டு.

இந்நேரத்தில் வெளியில் நகருக்குள் பேரிரைச்சல் கேட்டது. ஏதோ கண்டவர்கள்போல் மக்கள் கூச்சலிடுவது கேட்டது. கலுகுமாரர் தளதாவின் சாளரங்களை விரியத் திறந்து வெளி நோக்கினார். மக்கள் பிரளயம் போல் திரளாக வந்து கொண்டிருந்தனர். தீவுக் குளத்தின் இரு கரையிலும் மக்கள் வெள்ளம் குழந்தைகள், பெரியவர்கள், பெண்டிர்கள் எல்லாரும் புனிதப் பல் கோயிலை நோக்கி வந்து கொண்டிருந்தனர். அவர்களுக்கு முன்னால் மணிபல்லவன் குதிரைமீது தளர்ந்து வந்து கொண்டிருந்தான். அந்த வீரப் பெருமகன் என்ன கொண்டு வந்தான் என்று அறியத்தான் மக்கள் வெள்ளம் போல் வந்து கொண்டிருந்தனர்.

மணிபல்லவன் குதிரையை விட்டிறங்கிக் கலுகுமாரர் இருந்த உப்பரிகையை அடைந்தான். அதில் திறந்திருந்த ஒரு சாளரத்தின் அருகில் வந்து நின்றான். குழுமியிருந்த ஜனப் பிரளயத்தைப் பார்த்து ஒரு முறை கண்ணீர் விட்டான். பிறகு பேசினான்: ''கண்டி நகர்ப் பெருங்குடி மக்களே! தீங்கு நினையாதவர்களைத்தான் தீங்கு சூழும் போலும். அஹிம்சைத் தத்துவத்தில் வாழ்ந்து வரும் எனக்குச் சோதனைக்கு மேல் சோதனை. அன்பு வழியில் ஒருவர்க்குத் தீங்கு நினையாத எம்மைக் காட்டிக் கொடுத்து விட்டார்கள் சிலர். மன்னர் விக்கிரம ராஜசிங்கனைக் காட்டிக் கொடுத்தான் துரோகி எல்லேப் பொல. இதோ அதன் பலன்; நாம் ஆங்கிலேயனுக்குக் கைகட்டிச் சேவகம் புரிகிறோம். எங்கிருந்தோ வந்தவன் நம்மை ஆள்கிறான். கண்டி நகர்ப் புத்த தேவன் கண்ணீர் சிந்துகிறான். இந்நேரத்தில் ''மொனிகொட'' என்பவன் எம்மை, எமது புத்ததேவனின் புனிதப் பல்லைக் காட்டிக் கொடுத்து விட்டான். கண்டியச் சம்பிரதாயப்படி புனிதப் பல் எவரிடம் இருக்கிறதோ அவரே மன்னர். இதுவே நமது பழம் பண்பு. இந்த இரகசியத்தை மொனிகொட ஆங்கில கவர்னர் பிரௌன்றிக்கிடம் கூறி விட்டான். எனவே படை ஆயத்தமாக்குகிறான் பிரௌன்றிக். இது மாத்திரமல்ல; மொனிகொட தனது ராஜ்யத்தில் ஆங்கிலேயர்க்குப் படைத் தளமும் கொடுத்து விட்டான். நான் என் கண்ணால் அவற்றைக் கண்டேன்'' என்று உணர்ச்சி வசப்பட்டுப் பேசினான்.

''கண்டிநகர்ச் சிங்கங்களே! உண்மை வீரம் என்றும் அழி



யாது. கண்டி மாநகர் இதுவரை எவனுக்குமே அடிபணிந்ததில்லை. வீரர்கள் பிறந்த 'வீரத் தின் விளை நிலம்' நம் தாய்த்திரு நாடு.'' அவன் பேச்சில் கனல் பறந்தது... ''நம் உடம்பில் ஒருதுளி இரத்தம் இருக்கும் மட்டும் புத்தரின் புனிதப் பல் அந்த எத்தரின் கைக்குச் செல்வதா? சிங்களத்துச் சிங்கங்களே! திரண்டெழுங்கள். பகைவரைப் பங்கு போடுங்கள். பந்தாடுங்கள், அவர்கள் தலைகளை!'' என்று வீர கர்ஜனை புரிந்தான் அந்தத் தமிழ் மகன்.

அவன் மார்பு விம்மியது. புயங்கள் இரண்டும் நிலவெடுத்துத் திமிறின. கூட்டத்தில் உள்ள பெண்களும் பிள்ளைகளும் யந்திரம் போல் தங்கள் வீடுகள் நோக்கிச் சென்றனர். எஞ்சிய கண்டியர்கள் மந்திரத்துக்குட்பட்டவர்கள் போல் யுத்த உடையுடன் நின்றனர். கலகப்படை தயாராகி விட்டது. இவற்றைத் தூரத்தில் நின்று கவனித்துக் கொண்டிருந்த கலுகுமாரர் மணிபல்லவன் அருகில் வந்தார்.

''மணீ! நீ ஏன் இந்த முடிவுக்கு வந்தாய்? போன காரியம் என்ன?'' என்றார்.

''பிரபுவே! வெள்ளம் தலைக்கு மிஞ்சி விட்டது. மொலிகொட புனிதப் பல்லிருக்கும் இடத்தைக் காட்டிக் கொடுத்து விட்டான். இதோ அவன் எழுதிய ஓலை. இதை நான் ஆங்கிலேயர்களின் கூடாரத்திலிருந்து அபகரித்தேன். இதை இன்னும் கவர்னர் பிரௌன்ரிக் வாசித்திருக்க மாட்டான். அவனுக்குச் சிங்களம் தெரியாது. காலையில் தான் இதை வாசிக்க எண்ணி விருப்பான்'' என்றான் மணிபல்லவன்.

கலுகுமாரரின் கண்களில் நீர் மல்கியது. ''பல்லவா! உன் இனம் எங்களுக்குச் செய்திருக்கும் நன்றிக்கு என்ன கைம்மாறு செய்வேன்! சுமார் ஆயிரம் வருடங்களுக்கு முன்னர் எங்கள் மானவர்மன் உதவி கேட்டதும் உவந்து கொடுத்தாரே உன் மூதாதை நரசிம்ம பல்லவர். அந்த நன்றியையும், நீ செய்யும் இந்த நன்றியையும், எம் மினம் என்றுமே மறவாது; மணி பல்லவா!'' என்று கூறிக் கொண்டே அவனை இறுகத் தழுவினார். சிங்களத் தீரமும், தமிழ் வீரமும் உணர்ச்சியால் ஒன்றின. அவைகளைப் பிரிக்க ஒரேயொரு குரலால் மாத்திரம்தான் முடிந்தது.

''அப்பா!''

கலுகுமாரர் தலையை நிமிர்த்திக் குரல் வந்த திக்கை நோக்கினார். அங்கே கலுகுமாரரின் செல்வ மகள் விஜயதேவி அழகுப் பதுமையாக நின்று கொண்டிருந்தாள்.

''என்னம்மா?'' என்றார் கலுகுமாரர்.

''ஒன்றுமில்லை. உங்களை வீட்டில் காணவில்லையென்று தேடி வந்தேன்'' என்றாள்.

''என்னம்மா இப்போது கூடவா அப்பன் மீது அன்பு? இன்றோ, நாளையோ என்று கண்டியர் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள். இதையறியாமல் நீ என்னையே நினைத்துக் கொண்டிருக்கலாமா?''

''இல்லையப்பா. அம்மா உங்களை அழைத்து வரச் சொன்னார்கள்'' என்றாள் விஜயதேவி.

''சரி, போகிறேன். மணிபல்லவனோடு பேசிக் கொண்டிரு'' என்று சொல்லி விட்டுத் தளதாவின் படிகளில் இறங்கி நடந்தார்.

சிலைபோல் நின்று கொண்டிருந்த மணிபல்லவன் விஜய தேவியையே வைத்த கண் வாங்காது பார்த்துக் கொண்டிருந்தான். அவன் விழிக்கடையில் இரு துளிக் கண்ணீர் தளும்பி யோடியது.

''அத்தான! ஏன் அழுகிறீர்கள்?'' என்று கேட்டாள் விஜயதேவி.

மயக்கத்தால் விடுபட்டவன் போல், ''ஒன்றுமில்லை விஜயா! இந்த அழகை என்றுமே என்னால் கண்டு





கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ் வளர்த்த பெரியார் ரசிகமணி டி. கே. சி. அவர்கள். குற்றாலத்தில் வீற்றிருந்து தம் வாழ்நாளெல்லாம் தமிழுக்கும் தமிழ்க் கலைக்கும் அருந் தொண்டாற்றியவர் அவர். திருக்குற்றாலத்தில் அவர் வாழ்ந்திருந்த இல்லத்தைக் குற்றாலநாதசுவாமி கோயில் தேவஸ்தானத்தார் அவர் நினைவு இல்லமாக்கி அதில் ஒரு நூல் நிலையத்தையும் நிறுவ முன்வந்தது பாராட்டுக்குரிய விஷயம். ரசிகமணி நினைவு இல்லத்தில் அவரது திருவுருவப் படத்தைப் பிப்ரவரி 6ந் தேதி திரு சிதம்பரம் பிள்ளை திறந்து வைத்தார்கள். திரு தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் இவ்விழாவுக்குத் தலைமை வகித்துச் சிறப்பித்தார். குற்றாலத்து முனிவர் டி. கே. சி. அவர்களின் தமிழ்த் தொண்டையும் விருந்தோம்பலையும் பற்றிப் பல அன்பர்கள் எடுத்துரைத்தார்கள்.

---

இன்புற முடியுமா என்று எண்ணினேன்...'' என்றான் கண்ணீரைத் துடைத்துக்கொண்டே.

'' அதற்காகவா கண்ணீர் ?''

'' இல்லை, தமிழனுடைய என் மீது நீங்கள் காட்டும் அன்பை நினைத்ததும் கண்ணீர் வந்தது '' என்றான் மணிபல்லவன்.

'' அத்தான்! உங்களுக்காக நாங்கள்தான், கண்டி நகர மக்கள்தான் கண்ணீர் விட வேண்டும். அதோ பாருங்கள். உங்கள் ஒரு சொல்லுக்குக் கீழ்ப்படிந்து கண்டி மக்கள் போர்க்கோலம் பூண்டு நிற்பதை !'' என்று சாளரத்தின் வழியாகச் சுட்டிக்காட்டினாள்.

பல்லவன் அவள் காட்டிய திசை வழியே பார்த்தான். கண்டிக் கலகப்படை தயாராக நின்றது. அப்போது ஒரு குதிரை வீரன் வேகமாக வந்து கொண்டிருந்தான். குதிரையை மாளிகை வாயிலில் நிறுத்தி விட்டுப் படிகள் வழியாக ஏறி வந்தான். மணிபல்லவனுக்குத் தன் வணக்கத்தைத் தெரிவித்து விட்டு, '' பிரபு நம்மவர்கள் அவசரப் பட்டு விட்டார்கள். ஒற்றுமையைக் குலைத்து விட்டார்கள். தனித்தனியாகக் கலகம் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். ஊவா மாகாணத் திலும், சப்தகோரளையிலும், நாலுகோரளை யிலும், மூன்று கோரளையிலும் கலகம் ஆரம் பித்து விட்டார்கள். வெல்லஸையில் ஆங்கி லேயரால் நியமிக்கப்பட்டிருந்த முஸ்லிம் தலைமைக்காரனைக் கலகப்படை கொன்று விட்டது. ஆங்கிலேயக் காரியாலயத்துக்குத் தீயிட்டு விட்டார்கள். இது மாத்திரமல்ல; ஊவா மாகாணத்தில் ஒருவன் நான்தான் 'கண்டிய அரசனின் வாரிசு' என்று கூறிக் கொள்கிறானும். மக்கள் அவனைத் தலைவ னாகக் கொண்டு கலகம் செய்கிறார்களாம். அவன் யாருமல்ல; ஊவா டகபாவிலுள்ள ஒரு புத்த பிக்குதான். கலகத்தை அடக்க கவர்னர் படை அனுப்பி விட்டான்'' என்று மூச்சுத் திணறக் கூறி முடித்தான்.

'' நண்பா ! எத்தனை காலம்தான் மக்கள் என்னும் உன்னத சக்தியை அடக்கியாள முடியும்? உள்ளிருந்து கனிந்து கொண்டிருக் கும் கங்கு மீது லேசாகக் காற்றுப்பட்டாலும் பற்றி எரியத்தானே செய்யும். ஆனால் என்ன செய்ய ? அவசரப்பட்டு விட்டார்கள். மக்கள் சக்தியை எல்லாம் ஒன்றாக்கி ஆங்கிலேயரை எதிர்க்க எண்ணினேன். நாம் எண்ணியதைக் கெடுத்து விட்டார்கள். சரி, பரவாயில்லை.'' பல்லவன் திரண்டு நின்ற போர்வீரர்கள் பக்கம் திரும்பினான். ''வீரர்களே! நம் தீரத் தைக் காட்ட வேண்டிய நேரம் நெருங்கி விட்டது. கடைசி மூச்சு இருக்கும் வரை புனிதப் பல்லைக் காப்பாற்றப் போரிடுங்கள். முடிந்தால் வெற்றி பெறுவோம். இல்லா விட்டால் செத்து மடிவோம். நமது நண் பர்கள் கலகத்தைத் தொடங்கி விட்டனராம். எனவே நீங்களும் ஆரம்பியுங்கள், சுதந்திரப் போராட்டத்தை. ஆங்கிலப் படை வரு வதற்கு முன் இங்குள்ள ஆங்கிலக் காரியா லயத்தைத் தகர்த்து விடுங்கள்'' என்று உத்தர விட்டான். படை நகர்ந்தது.

'' அத்தான்! நீங்களுமா போகப் போகி றீர்கள்? இன்று உணவருந்த வில்லையே. இன்றிரவு தங்கி நாளை போகலாமே !''

'' விஜயா ! பெண்கள், தங்களுக்குரிய பேதைமையை முடிவில் காட்டியே விடு கிறார்கள். மக்கள் வெறுப்புணர்ச்சி என் னும் எரி பதார்த்தத்தின் மீது ஆங்கி லேயர் கொள்ளி செருகி விட்டனர். ஆகவே மக்கள் என்னும் நெருப்பு கொழுந்து விட் டெரிகிறது. அதோ பார்! நம் வீரர்கள் ஓடு

# மேலான வாழ்க்கைக்கு மேன்மையான தயாரிப்புகள்

தரத்திற்கும் குறைந்த விலைக்கும் பெயர்போன நேஷனல்-எக்கோ ரேடியோக்களும் க்ளியர்டோன் தயாரிப்புகளும் நீங்கள் இஷ்டம் போல் தேர்ந்தெடுத்துக் கொள்ள விதவிதமானவை கிடைக்கின்றன.



## நேஷனல் எக்கோ

### ரேடியோக்கள்



**நேஷனல்-எக்கோ மாடல் U-717:** 5 வால்வுகளும் 3 பாண்டுகளும்கொண்ட இந்த ஏஸி/டிஸி ரேடியோவில் பெரிய நேஷனல்-எக்கோ செட்டுகளில் உள்ள சில அம்சங்கள் அடங்கியுள்ளன. மான்ஸூன் ஸீல் செய்யப்பட்டது. ரூ. 250/- நெட்



**நேஷனல்-எக்கோ மாடல் A-731:**
இந்த "சிறு பிரமுக்" ரேடியோ, 7 வால்வுகளும் 5 பாண்டுகளும் கொண்ட சிறந்த ஏஸி செட். தெளிவாக ஒலியை ரசிக்கக்கூடியது. ஆர்.எப்.ஸ்டேஜுக்கு ட்யூன் செய்யப்பட்டது. வெளி லௌட் ஸ்பீக்கரும் கிராமபோன் பிக்கப்பும் இணைக்க வசதியுள்ளது. "மான்ஸூன்ஸீல்" செய்யப்பட்டது. ரூ. 625/- நெட்

## Kleertone

### க்ளியர்டோன் லாம்புகளும் உபகரணங்களும்



**க்ளியர்டோன் வாட்டர் பாயிலர்:**
வெந்நீர் மற்றும் தணிக்கும் ஜலம் வெகுசீக்கிரத்தில் தயார் செய்யக் கூடியது. ஸைஸுகள்: 3.5 காலன் மற்றும் 8 காலன். ஏஸிகரண்டில் இயங்குகிறது.



**க்ளியர்டோன் வீட்டு இஸ்திரிப்பெட்டி:**
7 ராத்தல் எடை, 230 வோல்ட்ஸ், 450 வாட்ஸ். ஏஸி/டிஸி பேக்லைட் பிடி. பிரத்தியேகமான பட்டன் க்ருவ்கள்.



**க்ளியர்டோன் பல்புகள் ப்ளோரஸன்ட் ட்யூபுகள் மற்றும் உபகரணங்கள்:**
சிக்கனமானவை; பிரகாசமான ஒளிகொடுக்கச் சிறந்தவை.



**க்ளியர்டோன் எலக்ட்ரிக் கெட்டில்:**
மூன்று பைன்ட் பிடிக்கக் கூடியது. க்ரோமியம் மூலாம் பூசப்பட்டது. 230 வோல்ட்ஸ், 750 வாட்ஸ். ஏஸி/டிஸி.



**க்ளியர்டோன் ட்வின் ஹாட் ப்ளேட்டுகள்:**
சமையலுக்கு. இரண்டு ஹாட் ப்ளேட்டுகளுக்கும் தனித்தனி கன்ட்ரோல்கள் உள்ளன. 230 வோல்ட்ஸ். ஏஸி/டிஸி 3,500 வாட்ஸ்வரை மின்சாரப் பளுவைத் தாங்கக்கூடியது.



**க்ளியர்டோன் மடக்கு ஸ்டீல் நாற்காலிகளும் மேஜைகளும்:**
விதவிதமான வர்ணங்களில் கிடைக்கும். மிகுந்த கச்சிதமும் அமைப்புடன் கூடிய நாற்காலிகள். மெத்தையுடனோ அல்லது இல்லாமலோ கிடைக்கும்.



**ஜெனரல் ரேடியோ அண்டு அப்ளையென்ஸஸ் பிரைவேட் லிட்.**
ஆபெரா ஹவுஸ், பம்பாய்-4 • 3 மதன் ஸ்ட்ரீட், கல்கத்தா-13 • ப்ரேஸர் ரோட், பாட்னா • 1/18, மவுண்ட் ரோட், மதராஸ்-2 • 36/79, ஸில்வர் ஜுபிலி பார்க் ரோடு, பெங்களூர் • ஜோக்கியல் காலனி, சாந்தினி சௌக், டெல்லி • ராஷ்டிரபதி ரோட், செகந்திராபாத்

வதை. இனி எனக்கு இங்கென்ன வேலே? வருகிறேன். உயிர் இருந்தால் சந்திக்கிறேன்'' என்று கூறி விட்டுப் படிகளில் இறங்கிக் கலகக்காரர்களுக்குப் பின் ஓடினுன். உப்பரிகையிலிருந்த படியே அவனை வைத்த விழி வாங்காது நோக்கினுள் விஜயா.

எங்கும் மரண ஓலம். சிங்களவரும் தமிழரும் ஆங்கிலேயரைக் கண்ட இடத்தில் வெட்டிக் குவித்தனர். ஆனல் ஆங்கிலத் தலே ஒன்று கீழே விழும்போது பத்து கண்டியர், மண் மீது சரிந்தனர். ஆங்கிலேயரின் பீரங்கிக்கு முன் கண்டியர் வாள் எம்மாத்திரம்!



திரு எம். கே. தினச்சந்திரன் எம். பி. அவர்களின் புதல்வி சௌ சபிதா தேவிக்கும் ராவ்சாஹேப் திரு ஜெயகீர்த்தி அவர்களின் புதல்வர் திரு வஸந்த குமாருக்கும் பிப்ரவரி 5-ந் தேதி கள்ளிக்கோட்டைக் கடுத்த கல்பெத்தாவில் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்துக்கு நண்பர்களும், பிரமுகர்களும் விஜயம் செய்து சிறப்பித்தனர். வாழ்க, மணமக்கள்!

''மகனே!'' என்று ஓர் ஓலம். ஆங்கிலேயருடன் தீரமாகப் போராடிக் கொண்டிருந்த மணிபல்லவனை ஓர் உலுக்கு உலுக்கியது. உணர்ச்சிப் பெருக்கால் ஒரு கணம் திணறினுன். இறந்து போன தன் தாயின் குரல் போன்று கேட்டது. போரை விட்டுச் சத்தம் வந்த திக்கை நோக்கி ஓடினுன். முடிந்தவரை பிணக் குவியல்களை மிதிக்காமல் ஓடினுன். ஓரிடத்தில் ஒரு பச்சிளம் மதலே பசியால் வேறு ஒரு தாயின் கட்டை விரலைப் பாலுக்காகச் சப்பிக் கொண்டிருந்தது. இந்தக் கொடூரக் காட்சி அவன் மனத்தை உலுக்கியது.

அம் மதலேக்கு அருகில் சண்டையிட்டுக் கொண்டிருந்த ஓர் ஆங்கில வீரன், மணிபல்லவனே நோக்கித் தனது வாளை வீசினுன். ஆனல், அது தவறி அப் பச்சிளங் குழந்தையைக் கொல்லப் போகிறதே! ஐயோ! மின்னல் வேகத்தில் மணிபல்லவன் தன் கால்களைக் குழந்தைக்கருகில் நீட்டினுன். 'சதக்'. அவனது திண்மை பெற்ற வலக் கால் துடையில் வாள் பாய்ந்து விட்டது. பல்லவன் குழந்தையை வாரியணைத்துக் கொண்டு இரத்தம் பெருகுவதையும் பொருட்படுத்தாமல் வேகமாக ஓடினுன்.

நடு நிசி. எங்கும் பிணக்காடு. ரணநாற்றம். செவ்விரத்தமும் கருஞ் செவ்விரத்தமும் கலந்து. அருவி போல் திவுக் குளத்தில் விழுந்தது. பார்க்கப் பயங்கரமாக இருந்தது அவ்விரவு.

அப்போது கண்டி மாநகர மக்களில் எஞ்சியோர் தங்கள் உடைமையோடு கண்டியை விட்டு மலைப் பகுதிக்கு வெளியேறிக் கொண்டிருந்தனர். காரணம் கவர்னர் பிரௌன் றிக் பெரும் படையுடன் வருகிருன் என்பது தான். இனியும் கண்டியில் பெரியவர்கள், பெண்டிர்கள், குழந்தைகள் இருப்பின் கண்டிப் பரம்பரையே அற்றுப் போய்விடும் எனப் பயந்தார் கலுகுமாரர். எனவே அவர்களைப் பாதுகாப்பான இடத்தில் வைக்க மணிபல்லவனும், கலுகுமாரரும் தீவிரமாக முனைந்தனர்.

கண்டிய மக்கள் கண்டியை விட்டு வெளியேறிக்கொண்டிருந்தனர். கலுகுமாரர் தனது மாளிகையை ஒரு முறை உணர்ச்சி பொங்கப் பார்த்து விட்டுத் திரும்பி நடந்தார். அவர் பின்னல் விஜயதேவியும், அவள் தாயாரும் நடந்தனர். விஜயாவின் கையில் காலேயில் மணிபல்லவன் காப்பாற்றிய குழந்தை இருந்தது. மணிபல்லவனது தோளில் நடக்க முடியாத ஒரு முதியவர். அவரைத் தூக்கிக் கொண்டு, காலில்பட்ட காயத்தின் வழியாக இரத்தம் கசிய நடந்து கொண்டிருந்தான்.

விஜயாவின் பட்டுக் கரங்களால் அப்பிய ''பற்று'' அதில் ஒட்டிக் கொண்டிருந்தது. ஒரு சிங்களப் பெண் ஒரு தமிழ் மகன்மீது கொண்டிருக்கும் அன்புதான் எத்தகையது? தள்ளாடி நடந்து கொண்டிருந்த மணிபல்லவனைப் பார்த்து விஜயா முத்து முத்தாகக் கண்ணீர் உகுத்தாள்.

"விஜயா, ஏன் அழுகிறாய்?"

"இவ்வளவும் பார்த்த பிறகு சிரிக்கவா சொல்கிறீர்கள்?"

"இறப்பைக் கண்டு மனிதன் அழக்கூடாது, தேவி! தெரியுமா?"

"தனக்கு வந்தால் தாங்கிக் கொள்ளலாம். ஆனால் பிறர்க்கு வரும் போது பேதை நெஞ்சு நெகிழ்கிறதே" என்றாள்.

முன்னால் வழிகாட்டிச் சென்றுகொண்டிருந்த வீரர்கள், "நில்லுங்கள்; மகாவலி கங்கை வந்து விட்டது" என்று சத்தமிட்டார்கள். மாவலி கங்கை குருதி ஆறுபோல் செம்மண் கலந்து ஓடிக்கொண்டிருந்தாள். ஆற்றைக் கடப்பதற்குப் போடப்பட்டிருந்த சிறு ஆடுபாலம் வரையும் வெள்ளம் உயர்ந்து விட்டது. அரசியல் சோதனைகளுக்கிடையில் இயற்கை அன்னையும் கண்டியரைச் சோதித்தாள்.

பாலத்தின்மீது இவ்வளவு பேரும் ஒருமித்துச் செல்வது முடியாத காரியம். பாலத்தைப் பிணைத்துக் கட்டப்பட்டிருந்த மரம் வெள்ளத்தால் அரிபட்டுச் சரியும் நிலையிலிருந்தது. எப்படியாவது பிரௌன்றிக்கின் படை வருவதற்கு முன் ஆற்றைக் கடந்துவிடவேண்டும் என எண்ணினான். 'டுமீல்' என்ற துப்பாக்கிச் சத்தம் பிரௌன்றிக் வந்து விட்டான் என்பதை அறிவுறுத்தியது. மக்கள் கூட்டம் சீக்கிரம் ஆற்றைக் கடக்க முனைந்தது. இரவானபடியால் மக்கள் இருப்பது பிரௌன்றிக்கின் படைக்குச் சரியாகத் தெரியவில்லை.

எல்லாரும் அக்கரை யேறிவிட்டனர். எஞ்சியோர் கலுகுமாரர், விஜயதேவி, அவள் தாய், குழந்தை, மணிபல்லவன் இன்னும் இரு வீரர்கள். இத்தனை பேரும் அக்கரை சேர்ந்தபின் பாலத்தை வெட்டி விட்டால் படை தடைப்படும். அப்போது கண்டிக்குள் பதுங்கியிருக்கும் கலகப்படையால் ஆங்கிலப் படையை முறியடிக்கலாம் என்று எண்ணியிருந்தான். படை நெருங்கி வந்துவிட்டது. இனியும் தாமதித்தால் படையின் கண்களுக்கு அகப்பட வேண்டியதுதான். எனவே எஞ்சியவரை அக்கரை சேருமாறு பணித்தான். கலுகுமாரரை மாத்திரம் தனியாக அழைத்துத் தன் மடியில் பட்டுத் துணியால் சுற்றப்பட்டிருந்த புனிதப் பல்லை எடுத்துக் கொடுத்தான்.

"இதுவரை காப்பாற்றித் தந்து விட்டேன். இனி காப்பது உங்கள் பொறுப்பு" என்று கூறினான் மணிபல்லவன். கலுகுமாரர் உணர்ச்சிப் பெருக்கால் கண்ணீர் விட்டார். பேச வாயெடுத்தவரை, "நேரமில்லை, சீக்கிரம் செல்லுங்கள்" என்றான். பிரிய முடியாமல் பாலத்தின்மீது கலுகுமாரர் நடந்தார்.

"அத்தான்!"

"விஜயா, நீ போகவில்லையா? சீக்கிரம் போ. பாலத்தை வெட்டப் போகிறேன்."

"அப்போ நீங்கள்......"

"எனக்குக் கண்டியில் வேலையிருக்கிறது. நீ போ. நான் உன்னுடன் வந்து விட்டால் நம் படை என்னாவது? சரி சரி, சீக்கிரம் போ." அவளைப் பிடித்துத் தள்ளினான் மணிபல்லவன். கண்களில் நீர் வழியச் சோர்ந்தபடியே நடந்தாள் விஜயா.

"சீக்கிரம் ஓடு, விஜயா!" என வாய்விட்டு அலறி விட்டான். பிரௌன்றிக்கின் படைகளுக்கு இது கேட்டுவிட்டது போதும். எனவே படை ஓடி வருவது போலத் தெரிந்தது. விஜயா அக்கரை சேர்ந்து விட்டாள். எஞ்சியிருப்பது மணிபல்லவன். பாலத்தை வெட்டிவிட்டால் கண்டி மக்கள் காப்பாற்றப்படுவர். அவன் வாளை உருவினான். ஓங்கி மரத்தில் கட்டப்பட்டிருந்த கயிற்றில் போட்டான். பாலத்தில் ஒரு பகுதி அறுந்தது. மற்றக் கயிற்றின் மீது வாளை வீசினான். அப்போது...

மகனே!

அதே தீனக் குரல். இறந்த தனது தாயினது போன்ற குரல். காலையில் போர்க்களத்தில் கேட்ட குரல். ஆங்கிலப் படைக்குச் சற்று முன்னால் ஒரு பெண் தலைவிரிகோலமாய் ஓடி வந்தாள். அவளைக் காப்பது மணிபல்லவனின் பெரும் பிரச்னை. பாலத்தில் ஒரு கயிறை அறுத்து விட்டான். மற்றக் கயிற்றில் பாதி வெட்டப்பட்டு விட்டது. அவளை அக்கரை சேர்க்க வேண்டும். உடனே தன் இரு கால்களையும் மின்னல் வேகத்தில் மர வேரில் பின்னினான். இரு கைகளால் அறுந்த பாலத்தின் கயிற்றைப் பிடித்தான். பாலம் தயாராகிவிட்டது. ஓடி வந்த பெண்ணிடம், "தாயே, ஓடு!" என்று கத்தினான்.

அவள் ஓடினாள். அவளுக்குப் பின்னால் பிரௌன்றிக்கின் படை. இதோ பல்லவனின் மார்பு மீது கால் வைத்து விட்டது. இரவானபடியால் பல்லவன் பாலத்தின் பலகை போன்றிருப்பது தெரியவில்லை. ஆங்கிலேயர் படையின் இரும்பு லாடங்கள் பல்லவனின் மார்பைக் கிழித்தன. வலியையும் தாங்கிக் கொண்டு பேசாமலிருந்தான். இரத்தம் வழிந்தது. இதோ பிரௌன்றிக்கின் படையில் ஒரு பகுதி அக்கரை சேரப் போகிறது. சேர விட்டால் கண்டியர் கதி!

பல்லவன் தன் கால்களை வேரிலிருந்து கழற்றப் பார்த்தான். முடியவில்லை. காலையில் வெட்டுப்பட்ட இடம் பேயாக வலித்தது. நூற்றைம்பது பேர்கள் பாலத்தின் மீது இருப்பார்கள். அவ்வளவு பேரையும் தாங்கப் பல்லவன் பூதமல்லவே.

பாரம் ஏற ஏற மரத்தில் பின்னியிருந்த வலது கால் தொடை அறுந்தது. "ஐயோ! புத்ததேவா!" என்று அலறினான் பல்லவன். கால் அறுபட்டதோடு பிரௌன்றிக்கின் படை வீரரும் பல்லவனும் பொங்கி வரும் வெள்ளத்தில் வீழ்ந்தனர். இனிப் பிழைப்பதேது? பார்க்கச் சகிக்க முடியாத கோரக் காட்சியாக இருந்தது.

"விஜயா!" என்ற தீனக் குரலோடு மணிபல்லவனை மாவலித் தாய் அணைத்துக் கொண்டாள். "அத்தான்!" என்று மறுகரையில் இருந்த விஜயா அலறினாள்.

ஆனால் 'மகனே' என்ற தீனக் குரல், தன் தாயினது போன்ற குரல் மாத்திரம் தான் பல்லவனது காதில் விழுந்தது.

மாவலித்தாய் ஓர் உண்மை வீரனைத் தன் இரு கைகளாலும் அணைத்துக் கொண்டாள். அந்த வீரத்தின் விலை நிலத்தில் எங்கும் செங்குருதி பரவியது.

# 24-2-61 வெள்ளிக்கிழமை மகத்தான ஆரம்ப விழா

மாலை 6-30 மணிக்கு
உள்துறை அமைச்சர் கனம் எம். பக்தவத்சலம் பி.ஏ., பி.எல். அவர்களின் ஆதரவில்

**எஸ். ஐ. ஏ. ஏ. கிரௌண்டில்** (மூர்மார்க்கெட் பின்புறம்)

**இன்றும், இதர நாட்களிலும் இரண்டு காட்சிகள்:** மாலை 6-30; இரவு 9-30 மணிக்கு
**பிரதி சனி, ஞாயிறு மூன்று காட்சிகள்:** பிற்பகல் 3; மாலை 6-30; இரவு 9-30 மணிக்கு

லட்சோப லட்சம் மக்களின் மனங்களைக் கவர்ந்து, நாடு முழுவதும் வெற்றிக்கொடி நாட்டிவரும் சர்க்கஸ் குழுவினர் வெளிநாடுகளுக்குப் பிரயாணம் செய்யுமுன் சென்னைக்கு வருகிறார்கள்

# கிரேட் ஈஸ்டர்ன் சர்க்கஸ்

**( of 1961 )**




- தேர்ந்தெடுக்கப்பட்ட முந்நூறு வீர வாலிபர்களும், பெண்மணிகளும்.
- சாமர்த்தியமான பலவித சாகசங்கள் செய்யக் கற்பிக்கப்பட்டிருக்கும் ஏராளமான வனவிலங்குகள்.
- கடைசி வரையில் உற்சாகமூட்டும் பலவிதமான வேடிக்கை விநோதங்கள்.
- புகழ்பெற்ற ருஷிய சர்க்கஸ் வித்தைகள், மரண கோளம், மரண வலை, மெய்சிலிர்க்க வைக்கும் நூற்றுக்கணக்கான சாகசம் நிறைந்த அம்சங்கள்.

டிக்கட் விபரம்

| | | | | |
|---|---|---|---|---|
| பாக்ஸ் (5 பேர்) | ரூ. 20.00 | | முதல் வகுப்பு | ரூ. 2.25 |
| பாக்ஸ் (தனி நபர் ஒன்றுக்கு) | ரூ. 4.50 | | இரண்டாம் வகுப்பு | ரூ. 1.25 |
| டிரஸ் ஸர்க்கிள் | ரூ. 3.25 | | காலரி | ரூ. 0.65 nP. |

**தினசரி காலை 9 முதல் மாலை 7 மணி வரை ரூ. 20 (5 பேர்) ரூ. 4-50; ரூ. 3-25; ரூ. 2-25 ஸீட்டுகளுக்கு மாத்திரம் கொட்டகையில் முன்னதாகவே ரிசர்வ் செய்து கொள்ளலாம்.**

# மரகதச் சிலை

கதை: வாண்டுமாமா
சித்திரம்: வினு

மந்திரவாதி நீலகேசியின் சூழ்ச்சியால் ஆதித்தனிடமிருந்து பிரிக்கப்பட்டு, கானகத்தின் மற்றோர் பகுதியில் கொண்டுபோய் விடப்பட்ட உண்மையான நிர்மலா-என்ன ஆனாள் என்பதை இனிப் பார்க்கலாம். பறவைகளின் இன்னிசையால் கண் விழித்த அரசகுமாரி நிர்மலா, தான் தன்னந்தனியே இருப்பதைக் கண்டு திகைத்துப் போனாள். பின்னர் சுற்று முற்றும் பார்த்து...


















நினைவிழந்து கிடந்த நிர்மலாவின் அரு கில் வந்த சிங்கம் அவளை ஒன்றும் செய்யாமல் பக்கத்தில் அடங்கிப் படுத்துக் கொண் டது. கண்விழித்த நிர்மலா...


மிருகராஜாவே. அநாதரவான அபலை என்று அறிந்து என்னைக் கொல்ல மனம் வரவில்லையா உனக்கு?


யாருமற்ற எனக்கு இனி நீ தான் துணை. அதோ... அங்கே அது யார்?


இளவரசர். ஆதித்தரல்லவா? நீரும் தானா? நான் காண்பது கனவில்லையே?


இளவரசே என்னைத் தனியே விட்டு எங்கு சென்றீர்கள்? கிழவனின் குடிசையருகே இருந்தவள் வேறு இடத்துக்கு எப்படி வந்தேன்? உங்களைக் காணாது நான் தவித்த தவிப்பு...


கவலைப் படாதே நிர்மலா. நீ அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாய். நீலகேசியைப் போல இருந்தது ஓர் உருவம். துரத்திச் சென்றேன். பயன் ஏமாற்றந்தான். உன்னை விட்டுப் போய் விடுவேனா?


நிர்மலா, இது என்ன? இந்தச் சிங்கம் ஏது? என்னைப் பார்த்துப் பயங்கரமாக உறுமுகிறதே.....!


சிங்க ராஜா, கோபம் கொள்-ளாதே. அவர் நம்மவர்தான்.


அப்போது எங்கிருந்தோ தோன்றிய ஒருவன்.....
அப்படியே நில்! நீதானே ஆதித்தன் என்ற அயோக்கியன்


என் சகோதரர்கள் இருவரையும் புலிக்கண்ணனையும் கொன்றதற்குப் பழி வாங்க வந்திருக்கிறேன். என் பெயர் வேங்கை மார்பன். எடு உன் கத்தியை.....!


வேங்கை மார்பா, வீண் சண்டை ஏன்? நடந்தது போகட்டும். மன்னித்துக் கொள்...


வேங்கை மார்பன் ஆதித்தனை அழைத்து விருந்து ஆதித்தன் நீல கேசியாகிறான்.


ஐ போ! இத்தனை நேரம் நான் ஆதித்தனென்று எண்ணியது உருமாறிய நீலகேசியல்லவா?
ஏமாந்து போக இருந்தேனே. ஆதித்தனுக்கு கோள் இல்லாத போதே, வீண் சண்டைக்கு வந்து வலிய மன்னிப்புக் கேட்ட போதே சந்தேகப் பட்டேன்... இவனிடமிருந்து தப்பியாக வேண்டும்...


நாககன்னியின் உத்தரவுப்படி நடந்து கொண்டேன். உங்கள் உருமாற்றம்.....!


முட்டாள், என் திட்டத்தையெல்லாம் தரைமட்டமாக்கிவிட்டாய். இரகசியமாக அறிவித்தும் தெரிந்து கொள்ளாத
மடையா, போ! தப்பிப் போகும் அவளை எப்படியாவது கொண்டுவா.
தொடரும்

# தி இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்

★

எல்லா மக்களின் தேவைகளேயும் பூர்த்தி செய்ய

## ஒரு ரெக்கரிங் டெபாஸிட் திட்டத்தை

ஆரம்பித்திருக்கிருர்கள்

★

குறைந்த பட்சம் ரூ. 5/– லிருந்து அதிக பட்சமாக, அதன் பெருக்குத் தொகை ரூ. 500/– வரையில் டெபாஸிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படும்

பிரதி மாதம் டெபாஸிட் செய்யும் தொகையான

| | | | | |
|---|---|---|---|---|
| | ரூ. 5 | ரூ. 10 | ரூ. 50 | ரூ. 100 |
| | கீழ்க் கண்டபடி பெருகும் | | | |
| 34 மாதங்களில் | ரூ. 180 | ரூ. 360 | ரூ. 1,800 | ரூ. 3,600 |
| 46 மாதங்களில் | ரூ. 250 | ரூ. 500 | ரூ. 2,500 | ரூ. 5,000 |
| 86 மாதங்களில் | ரூ. 500 | ரூ. 1,000 | ரூ. 5,000 | ரூ. 10,000 |

முழு விவரங்களுக்கு பாங்கின் எந்தக் கிளேக் காரியாலயங்களுக்காவது தயவுசெய்து எழுதவும் :

எம். ஸிடி. முத்தையா
சேர்மன்

ஸி. பி. துரைக்கண்ணு
ஜெனரல் மானேஜர்




லண்டனில் 106 வாரங்கள் ஓடியிருக்கிறது. டில்லியில் 105 வாரங்கள் ஓடியிருக்கிறது. டோக்கியோவில் இரண்டு ஆண்டுகள் ஓடியிருக்கிறது! 52 பரிசுகள் பெற்ற அரிய படம்!

இவ்வளவும் சொன்ன பிறகு எது என்று கேட்காமல் நீங்களாகவே தெரிந்து கொண்டிருப்பீர்கள். "Around the World in 80 days" என்ற ஆங்கிலப் படத்தைத் தான் கூறுகிறேன். பின்பு நமது தமிழ்ப்படமா அப்படி ஓட முடியும்? வந்த சுவடு தெரியாமல் ஓடிப் போய்விடும் படத்துக்கு முதற் பரிசு என்று ஏற்படுத்தினால் நம் தமிழ்ப் படங்களில் பல அந்தப் பரிசைப் பெறப் போட்டி போடும்!

தமிழ்ப் படங்களையே பார்த்துச் சலித்துப் போய்ச் சங்கடப்பட்டுக் கொண்டிருந்த எனக்கு இந்தப் படம் வந்தது மிகவும் சந்தோஷமாயிருந்தது.

ஒரு சிறந்த படத்துக்கு என்னென்ன அம்சங்களெல்லாம் இருக்க வேண்டுமோ அத்தனையும் இருக்கின்றன இந்தப் படத்தில். வண்ண ஜாலம் கண்ணைப் பறிக்கிறது.

கதை என்று விரிவாகச் சொல்ல அப்படி ஒன்றும் பிரமாதமாக இல்லை. காதல், அதில் போட்டி, பிறகு கண்ணீர், கத்திச் சண்டை, வீட்டை விட்டு வெளியேறுதல் ஆகியவை போன்ற வழக்கமான நிகழ்ச்சிகள் எதுவுமின்றி, படம் மிகவும் இலேசான ஒரு நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு ஆரம்பமாகிறது! மேற்கூறிய நிகழ்ச்சிகள் இல்லையென்ற காரணத்தால் படத்தில் ஒன்றும் குடிமுழுகிப் போய்விடவில்லை. ஆனால் படம் பார்ப்பவர்கள்தான் ஆச்சரியத்தில் மூழ்கிப் போய் விடுகிறார்கள்!

ராணி விக்டோரியா காலத்து மனிதன் ஒருவன் எண்பது நாட்களில் உலகம் முழுவதும் சுற்றிவிட்டுத் திரும்புவேனென்று பந்தயம் கூறுகிறான். அவனுடைய வேலைக்காரனும் அவனுமாக, படகிலும், பலூனிலும், ரயிலிலும், யானைமீதும், ரிக்ஷாவிலும், நெருப்புக் கோழி பூட்டிய சிறு வண்டியிலும் உலகம் முழுதும் சுற்றி வருகிறார்கள். கடைசியில் சொன்னபடி செய்து காட்டிப் பரிசையும் பெறுகிறார்கள். உலகத்து நாடுகளை யெல்லாம் வண்ணக் காட்சிகளில் காணும்பொழுது வியப்பாகவே இருக்கிறது. பழையகாலத்து ரயில் வண்டியில் இந்தியாவின் கிராமங்கள் வழியாகப் பிரயாணம் செய்வதைப் பார்க்கும்போது மிகவும் உற்சாகமாயிருக்கிறது. அமெரிக்க நாட்டுப் பயங்கரமான மலைப்பாதைகளின் வழியாக ரயில் வண்டி செல்லும்பொழுது பயமாயிருக்கிறது. ரயில் வண்டி செல்லுவதைப் படமாக்கியிருப்பதே மிகவும் ஆச்சரியமாயிருக்கிறது. எதிரே இருப்புப் பாதை வளைந்தும், நீண்டும், ஏறியும் இறங்கியும் வந்துகொண்டேயிருக்க ரயில் வண்டித் தொடர் அதை விழுங்கிக் கொண்டே போவதுபோல் தோன்றுகிறது! அவர்களால் காப்பாற்றப்பட்ட அழகிய நங்கை ஒருத்தியும் அவர்களைத் தொடர்ந்து பிரயாணத்தை உற்சாகமாக்குவதுடன் நம்மையும் மகிழ்விக்கிறாள்.

படத்தின் கதையம்சத்தைப் பற்றி, நடிக, நடிகையர்களின் திறமையைப் பற்றி, இதில் பயன்படுத்தப் பட்டிருக்கும் சினிமாக் கலை நுணுக்கங்களைப் பற்றி விமரிசனம் எழுதுவதைவிட இதன் தயாரிப்பு என்னென்ன விதமாக நடந்திருக்கிறது என்று தெரிந்து கொண்டால் படத்தின் சிறப்பு அம்சங்கள் யாவும் வெளியாகி விடும். தமிழ்ப் படமானால் ஏதேனும் இரண்டொரு அம்சங்கள்தான் நன்றாயிருக்கும். (அது கூட நிச்சயமாகச் சொல்ல முடியாது!) இப்படத்தில் எல்லாமே

உயர்வாக இருப்பதால் தனித்தனியாக விமர்சனம் செய்வது சிரமமாகவே இருக்கிறது.

இனி, படத்தின் விசேஷ அம்சங்களைச் சற்று ஆராய்ந்து பார்ப்போம்.

நாற்பதுக்கு மேற்பட்ட பிரபல நடிக, நடிகைகள் இதில் பங்கெடுத்துக் கொண்டிருக்கின்றனர். பதின்மூன்று நாடுகளில் உள்ள 68,894 மனிதர்கள் இப்படத்தில் தோன்றுகின்றனர். படக் குழுவினர் பல்லாயிரக் கணக்கான மைல்கள் விமானப் பிரயாணம் செய்திருக்கின்றனர். ஆறு மிகப் பெரிய ஹாலிவுட் ஸ்டுடியோக்களில் இந்தப் படம் தயாரிக்கப்பட்டிருக்கிறது: இவை தவிர, இங்கிலாந்து, ஹாங்காங், ஜப்பான் முதலிய நாடுகளின் ஸ்டுடியோக்களும் படப்பிடிப்புக்கு உதவியா யிருந்திருக்கின்றன. மேலும் நூற்று நாற்பது வெவ்வேறு இடங்களில் படம் எடுக்கப்பட்டிருக்கிறது. பதின்மூன்று காமிராக்கள் படம் எடுக்க உபயோகப்படுத்தப் பட்டிருக்கின்றன என்று தெரிய வருகிறது.

படத்தில் பங்கெடுத்துக் கொண்டிருக்கும் எத்தனையோ நடிக, நடிகைகளைத் தவிரப் பல மிருகங்களும், பறவைகளும் பங்கெடுத்துக் கொண்டு படத்தைச் சிறப்பித்திருக்கின்றன. அவைகளையும் சிறிது தெரிந்து கொள்ளுவோம்.

பதினைந்து யானைகள். நெருப்புக் கோழிகள் நான்கு. ஒரு பசு. மான்கள் இரண்டு. இரண்டாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு எருமைகள். (ரயில் பாதைக்குக் குறுக்கே இந்த எருமைகள் அணி அணியாகச் சென்று ரயிலை வெகுநேரம் தாமதப்படுத்திப் படத்தையும் கணிசமாக நீட்டி யிருக்கின்றன!) பதினேழு சண்டைக் காளைகள். மூவாயிரத்து எண்ணூறு ஆடுகள். குதிரைகள் எண்ணூறு. எழுபத்தெட்டு வாத்துக்கள்.

நடிக, நடிகையர்களையும், இணையற்ற இயற்கைக் காட்சிகளையும் தவிர, இத்தனை ஜீவராசிகளும் பங்கெடுத்துக் கொண்டிருக்கும் படம் பிரமாதமா யிருக்கக் கேட்பானேன்?

''உலகம் சுற்ற எண்பது நாட்கள்'' என்ற இந்தப் படத்தைத் தயாரித்தவர் உலகப் புகழ் பெற்ற மைக்கேல் டாட் என்பவர். இந்தப் படத்தின் மூலமாக உலகிலுள்ள பல பாகங்களையும், ஆங்காங்கு நிகழும் அற்புதமான நிகழ்ச்சிகளையும் சுவை ததும்பக் காண முடிகிறது.

இந்த அதியற்புதப் படத்தைப் பார்க்கும் போது தமிழில் இத்தகைய படங்கள் வந்து ஆச்சரியம் நிகழும் நாள் எந்நாளோ என்று மனம் கனவு காண்கிறது. உலகம் முழுதும் சுற்றக்கூடிய சிறப்பு வாய்ந்த படம், உலகத்து மக்களெல்லாம் உவகையோடு பார்த்து உற்சாகப்படக் கூடிய பொழுது போக்குக்கு உகந்த படம் எதுவென்று யாரேனும் கேட்டால், ''உலகம் சுற்ற எண்பது நாட்கள்'' என்று உறுதியாக மறுமொழி கூறலாம்.





"ஆயுள், புத்தி, பலம், ஆரோக்கியம், சுகம், விருப்பம் இவற்றை வளர்ப்பனவும், ரஸமுடையனவும், பசையுடையனவும், உரமுடையனவும், இன்பமளிப்பனவும் ஆன உணவுகள் ஸாத்விகர்களுக்குப் பிரியமானவை"

—பகவத் கீதை





# SUDHA



## வனஸ்பதி

ஒரு கேரள சர்க்கார் தயாரிப்பு

வைட்டமின் சேர்க்கப்பட்ட சுத்தமான சுதா வனஸ்பதியில் தயாரிக்கப்படும் பண்டங்களில் சக்தி, ஊக்கம், பலம் ஆகியவற்றை அபிவிருத்தி செய்யும் அம்சங்கள் வெகுவாக நிறைந்துள்ளன. சுதாவின் பரிசுத்தத் தன்மை கெடாமல் இருப்பதற்காக ஸீல் இட்ட டின்களில் சப்ளை செய்யப்படுகிறது. ஓர் உத்தமமான உணவுச் சாதனம் என்பதுடன் சுதா விலை குறைவும் கூட.

**கவர்ன்மெண்ட் ஹைட்ரோஜினேஷன் பாக்டரி**
**கல்லிக்கோட்டை, கேரளம்**

**பொதுத்துறையிலுள்ள வனஸ்பதி பாக்டரி இது ஒன்றே**

GHS—14

# கொடுத்து வைத்தது

✧ உமாகாந்தன் ✧

"நீ அடுத்த 'தபா' வரச் சொல்லப் புதுக் கத்தி வாங்கி வச்சிருந்தால் தான் உன்னிடம் செய்து கொள்ள முடியும். இல்லாட்டிப் போனா 'சலூனு'க்குப் போய் விடுவேன்!" என்று எரிந்து விழுந்தார் பண்ணையார். நாச்சிமுத்து அவர் வீசியெறிந்த மூன்று ஐந்து புதுக் காசுகளைப் பொறுக்கி எடுத்துக் கொண்டே, "ஆகட்டும், எசமான்!" என்றவாறு தன் கைப் பெட்டியைக் கக்கத்தில் வைத்துக் கொண்டு அவருக்கு ஒரு கும்பிடு போட்டு விட்டு வெளியேறினான்.

உச்சி வெய்யில், குழம்பிக் கிடந்த மண்டையை உருக்கி எடுக்க, நாச்சிமுத்து ஆலமரத்து நிழலை நோக்கி நடந்தான். பொழுது விடிந்ததும், விடியாததுமாக அவன் எதையோ புரட்டி எடுப்பதாகக் கங்கணம் கட்டிக் கொண்டு வீட்டை விட்டுப் புறப்பட்டான். வாடிக்கையான தன் கிராக்கிகளை யெல்லாம் ஒரு சுற்றுப் பார்த்து விட்டு அலுப்பும் களைப்புமாக ஆலமரத்துக் குளத்தங்கரையண்டை வந்து உட்கார்ந்தான். மணி பத்தாகியும் ஓர் ஆள்கூட வரவில்லை. பசி வயிற்றைச் சுண்டி இழுத்தது. வீட்டுக்குப் போய் ஏதாவது 'நீச்சத் தண்ணி' குடித்து விட்டு வரலாம் என்றால் அது இரண்டு மைலுக்கு மேலிருந்தது. மடியைத் தடவிப் பார்த்தான். ஒரு முடிச்சு தென்பட்டது. பரபரப்புடன் அதனை அவிழ்த்தபோது ஓர் இரண்டு புதுக் காசு தென்பட்டது. ஆர்வத்துடன் அதைக் கையில் எடுத்துக் கொண்டு வேர்க்கடலை கூறு கட்டி விற்றுக் கொண்டிருந்த கிழவியிடம் சென்று ஒரு கூறை எடுத்துக் கொண்டான். அவன் அதிர்ஷ்டம் அதில் பாதிக்கு மேல் சொத்தைக் கடலையாக இருந்தன.

குளத்துத் தண்ணீரைக் கை நிறைய அள்ளிக் குடித்து விட்டுப் பெரிய விருந்து சாப்பிட்டவனைப் போல் நீண்ட ஏப்பம் விட்டவாறு ஆலமரத்தடியில் உட்காரப் போனான் நாச்சிமுத்து. அப்போது,—

"ஏய், முத்து! ஐயா வரச் சொன்னாரு!" என்று குரல் கொடுத்துச் சென்ற பண்ணையாரின் வேலைக்காரன் தெய்வத்தின் பிரதிநிதியாகவே அவன் கண்களுக்குத் தென்பட்டான். பண்ணையாருக்குத் தலை வெட்டி முக சவரம் செய்தால் எட்டணாவுக்குக் குறைவில்லை என்று அவன் மனம் கணக்குப் போட்டது. ஆனந்தமாக அவர் வீட்டை நோக்கி நடையைக் கட்டினான். ஒரு மணி நேரத்துக்கு மேல் திண்ணையில் தவம் கிடந்த அவனிடம் தலையைக் கொடுக்கவில்லை பண்ணையார்! வெறும் முகத்தை மட்டும்தான் நீட்டினார். அதுவும் அவன் அன்று விழித்தெழுந்த முக ராசிதான்!

ஆலமரத்தடியில் புதிய கத்தி வாங்குவதைப் பற்றி யோசித்த வண்ணம் பலத்த யோசனையில் அமர்ந்திருந்தான் நாச்சிமுத்து. அடுத்த தடவை இதே கத்தியுடன் பண்ணையாரிடம் சென்றால் அவர் நிச்சயம் 'முகம் கொடுக்க' மாட்டார்! புதிய க்ஷவரக்கத்தி வாங்க அவன் பணத்துக்கு எங்கே போவான்? அதற்காகப் பண்ணையாரின் அபிமானத்தை இழப்பதா? ஏதோ பழகின விசுவாசத்துக்காகத்தான் கடந்த பத்து வருஷங்களாக அவர் அவனைக் கட்டிக் கொண்டு மாரடிக்கிறார்! அவர் ஒரு வார்த்தை சொன்னால் போதும்! எத்தனையோ பிரபல சலூன் முதலாளிகள் நேரில் அவருக்குத் தொழில் புரியத் தயாராயிருந்தனர். புதிய கத்தி வாங்க வேண்டும் என்ற பிரச்னை அவன் மூளையை மழுங்க அடித்தது.

"நாச்சிமுத்து!"

குரல் கேட்டுத் துணுக்குற்றுத் திரும்பிப் பார்த்தான் நாச்சிமுத்து.

பெரியசாமி சிரித்த முகத்துடன் எதிரேயிருந்த கருங் கல்லின்மீது அமர்ந்தவாறு, "சீக்கிரம் எனக்கு முடி வெட்டி விடறயா, இரண்டு மணிக்கு ஒரு சவாரி போக வேணும்!" என்றான்.

நாச்சிமுத்து நீண்ட பெருமூச்செறிந்தவாறு பெரியசாமிக்கு முடிவெட்ட முற்பட்டான்! முடியா அது!...கத்தியும், கத்திரியும் கண்டு மூன்று மாதங்களாகியிருக்கும். கையிலிருந்த சிறு கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்து மகிழ்ந்து போன பெரியசாமி, நாச்சிமுத்துவின் விரல்கள் கத்தியுடன் கன்னங்களில் தவழ்ந்த போது, "ஸ்ஸ்!...ஆ!... மிளகாய்ப் பொடியைத் தேய்க்கிற கணக்காக வல்லவா எரியுது! ஒரு புதுக் கத்தி வாங்கி வைச்சுக்கோ!.... இது இனிமேல் சரிப்பட்டு வராது" என்றான். பெரியசாமியே குறை கூறும் அளவுக்கு அல்லவா நாச்சிமுத்துவின் பிழைப்பு ஆகிவிட்டது! இதை நினைத்துப் பார்க்கையில் அவன் இதயத்தை யாரோ கிறுவது போலிருந்தது!

வேட்டியை உதறிக் கட்டிக் கொண்ட பெரியசாமி, தன் கிழிந்த பெல்டிலிருந்த தோல்பையிலிருந்து சில்லறையை எடுத்துக் கொடுத்தான்.

"என்ன பெரியசாமி!....என்ன...இது!" என்று ஸ்தம்பித்துக் கேட்டான் நாச்சிமுத்து. அவன் கொடுத்த இருபத்தொன்பது புதுக் காசை உள்ளங்கையில் வைத்து நீட்டியவாறு.

"பரவாயில்லை, வைச்சிக்கோ! எங்கிட்டே இருப்பதெல்லாம் அதுதான்!...." என்று நடையைக் கட்டினான் பெரியசாமி.

நாச்சிமுத்துவுக்குப் பேச முடியாமல் நா வறண்டது.

மாலை ஆறு மணி வரை ஆலமரத்தடியில் உட்கார்ந்து அலுத்துப் போன நாச்சிமுத்துவுக்கு மனித வர்க்கத்தின் மீது ஒரு வித அர்த்தமற்ற ஆத்திரமும் வெறுப்பும் ஏற்படத் தொடங்கியது. நகரத்தில் மலிந்து கிடந்த சலூன்களில் மணிக் கணக்காய்க் காத்துக் கிடந்து, சுழல் நாற்காலிக்கும், பெரிய பெரிய நிலைக் கண்ணாடிக்கும், மற்றும் பல நாகரிகமான பொருள்களுக்கும் அடிமையாகப் பணத்தையும், நேரத்தையும் விரயமாக்கும் மக்கள், சேவை செய்யக் காத்துக் கிடக்கும்

அவனை "ஏனோ" அண்ட மறுத்தனர்! நேற்று வரை அவனிடம் முடி வெட்டிக் கொண்ட பாட்டாளிகளைக் கூட சலூன் மோகம் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விட்டது.

எனவே, பரம்பரையாக வந்த தொழிலுக்குத் தாற்காலிகமாக ஓய்வு கொடுத்து விட்டு, தன் குலத் தொழிலான நாயன வாசிப்பைச் சில காலம் மேற்கொண்டு பார்த்தான் நாச்சிமுத்து. ஊரில் கல்யாணங்கள் அமர்க்களப் படும்! நூற்றில் இரண்டுக்குக் கூட அவனுக்குக் கிடைக்காது, நாயனம் வாசிக்கும் வாய்ப்பு! நாககரம் வாசிப்பதில் 'பெயர் போன' சில பேர்வழிகளே திரும்பத் திரும்பக் கல்யாணங்களுக்கு வாசிப்பதைப் பங்கு போட்டுக் கொண்டனர்.

புதுக் காதலியின் மோகத்தில் கட்டிய மனைவியைக் கைவிடுவது போல், நாககரக் கச்சேரிகளை நம்பிப் பரம்பரைத் தொழிலைப் பழிக்க முற்பட்ட நாச்சிமுத்துவுக்கு, பனை



மரத்தின் உயரத்திலிருந்து கால் சறுக்கிக் கிணற்றுக்குள் விழுந்தவனின் மன நிலை தான் ஏற்பட்டது. ஒட்டி உலர்ந்த வயிற்றுடன் வாசிக்க முற்பட்ட அவனது அநாதி கால நாககரக் கருவியிலிருந்து வெளிவந்த அபஸ்வரங்கள் அவன் அறியாமையை மட்டும் அறிவுறுத்தவில்லை; அவன் வறுமையின் வேதனைக் குரலையும் அம்பலப்படுத்தின. ஆறறிவும் படைத்து, அவற்றில் ஒன்று கூட உருப்படியாக உணர மாட்டாமல் உழன்ற மக்கள் கூட்டத்தினிடையே அவன் ஊதிப் பிழைக்க முடியாது என்பதைக் கண்டு கொண்டான். தெய்வத்தின் திருக்கோவில்களில் கபேச்சையாகப் புகுந்து வாசிக்க முற்பட்ட நாச்சிமுத்துவுக்கு ஒருவாறு மனப் பசி மட்டும் அடங்கியது எனலாம். ஆனால் கோவில்களில் கிடைத்த உண்டைக் கட்டிகளும், தேங்காய் மூடிகளும் அவன் குடும்பத்து வயிற்றுப் பசியை எப்படி ஆற்ற முடியும்?

உள்ளத்து ஏமாற்ற உணர்ச்சிகளை மனம் விஸ்தாரமாக எடுத்து ஊத, மனச்சாட்சி அதற்கு ஒத்து ஊத, நரம்புகளெல்லாம் புடைத்தெழுந்து மண்டை ஓட்டில் 'தவுல்' வாசிக்க, ஜால்ராவைத் தட்டுவது போல் உள்ளங் கைகளால் இரு காதுகளையும் தட்டி விட்டுக் கொண்ட நாச்சிமுத்து, தன் தொழில் மாற்றத்தில் அனுபவித்த ஏமாற்றங்களுக்கு முற்றுப்புள்ளி வைக்கத் தீர்மானித்தவனாய் நாககரத்தை உறையிட்டுக் கட்டினான்.

கால் போன போக்கில் மனம் செல்ல நாச்சிமுத்து நகரத்தை வலம் வந்து கொண்டிருந்தான். அவன் பார்வை ஓர் அட்டை விளம்பரத்தைக் கண்டதும் அது தொங்கிக் கொண்டிருந்த கடை வாயிலில் நங்கூரம் பாய்ந்தாற் போல் நின்றன அவன் கால்கள். அது ஒரு சலூன்! புதிதாக ஆரம்பிக்கப்பட்டிருந்தது. 'வேலைக்குத் தொழில் முறையில் தேர்ச்சி பெற்றவர் தேவை' என்பதை அந்த அட்டை விளம்பரம் கூறியது!

"வணக்கமுங்க!"

அழுக்கேறிய ஜிப்பாவும், தையல் போட்ட வேஷ்டியுமாக வெற்றிலைக் காவி படிந்த பற்களைக் காட்டி, கைகட்டி நின்ற நாச்சிமுத்துவைக் கண்டதும், "போய்யா! நல்ல சமயம் பார்த்து வந்தே பிச்சை கேட்க" என்று விரட்டினார் சலூன் அதிபர்.

"ஐயா! உங்க விளம்பரத்தைக் கண்டு வேலைப் பிச்சை கேட்க வந்தேனுங்க!" என்று நாச்சிமுத்து கூறியதும் முதலாளியின் புருவங்கள் விரிந்தன.

நாச்சிமுத்து தன் தகுதியை—அதாவது இனி சுதந்திரமாக வாழத் தனக்குத் தகுதி இல்லாததை—எடுத்துச் சொன்னான். கத்தி பிடித்துத் தனியரசு செலுத்திய அந்த இந்நாட்டு மன்னன் தன்னிடம் பணியாளாக வருகிறான் என்பதே முதலாளியின் புஜத்தை உயர்த்தியது. ஜபர்தஸ்து குறையாமலே அவர் சொன்னார்:

"ஏதோ நம்ம தொழிலைப் பரம்பரையாகச் செய்பவன் என்ற காரணத்தை உத்தேசித்து நான் உன்னை என் கடையில் வேலைக்கு வைத்துக் கொள்கிறேன். இங்கு நாணயம் தவறப்படாது! பொறுமையும் பணிவும் தேவை! புதுக்கடை. மூடு விழா நடத்தி விடாதே! வேலையைப் பார்த்துத்தான் கூலியை நிர்ணயிக்க முடியும்!"

நாச்சிமுத்து அந்தப் புதிய சலூனில் வேலைக்கு அமர்ந்து ஒரு வாரம்தான் ஆயிற்று. முதலாளி அவனுக்கு வெறும் 'முக க்ஷவரம்' செய்யும் வேலையை மட்டும் செய்யும்படி உத்தரவிட்டிருந்தார். கருக்கேறிய மெருகு குலையாத அந்தப் புதிய கத்தியைக் கையில் பிடித்துக் கொண்டு சிறிதுகூட முகம் சிணுங்காமல், நூற்றுக்கணக்கான தாடி மீசையோடு கூடிய முகங்களுக்குத் தாற்காலிக மெருகு கொடுத்தான் நாச்சிமுத்து! அவனது நுட்பமான வேலைத் திறமையைக் கண்டு முதலாளி அயர்ந்து போனார். நாச்சிமுத்துவுக்குத் தலை மயிர் வெட்டும் வேலைக்குப் பிரமோஷன்

கிடைத்தது! பிரமோஷன் என்றாலும் பிர மோஷன்! அதைவிட உச்ச கட்டப் பிர மோஷனும் இருக்க முடியுமா? ஏன் சாண் உடம்புக்குப் பிரதானமான தலையிலும் உச்சி யிலுள்ள முடியைக் குறைப்பதை விடத் தலையாய ஒரு பெருமை நாச்சிமுத்துவுக்குத் தான் கிடைக்க முடியுமா? இங்கே வெட்டு வது அதிகமானாலும், சம்பளம் என்னவோ கூடித்தான் வந்தது. அதோடு தினசரி கொடுக் கப்பட்டு வந்த 'நாஸ்தா' காசிலும் உயர்வு கிடைத்தது. நாச்சிமுத்துவின் நுழைவால் முதலாளியின் வியாபாரம் அமோகமாகப் பெருகியது. வறுமைத் திரையிட்டு மறைக்கப் பட்டிருந்த அவனது தொழில்—திறமை இப் போது கோபுர விளக்காகப் பளிச்சிட்டது. அவனது அபார வேலையைக் கண்டு மெச்சிய வாடிக்கைக்காரர்கள் அவனுக்குப் பிரத்தியேக மாகச் சில்லறைகள் வழங்கினர். ஆனால் நாச்சி முத்து அவற்றையும் முதலாளியிடம்தான் கொடுத்தான். சக தொழிலாளிகளுக்கு இத னால் அவன்மீது பொறாமையும், கசப்பும் ஏற்பட்டன. வரும் வாடிக்கைக்காரர்க ளெல்லாம் காத்துக் கிடந்தாவது நாச்சி முத்துவிடம் முடிவெட்டிக் கொள்ள முன் வந்ததைக் கண்ட முதலாளி, ஈ ஓட்டிக் கொண்டிருந்த மற்றத் தொழிலாளிகளுக்குச் சீட்டுக் கிழித்து விட்டு, நாச்சிமுத்துவின் உழைப்பு நேரத்துக்கேற்றபடி கடையைத் திறந்து மூடினார். நாச்சி முத்துவுக்கு இப்போது சம் பளத்தை இரட்டிப்பாக் கினார்.

இப்படியாக மூன்று வருஷ காலம் ஓடியது.

திடீரென்று நாச்சிமுத்து வுக்கு என்ன தோன்றியதோ என்னவோ, அன்று காலை அவன் வேலைக்குப் போக வில்லை. தன்னைப் போன்ற பல தொழிலாளிகளின் வயிற் றில் அடித்து விட்டுத் தான் மட்டும் வாழ்வதா? முத லாளி தன் உழைப்பின் மூலம் பெரும் பணம் திரட் டிச் சொகுசாக இருப்பதா? தான் வேலையை விட்டு விட்டால், தன்னைப் போன்றவர்களுக்கு முதலாளி வேலை கொடுத் தாலும் கொடுக்கலாம் அல்லவா? அவர்கள் வாழ்க்கைக்கு நாம் இடையூறாக நிற்பா னேன்? — இப்படித்தான் எண்ணியிருக்க வேண்டும் அவன்.

அவன் மனைவி நாகம்மா, 'என்ன கேடு வந்திடுச்சு உனக்கு!...பெரிய பண்ணையாராக ஆகிவிட்டோம் என்ற நெனப்பா? ஏன் வேலைக்குப் போகல்லே இன்னைக்கு?' என்று இடித்துக் கேட்டாள்.

''பெரிய மனுசங்களுக்கும், பணக்காரர் களுக்கும் சேவை செய்தது போதும்!.. கையிலிருக்கும் ஆயிரம் ரூபாயில் உன் பேருக் குக் கொஞ்சம் புஞ்சை வாங்கிப் போட்டுட றேன். மண்ணை நம்பினால் தான் என் னைக்கும் வவுத்திலே மண் விழாது. பாக்கி கொஞ்சம் பணத்துக்குப் புது 'கட்டிங்' மிஷின், கத்திரி, கத்தி எல்லாம் வாங்கிக் கிட்டு, அந்த ஆலமரத்து நிழலிலே, குளத்தங் கரையிலே குந்திக்கிட்டு எம்பாட்டுக்கு ஏழை ஜனங்களுக்கும் பாட்டாளி மக்களுக்கும் சேவை செய்கிறேன். அதில் தான் எனக்கு மகிழ்ச்சி'' என்றான் நாச்சிமுத்து. உண்மையில் அவன் உள்ளமேதான் அவ்வாறு பேசியது. சுதந்திரமாக வாழ்ந்தவர்கள் அப்படித்தான் பேசுவார்கள்.

அவனுடன் இடக்குப் பேசினால் ஒன்றும் நடக்காது என்று அனுபவ பூர்வமாகக் கண்டு கொண்டிருந்த நாகம்மா, வாயடைத்துப் போய் நின்றாள்.

தன் எண்ணத்தைச் செயலாக்கியவாறு ஆல மரத்தடியில் உட் கார்ந்த நாச்சிமுத்து வுக்கு அன்று முதல் போணி 'பண்ணையார்' தாம்! அவர் வீட்டு



வேலைக்காரன் வந்து கூப்பிட்டதும் விழுந் தடித்துக் கொண்டு ஓடினான். பாவம்! அவர் வீட்டில் எழும்பிய அழுகைக் குரலி லிருந்து நாச்சிமுத்துவுக்கு விஷயம் நன்கு விளங்கியது. சக தொழிலாளிகள் செய்ய மறுத்த காரியத்தை அவன் செய்யும்படி யாயிற்று. இப்போது அப்பண்ணையார் அவனைப் பிரிதொரு 'தபா' வரச் சொல்லும் நிலையி லேயே இல்லை. அவனை அவர் பாராட்டுவ தற்கும் இல்லை; குறை சொல்வதற்குமில்லை.

''ஹூம்! புதுக் கத்தியால் எசமான் பிணத்துக்குத்தான் க்ஷவரம் செய்ய முடிந்தது! நான் பாவி!'' என்று அழுத அவன் கையில் ஐந்து ரூபாய் நோட்டைத் திணித்தது ஒரு நடமாடும் தெய்வம்! அதைக் கண்டு பரக்கப் பரக்க விழித்தான் அந்த 'நடமாடும் சலூன்!'




# க்ளுகோவிடா

## அதிக சக்தியளிக்கிறது.

தினசரி ஆகாரத்தினூடே போஷகத்திற்கு மிகச் சிறந்தது. உங்கள் உடம்பிற்கு அவசியமான, ரத்தத்தில் கலந்துகொள்ளும் சர்க்கரையை க்ளுகோவிடா அளிக்கிறது. வேலை, விளையாட்டு, இவைகளில் ஈடுபட்டிருக்கும் மக்களுக்கும், வளரும் குழந்தைகளுக்கும், கர்ப்பந்தரித்திருக்கும் போதும், பிரசவத்திற்குப் பின் தாய்மார்களுக்கும் சிறந்த சக்தியளிக்க வல்லது.

டீ, காப்பி, பால் மற்றும் குளிர்ந்த பானங்களிலும் க்ளுகோவிடா அருந்துங்கள். ஒன்று முதல் மூன்று தேக்கரண்டி நிரம்பிய அளவு ஒரு கப் அல்லது கிளாஸ் மேற்கூறிய ஏதாவதொரு பானங்களுடன் நன்றாகக் கலக்குங்கள். எளிதில் கரைந்துவிடக் கூடியது.

**அதிக சக்திக்கு அவசியமானது**
**க்ளுகோவிடா**



கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ. (இந்தியா) ப்ரைவேட் லிட்.

இந்தியாவிற்கான ஏஜெண்டுகள்: பாரி அண்டு கோ. லிட்.

---

Kreft RADIOS



# கிரெப்ட் ரேடியோக்கள்

விநியோகஸ்தர்கள்:
ரேடியோ எலக்ட்ரிகல்ஸ்
சென்னை - 4

கிளைகள்: மெயின் ரோடு, தெப்பேவீ (தெ.ஆ. ஜில்லா)
5-3, ராஷ்டிரபதி ரோடு, செகந்திராபாத் (A. P.)
Sole Concessionaries : BANSAL RADIO CORPORATION OF INDIA, DELHI-6

AAS

---




# இருமல் மாத்திரைகள்

இருமல், பிராங்கைடீஸ், கரகரப்பான தொண்டை, மார்பு, சுவாச உறுப்புக் கோளாறுகள் ஆகிய வற்றுக்குக் கைகண்ட மருந்து. இம் மாத்திரைகள் இரவில் நிம்மதியான தூக்கத்தை அளிக்கும். சாப்பிட ருசியானது.

எல்லா கெமிஸ்டுகளிடமும் மற்றும் பிரபல கடைகளிலும் கிடைக்கும்

**காஸ்டோபின் மான்யுபாக்சரிங் கம்பெனி**

வொர்லி, பம்பாய் - 18

# அக்கரைச் சீமையில் ஆறு மாதங்கள்

சோமு

## 13. கோஹினூர் வைரம்!

திருநெல்வேலியில் நான் இருந்தவரையில் ''நம்மூர்'' என்ற வார்த்தைக்குப் பொருள் மீனாட்சிபுரம் என்ற சிறிய கிராமம். திருச்சிராப்பள்ளிக்கு வந்த பிறகு, ''நம்மூர்'' என்றால் அது திருநெல்வேலி மாவட்டம் என்று ஆயிற்று! சென்னைக்கு வந்த பிறகு 'நம்மூர்க்காரர்' என்று ஒருவரைக் குறிப்பிட்டால், அவர் சென்னைக்குத் தெற்கேயுள்ள மாவட்டங்களைச் சேர்ந்தவர் என்று பொருள்! தில்லிக்குப் போகும்போது அங்கே 'நம்மூர்க்காரர்கள்' என்றால் சென்னை ராஜ்யத்தைச் சேர்ந்தவர்கள் என்று அர்த்தம். லண்டனிலோ நம்மூர்க்காரர்கள் என்றால் நமது நாட்டிலிருந்து வந்துள்ள இந்தியர்கள் என்றே பொருள் கொண்டேன்!

'நம்மூர்' என்ற வார்த்தை இப்படி விரிந்து கொண்டே போவதை இங்கிலாந்தில் நம்மவர்களைச் சந்தித்த போதெல்லாம் நன்றாக உணர்ந்தேன். அதுமட்டுமில்லை; எங்கேயாவது காட்சிசாலைகளிலே இந்தியப் பொருள்களைக் கண்டுவிட்டால் 'நம்மூர்' என்ற தேச அபிமானம் உள்ளத்திலே ஒரு தனியான உவகையை உண்டாக்கியது! அந்த உவகை கோஹினூர் வைரத்தைப் பார்த்தபோது ஒப்பற்ற விதத்தில் சுடர்விட்டுப் பிரகாசிக்க ஆரம்பித்தது!

எத்தனையோ பல கதைகளையும், கற்பனைகளையும், உண்மைச் செய்திகளையும் தன்னுள் பொதிந்து வைத்துக் கொண்டிருக்கிற அந்த அற்புதமான இந்திய வைரம் லண்டன் டவரிலேயுள்ள 'நகை அறை' என்ற இடத்திலேதான் இருக்கிறது.

லண்டன் டவர் என்னும் கோட்டை மிகவும் பழமையானது. வில்லியம் அரசரால் கட்டப்பட்டு, பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் விரிவு செய்யப்பட்டது அது! அதன் பரப்பு 18 ஏக்கர்! லண்டன் நகரத்தின் எல்லைக்குள் ஒரு பகுதியும், அந்த எல்லைக்கு அப்பால் ஒரு பகுதியுமாக நிற்கிறது இந்த மாபெரும் கோட்டை.

மிகப் பெரிய மதிற்சுவர்களும், மணிக்கோபுரங்களுமாகக் காட்சி தருகிற இந்தக் கோட்டையானது, காவல் நிலையமாகவும் மாளிகையாகவும், சிறைக்கூடமாகவும், நாணயச் சாலையாகவும், கவடி நிலையமாகவும் பலப்பல முறைகளிலே பல்லாண்டுகளாகப் பயன்பட்டு வந்திருக்கிறது! இன்று இதன் முக்கியமான சிறப்பு இது ஒரு பெரிய பழைய சரித்திர நிலையம் என்பதே.

லண்டனிலிருந்து ரயில் வண்டியேறி ''டவர் ஹில்'' என்ற ரயில் நிலையத்துக்கு வந்து இறங்கினால் கூப்பிடு தூரத்தில் இருக்கிறது இந்த டவர்! அல்லது சிறிய பிரயாணக் கப்பல்களில் ஏறி தேம்ஸ் நதியில் மிதந்து கொண்டும் இங்கே வந்து சேரலாம். நதியின் இரண்டு கரைகளிலும் வழியெல்லாம் பலப்பல அழகான காட்சிகள் உண்டு. இவற்றின் வரலாறுகளை ஒலிக்கருவிகளுக்கு முன்னால் நின்று விளக்கம் செய்துகொண்டே நம்மோடு கப்பலில்வருகிற வழிகாட்டிகளும் ''வாட்டர் பஸ்'' என்னும் இந்த யாத்திரைப்படகுகளிலே உண்டு!

கோட்டைக்கு வெளியே, 'டவர் ஹில்' ஸ்டேஷனுக்கு எதிரில் ஒரு பழைமையான கிறிஸ்து கோவிலும், 'A Garden of God' (கடவுளின் சோலை) என்ற தோட்டமும் நிற்கின்றன. கி. பி. 675—இல் கட்டப்பட்டது இந்தக் கோவில். தோட்டத்தில் ஓர் ஆங்கிலக் குறிப்பு இருக்கிறது: ''இந்தத் தோட்டம் 1200 ஆண்டுகளுக்கு மேலாகக் கடவுளின் நிலமாக இருந்து வருகிறது. இது பழைமையான கோவிலின் சொத்து. எனவே ஒவ்வொருவருடைய அன்புக்கும் கண்காணிப்புக்கும் உரியது இது!'' என்ற அறிவிப்பு நம்முடைய மனத்தை நெகிழச் செய்கிறது.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டே வந்து கட்டணத்தைச் செலுத்தி டவரின் உள்ளே போகிறோம். வாசலில் நுழையும்போதே ஒரு பெரிய சரித்திரச் சோகம் நம்மை வந்து போர்த்தி மூடுகிறது. எத்தனை அரசர்கள், எத்தனை ராணிகள், எத்தனை பிரபுக்கள், எத்தனை வீரர்கள் இந்தக் கோட்டைக்குள்ளே சிறையிருந்தார்கள், எத்தனை பேர்களுடைய தலைகள் இங்கே வெட்டி வீழ்த்தப்பட்டன என்ற வரலாறு நினைவுக்கு வந்ததும் உள்ளம் நடுங்க ஆரம்பிக்கிறது. எட்வார்ட், ஸர் தாமஸ் மூர், ராணி ஆன் போலின், க்ராம்வெல், ட்யூக் ஆப் ஸாமர்ஸெட், லேடி ஜேன் க்ரே முதலிய சரித்திரப் பெரியோர்கள் சிறையை நோக்கி அல்லது மரணத்தை நோக்கி, இதே வாசலில்தான் நுழைந்தார்கள். ஸர் வால்ட்டர் ராலேயின் சோகக் களமாக விளங்கியதும் இதே லண்டன் டவர்தான் என்று எண்ணியதும் இதயத்தில் துணுக்கம் ஏற்படுகிறது. ஆனால் இந்தத் துயரச் சூழலின் மத்தியிலேதான் ஆங்கில அரசர்களின் மகுடங்களும், செங்கோலும், அரச அணிகலன்களும், நம் கோஹினூர் வைரமும் இன்றைக்கும் காட்சி தருகின்றன



"காக்கையும் அதைக் காக்கும் கையும்!"

என்று எண்ணிச் சோகத்தைத் தெளிவுபடுத்திக் கொண்டு மேலே நடக்கிறோம்!

**நா**ன் லண்டன் டவருக்குள் சென்றபோது கோஹினூர் வைரம் இருக்கிற பகுதியில் ஏராளமான மக்கள் 'க்யூ'வில் நின்று கொண்டிருந்தார்கள். ஆகையால் கூட்டம் கொஞ்சம் குறைந்ததும் இங்கே வரலாம் என்று எண்ணி மற்ற இடங்களைச் சுற்றிப் பார்க்க ஆரம்பித்தேன்.

படைக்கலங்கள் வைத்துள்ள இடம், வான் அறை, குதிரைப் படைக்கல நிலையம் முதலிய பகுதிகளையெல்லாம் வரிசையாகப் பார்த்துக் கொண்டே வந்தேன். ஒவ்வொன்றும் இங்கிலாந்தின் சரித்திரத்தோடு தொடர்பு கொண்ட முக்கியமான ஒரு வரலாற்றுச் சின்னமாக நிற்கிறது. எட்டாவது ஹென்றி உபயோகித்த முழுமேனிக் கவசமும், அந்த அரசனுடைய குதிரைக்குப் போட்டிருந்த முழுநீளக் கவச அங்கியும் பத்திரமாக அங்கே இருக்கின்றன! லார்ட் க்ளைவின் சொத்து என்ற குறிப்புடன் பல பொருள்களைத் திரட்டி வைத்திருக்கிறார்கள். ப்ளாசி யுத்தத்திலே கைப்பற்றிய பெரிய கொம்பன் யானையின் முக கவசம் ஒன்று இருக்கிறது. திப்பு சுல்தானின் வெண்கலப் புலி ஒன்றும் பார்த்தேன். லண்டன் காட்சிச்சாலையிலே பார்த்தது ஒரு வேடிக்கைப் பொம்மை. இதுவோ ஒரு படைக் கருவி! நாலரை அடி உயரம், நாலரை அடி நீளம், நாலரை அடி அகலத்தில் மைசூரிலே திப்புவின் ஆட்சியின்போது திப்புவினால் செய்யப்பட்டது இந்தப் புலி! இதன் வாயிலே பெரிய குண்டுகளை வைத்து எதிரிகளின் மேலே சுடக்கூடிய விதத்தில் அமைந்துள்ளது இதன் வெண்கல வார்ப்பு. திப்பு சுல்தானின் அரசச் சின்னமாக விளங்கிய புலியின் உருவிலேயே இந்தப் போர்க் கருவியும் நிற்கிறது! இந்தப் புலிக் கருவி சுர்நால் கோட்டையின் புதைபொருளைத் தோண்டிய போது அகப்பட்டது என்ற குறிப்பையும் அங்கே வைத்திருக்கிறார்கள்.

இந்தப் போர்ப் பொருள்களையெல்லாம் பார்த்துக் கொண்டே இன்னொரு புறமாக வந்தேன். சிறையிருந்த மாவீரர்கள் கிறுக்கிச் செதுக்கிய எழுத்துக்களையும் வாக்கியங்களையும் அறைச் சுவர்களிலே கண்டு மனம் உருகியது. குற்றம் சாட்டப்பட்ட வீரர்களையும் அரசர்களையும் அரசிகளையும் சிரச்சேதம் செய்த தூக்குமேடை, அங்கே ஒரு சூன்ய வெளியிலே நிற்கிறது. கோடரி போன்ற பயங்கர ஆயுதத்தினால்தான் அந்த வீரத் தலைகள் வெட்டி வீழ்த்தப்பட்டனவாம்!

மரண தண்டனை பெற்றவர்களில் சரித்திரப் புகழ் பெற்ற ஏழு பேர்கள் தங்களுடைய தலையைப் பலி கொடுத்த மாதம் பெப்ருவரி! இவர்களுடைய உடலையும் தூக்குமேடைக்குப் பக்கத்திலேயுள்ள கிறிஸ்து கோவிலிலேயே அடக்கம் செய்தார்களாம். அந்தக் குறிப்புக்களெல்லாம் ஐயந்திரிபின்றி அங்கே காட்சி தருகின்றன.

**வ**லது புறமாக இன்னும் கொஞ்ச தூரம் நடந்து சென்றால் 'அரசியின் இல்லம்' என்ற கட்டடத்துக்கு வருகிறோம். லேடி ஜேன் க்ரே இங்கேதான் சிறையிருந்தாள். இதன் ஜன்னல் வழியாக அந்த அம்மாள் பார்த்துக்கொண்டே நின்றபோதுதான், அவளுடைய கணவரைச் சிரச்சேதம் செய்வதற்காக அந்த வழியாக அழைத்துக்கொண்டு போனார்கள். பிறகு தலை வெட்டப்பட்ட உடம்பையும் அதே வழியாகத்தான் எடுத்து வந்தார்கள். இந்தக் கொடிய காட்சியை ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டு நின்ற மனைவியின் மனம் என்ன பாடு பட்டிருக்கும், எப்படித் துடித்திருக்கும்! ஆனால் அந்த மனத்துடிப்பு அதிகமாக நீடிப்பதற்கு அவசியமில்லாதபடி, சில மணி நேரத்திலேயே மனைவிக்கும் மரண தண்டனை விதித்து அவளுடைய தலையையும் வெட்டி வீழ்த்தி விட்டார்கள்! அது நடந்த நாள் ஒரு திங்கட்கிழமை: 1654-ம் ஆண்டு பெப்ருவரி மாதம் 12-ம் தேதி!

'ராணியின் இல்லம்' என்ற இந்தக் கட்டடத்துக்குள்ளேதான் இன்னொரு பெரிய சரித்திர நிகழ்ச்சியும் நடந்தது. நித்ஸ்டேல் பிரபு (Lord Nithsdale)வும் ஆறு ஸ்காட்டிஷ் சீமான்களும் 1715-ம் ஆண்டில் நடந்த பெருங்கலகத்தின்போது (Stuart Rebellion) குற்றம் சாட்டப்பட்டு, இந்த டவரிலேதான் சிறை வைக்கப் பட்டார்கள்! இவர்களுடைய வழக்கு விசாரணை 1716-ம் ஆண்டு பெப்ருவரி மாதத்தில் நடந்தது! மரண தண்டனை விதிக்கப்பட்டார்கள்! ஆனால் தண்டனைக்கு முன் தினம் ஓர் எதிர்பாராத நிகழ்ச்சி நடந்தது!

கணவனுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது என்று கேள்விப்பட்ட பிரபுவின் மனைவி, வெகு தொலைவிலுள்ள தனது வீட்டிலிருந்து இரவுக்கு இரவே புறப்பட்டுப் பனி கொட்டும் பாதைகளையெல்லாம் காலால் நடந்து கடந்து லண்டனுக்கு வந்து சேர்ந்தாள். கணவனுக்கு உயிர்ப்பிச்சை வழங்க வேண்டும் என்று எவ்வளவோ மன்றாடினாள்.

பயனில்லை. உடனே ஒரு தந்திரம் செய்தாள். தனக்கு மிகவும் ஆப்தமான ஒரு தோழியை இரண்டு ஆடைகள்— ஒன்றுக்குமேல் ஒன்றாக- அணிந்து கொள்ளும்படி செய்து, அவளையும் அழைத்துக்கொண்டு மரண தண்டனைக்கு முதல் நாள் மாலை லண்டன் டவரின் சிறைக் கூடத்துக்கு வந்தாள்! அதாவது 'ராணி இல்லம்' என்ற இதே இடத்துக்கு வந்தாள். அந்தக் காலத்தில் இதற்கு 'லெப்டினென்ட்ஸ் லாட்ஜிங்ஸ்' என்று பெயர்! அங்கே தனிமையில் கணவனைச் சந்தித்துப் பேசி விட்டுத் தோழி அணிந்திருந்த மற்றொரு உடையைக் கழற்றிக் கணவரிடம் கொடுத்து விட்டுத் திரும்பி விட்டாள்! அந்த இரவிலேயே நித்ஸ்டேல் பிரபு பெண்ணுடையில் சிறைக்கூடத்திலிருந்து தப்பினார். தப்பி வெளியே வந்தவர் ஒரு வேலைக்காரனின் உடையில் மாறுவேடம் போட்டுக் கொண்டு ''வெனிஸ் ஸ்தானிகரின்'' பணியாட்களில் ஒருவனாக அங்கிருந்து ரோமாபுரிக்கே சென்று விட்டாராம்!

இந்தச் சரித்திர நிகழ்ச்சி நடந்த இடத்தையும் அவர் தப்பிச் சென்ற வாசலையும் பார்த்துக்கொண்டே, 'ஸால்ட் டவர்' என்ற பகுதிக்கு வந்தேன். இதற்கு அந்தக் காலத்தில் ''ஜூலியஸ் ஸீஸரின் டவர்'' என்று பெயராம். இதற்குள் நுழைந்ததும் ஒரே எழுத்து மயமாக இருந்தன சுவர்கள் எல்லாம். சிறையிருந்த அரசியல் வீரர்களின் கையெழுத்துக்கள் அவை! இவற்றுக்கு மத்தியிலே ஒரு விசித்திரமான காட்சியைப் பார்த்தேன்! ஜாதகங்கள் கணிப்பதற்காக உள்ள சாரமும் கோடுகளும் நின்றன! இவற்றை வரைந்தவர் அங்கே சிறையிருந்த ஹ்யூட்ராப்பர் என்பவர்! ப்ரிஸ்டலைச் சேர்ந்தவர்! புகழ் பெற்ற ஒரு பிரபுவின் குடும்பத்தில் மந்திர சூனியங்கள் செய்தார் என்ற குற்றத்துக்காக 1561-ம் ஆண்டில் இவர் இங்கே சிறை வைக்கப்பட்டாராம்!

பார்ப்பதற்கும் கேட்பதற்கும் கொடூரமாக இருக்கும் இந்தச் சரித்திரங்களையும் சான்றுகளையும் இவற்றைப் பற்றிய குறிப்புக்களையும் இம்மட்டோடு முடித்துக் கொண்டு, அரச நகைகள் வைத்துள்ள தனியான இடத்தை நோக்கிநடந்தேன். 'க்யூ'வில் நின்று இரண்டு ஷில்லிங்குக்கு அனுமதிச் சீட்டு பெற்றேன். இந்த அறைக்குள்ளே போய் நகைகளைப் படம் எடுக்கக் கூடாது என்று சட்டம். எனவே, காமிராவை வெளியே வைத்து விட்டு உள்ளே சென்றேன். மற்ற இடங்களில் இல்லாத அளவுக்கு இங்கே காவலும் கெடுபிடியும் மும்முரமாக இருந்தன! இயல்புதானே? அறையும் சிறிதாகையால் கூட்ட நெருக்கடியும் இருந்தது.

அரச நகைகளையும், மகுடாபிஷேகத்தின் போது பிரிட்டிஷ் அரசர்கள் அணிகிற மகுடம், வாள்முதலிய ஆட்சிஅணிகலன்களையும் இங்கே ஒரு பெரிய கண்ணாடிக் கூண்டுக்குள்ளே வைத்திருக்கிறார்கள். இவற்றில் மிகவும் பழமையானவை கழுகின் உருவத்தில் செய்யப்பட்டுள்ள ஒரு தங்கப் பாத்திரமும் கரண்டியும்! மகுடாபிஷேகத்தின்போது கழுகுப் பாத்திரத்துக்குள் புனித எண்ணெயை ஊற்றி எடுத்துப் போவார்களாம்! மதகுருவானவர் இந்தத் தங்கக் கழுகுப் பாத்திரத்தைத் திறந்து அதிலிருந்து புனித எண்ணெயைக் கரண்டியிலே ஊற்றி, பட்டம் சூடப்போகும் அரசனின் தலையிலும், மார்பிலும், உள்ளங்கையிலும் தடவுவார்! இதன் பிறகுதான் அரசன் தலையில் மகுடத்தைச் சூட்டுவார் மதகுரு!

விக்டோரியா ராணியின் காலத்திலேதான் கோஹினூர் வைரம் இங்கிலாந்து சென்றது. அந்த மகாராணியின் தலையை அலங்கரித்த கிரீடத்தையும் அங்கே பார்த்தேன்! மூவாயிரம் வைரங்களும், முந்நூறுக்கும் மேற்பட்ட மற்ற ரத்தினங்களும், அந்த மகுடத்தில் கண்டேன்! கோஹினூர் வைரத்தை விக்டோரியா ராணிக்குப் பிறகு வந்த ராணிகள் ஒவ்வொருவராகத் தங்கள் மகுடங்களிலே எடுத்துப் பதித்துக் கொண்டார்களாம். 1937-ம் ஆண்டு ஆறாவது ஜார்ஜ் மன்னரின் மகுடாபிஷேகத்தின்போது ராணியே இதைத் தனது மகுடத்திலே சூட்டிக் கொண்டாள். அந்த மகுடமும் காட்சிப்

லண்டன் டவர்க் காட்சிகள்



பொருள்களிலே கொலுவிருக்கிறது. இக் கங்கைப் போன்று கனன்று கொண்டிருக்கிற மாணிக்கங்களும், சூரியத்துண்டுகளாக ஒளி வீசுகிற வைரங்களும், மரகதம், கோமேதகம், நீலம் முதலிய வண்ண ஒளிக்கற்றைகளுமாகக் கண்ணைப் பறிக்கிற அந்த மணிமகுடத்தின் முகப்பிலே, சூரியோதயம் ஆனதுபோலக் கதிர் வீசுகிறது கோஹினூர் வைரம். 108 காரட் என்றால் அதன் பருமனைப் பார்த்துக் கொள்ளுங்கள்! கண்ணைப் பறிக்கும் அதன் ஒளியிலும், அதைப் பற்றிய சரித்திர நினைவு களிலும், அது நம்முடைய நாட்டு ரத்தினம் என்ற பெருமையிலும் நீண்டநேரம் மெய்ம் மறந்து நின்று விட்டேன். எவ்வளவு நேரம் இந்தத் தேச அபிமானத்தில் நின்றேன் என்று தெரியாது; 'மேலே நகருங்கள்' என்று காவ லாளி வந்து சொன்னபிறகுதான் எதிரே யிருப்பது நூற்றியெட்டுக் காரட் வைரம் என் பதை உணர்ந்தேன்!

எவ்வளவு தொலைவில் இருந்தும் இனம் கண்டுபிடித்து விடக்கூடிய தனித்தன்மை வாய்ந்த இந்தக் கோஹினூர் வைரத்தைச் சுற்றி, எத்தனையோ கதைகளும் நம்பிக்கை களும் இன்றளவும் உலவி வருகின்றன! இந்த வைரத்தை ஆடவர்கள் அணிந்தால் கேடுவிளை யும் என்றும், பெண்கள் அணிந்தால் நன்மை உண்டாகும் என்றும் பிரிட்டிஷ் மக்கள் மனப் பூர்வமாக நம்புகிறார்கள். இதனால் அரசர்கள் தங்கள் மகுடத்தில் இதை அணிவதில்லை. ராணிகளே அணிந்து வந்திருக்கிறார்கள்!

லண்டன் டவரிலுள்ள கோஹினூர் வைரக் கிரீடத்துக்கு அருகில், ஐந்தாம் ஜார்ஜ் மன்னருக்குத் தில்லி தர்பாரின்போது நமது நாட்டு மன்னர்கள் செய்து அணிவித்த மகுடம் ஒன்றும் இருக்கிறது! பிரிட்டிஷ் அரசர்கள் வெளிநாடு செல்லும்போது தங்கள் அதிகார பூர்வமான கிரீடத்தை இங்கிலாந்துக்கு வெளியே எடுத்துப்போக இயலாது. இதனால் தில்லி தர்பாருக்கு என்று நாம் 1911-ல் ஜார்ஜ் மன்னருக்கு நவரத்தினங்களால் இழைத்த விலைமதிப்பற்ற ஒரு மகுடத்தைச் செய்து கொடுத்தோம். இதுவும் இங்கிருந்து சென்று டவரிலே வீற்றிருக்கிறது!

லண்டன் டவரிலிருந்து புறப்படும் முன் அங்குள்ள விசித்திரமான சில பழக்கங்களைத் தெரிந்து கொண்டேன். இந்தக் கோட்டை யின் வாசல்களைத் தினந்தோறும் இரவு பத்து மணிக்குத்தான் பூட்டுவார்கள். அதற்கு ஐந்து நிமிஷங்களுக்கு முன், தலைமைக் கண் காணிப்பாளர் நான்கு காவலாளர்களோடு வந்து கதவுகளைப் பூட்டி மீள்வார்! அப்போது வாசல்காப்போனுக்கும் அவருக்கும் இடையே ஒரு சிறு உரையாடல் நடக்கும்.

காவலாளி:—நின்றிடுக! போந்தது யாவர்?

தலைவர்:—இறவுகோல்கள்!

காவலாளி:—யாருடைய இறவுகோல்கள்?

தலைவர்:—எலிசபெத் அரசியின் இறவு கோல்கள்.

காவலாளி:—கடவுள் எலிசபெத் அரசியைக் காப்பாற்றுவாராக!

இந்த உரையாடற் சடங்கு முடிந்ததும் எல்லாக் காவலாளிகளும் சேர்ந்து 'ஆமென்' என்று கோஷம் இடுவார்கள்.

குண்டுகள் போட்டு மரியாதை செலுத்துவ தும் இந்த டவரில் நடைபெறும் ஒரு பழைய சம்பிரதாயம். அரசரின் ''நாண்மங்கலம்'' அதாவது பிறந்தநாள்; அரச மகுடாபி ஷேகம் முதலிய திருநாளின்போது அறுபத் திரண்டு குண்டுகளினால் மரியாதை செலுத்து வார்கள்! அரசர் பாராளும் மன்றத்தைத் திறந்துவைக்கும்போது 41; அரச குடும்பத்தில் குழந்தைகள் பிறக்கும்போதும் இப்படியே!

லண்டன் டவரில் 'கான்ஸ்டபிள்' என்று ஓர் உத்தியோகம் மிகப் பெரிய பதவி! அரசரைப் பேட்டி காணுதல், அரசரோடு நேர்முகமான கடிதப்போக்குவரத்து வைத் துக் கொள்ளுதல் முதலிய உரிமைச் சிறப் புக்கள் இந்தப் பதவியாளருக்கு உண்டு. இதற்குரிய நியமனச் சடங்குகளிலும் பல ஆசாரங்கள் இருக்கின்றன!

லண்டன் டவரில் இன்னொரு விசித்திரம், அந்தக் கோபுரங்களிலே யுள்ள அண்டங் காக்கைகள். (Ravens) இந்தக் காக்கைகள் கோபுரத்திலிருந்து நீங்கிவிட்டால் கோபுரம் விழுந்துவிடும் என்று ஒரு பழைய கதை. இதையொட்டி இந்தக் காக்கைகளை மிகுந்த கருத்தோடு பாதுகாத்து வருகிறார்கள்! ஆறு காக்கைகள் 'எஸ்டாப்ளிஷ்மென்ட்' என்ற சிப்பந்திகளின் கூட்டத்திலேயே சேர்க்கப் பட்டு வாரந்தோறும் தலைக்கு இரண்டு ஷில்லிங் நாலு பென்ஸ் வீதம் சம்பளம் பெறுகின்றன. அதாவது இந்த ''வாரப்படி'' அவற்றின் ஊனுணவுக்காக! இவை கோபு ரத்தை விட்டுப் பறந்து சென்றுவிடாதபடி இறக்கைகளை அவ்வப்போது கவனித்துக் கொள்கிறார்கள்!! பல்லாண்டுகள் வாழ்கிற இந்தக் காகங்களிலே ''ஜேம்ஸ் க்ரோ'' என்ற அண்டங் காக்கை நாற்பத்துநான்கு ஆண்டுகள் டவரிலேயே இருந்ததாம்!

டவரை விட்டு வெளியே வந்து தெம்ஸ் நதியின் கரையில் நடந்தால், ஓரங்களிலே பழைய பீரங்கிகளையும் படைக்கலங்களையும் காட்சியாக வைத்திருப்பதைப் பார்க்கலாம். நதியின் குறுக்கே 'டவர் ப்ரிட்ஜ்' (Tower Bridge) என்ற அரிய பாலம் நிற்கிறது. உயர மான கப்பல்கள் வரும்போது இரண்டாகப் பிளந்து மேலே செல்கிறது. கப்பல்கள் கடந்து சென்றதும் மீண்டும் இரு பிளவுகளும் தாழ்ந்து வந்து சேர்ந்து கொள்கின்றன. 'வாட்டர் பஸ்' என்ற யாத்திரைப் படகுக ளிலே ஏறிப் பாலத்தின் காட்சியையும் வானத் தையும் பார்த்துக் கொண்டே செல்லலாம்!

லண்டனின் வானத்தில் பார்ப்பதற்குரிய அதிசயங்கள் என்ன உண்டு என்று கேட்க லாம்! வெறும் வெட்டவெளிதான் அது! சாதாரணமாக லண்டனிலே நட்சத்திரங்களை யும், கிரகங்களையும் வானத்திலே பார்ப்பது அரிதென்று தெரிந்து, இவற்றையும் விஞ் ஞான அறிவு கொண்டு நம் கண் முன்னே காட்டுகிறார்கள் லண்டன் நகரத்திலே! அந்தக் காட்சியைப் பார்ப்பதற்குப் ''பேக் கர் வீதி'' என்ற வட்டாரத்துக்குச் செல்ல வேண்டும். (தொடரும்)



# படித்துப் பாருங்கள்



## கவிதா ராஜ்யம்

அவரவர் பணியை அவரவர் சரியாகச் செய்தால்தான் நாட்டிலே ஆட்சி செவ்வனே நடைபெறும். கற்பனையில் ஆட்சி நடத்தும் கவிஞனிடம் நாடாளும் பொறுப்புக் கிடைத்தால் அந்த ஆட்சியின் நிலை எப்படியிருக்கும்? கற்பனைக்கும் எட்டாத அளவு விபரீதங்களுக்கு நாடு உள்ளாகும்; நாளொரு கட்டளையும் பொழுதொரு மாற்றமுமாக விளைந்து நாட்டிலே அமைதி சீர்கேடுறும். சோழ அரசன் விஜயாலயன் கலிங்கப் போரினால் ஏற்பட்ட அழிவைக் கண்டு அரசைத் துறந்து ஒரு கவிஞனுக்கு முடிசூடிவிட்டு நாட்டைவிட்டு மறைகிறான். பண்டமாற்று முறை அமுலாக்கப்பட்டிருக்கிறது நாட்டில். அரசன் மக்கள் ஒவ்வொருவருக்கும் ஐந்து கலம் நெல் கொடுக்கப் பணிக்கிறான். களஞ்சியத்தில் தானியம் ஒரு மணிகூட இல்லை என்று மந்திரியின் பதில் கிடைக்கிறது. மக்கள் செலுத்த வேண்டிய ஆறிலொரு கடமை என்னவாயிற்று என்று கேட்கிறான் மன்னன். "ஆம்! அவர்கள் தங்கள் கடமையைச் செலுத்திவிட்டார்கள்! அவர்கள் செலுத்தியது தானியமல்ல, அத்தனையும் அக்ஷரலக்ஷம் பெறுமான கவிதைகள்!" என்று மந்திரி கடர்கடப் பதிலளிக்கிறான். கவிதா ராஜ்யத்தில் கைகண்ட பலன் இது. நாடகம் இவ்வாறு பல இடங்களில் ஹாஸ்ய ரசனையோடு செல்லுகிறது.

ஆசிரியர்: வேலவன். பிரசுரம்: மூர்த்தி பப்ளிகேஷன், 15, ஸ்ரீமான் ஸ்ரீநிவாச அய்யங்கார் ரோடு, சென்னை–18; விலை ரூ. 3.00.

## ஒரே இனம்

சுன்னாகம் தமிழருவிப் பதிப்பகத்தார் தொகுத்துள்ள ஈழத்துச் சிறுகதைகள் தொகுதியைப் படித்துப் பார்த்தபோது தங்கள் நாட்டுச் சூழ்நிலையில் தோய்ந்த விதம் விதமான நல்ல சிறுகதைகளை எழுதும் தரமான எழுத்தாளர்கள் ஈழத்தில் இருப்பதை உணர முடிந்தது.

இதோ, அந்தப் புகழை இன்னும் வலுவாக்குவது போல் இலங்கை எழுத்தாளர்களான கணேசலிங்கன், டொமினிக் ஜீவா, வரதர் போன்றோரின் மணி மணியான சிறு கதைகளும், வ. அ. இராசரத்தினத்தின் கொழுகொம்பு நாவலும் வெளிவந்திருக்கின்றன.

'ஒரே இனம்' என்ற புத்தகம் திரு கணேசலிங்கனின் இரண்டாவது சிறுகதைத் தொகுதியாகும். நல்ல சிறு கதைகளை எழுதக் கூடிய சிறந்த ஈழத்து எழுத்தாளர்களுள் கணேசலிங்கமும் ஒருவர். அவருடைய 'ஒரே இனம்' கதைத் தொகுதியில் வெறும் கற்பனை மயக்கில் தோன்றிய புனைகதைகள் மட்டும் காணப்படவில்லை. சமூக வளர்ச்சியின் தேய்வும், தேய்வற்ற நிலையும் யதார்த்தக் கண்களோடு நோக்கப்படுகின்றன. சமூகக் குறைபாடுகளைக் கண்டு பரந்த அநுதாபமுள்ள கதாசிரியன் ஒருவன் மனம் துடிப்பதும் தெரிகிறது. இந்தத் தொகுதியில் அமைந்துள்ள பதினொரு கதைகளில் வேறு வேறு கதையமைப்பு இருந்தாலும், மொத்தமாகப் பல கதைகளில் 'உழைப்பின் உரிமை' என்ற ஒரே தொனி அழுத்தமாகக் கேட்கிறது.

கொழும்பு புறக்கோட்டை பஸ் நிலையத்தில் மூட்டை தூக்கும் சிறுவர்களின் தன்மானத்தையும், உப்புக்குளம் சந்திவழியாகக் கொட்டாஞ்சேனைக்குப் போகும்போது உணவுக்கடை விரித்திருக்கும் சொத்திக் கிழவியின் உள்ளுணர்வையும், எல்லையளவு பழகிய கண்களோடு பார்த்து எழுதியிருக்கிறார் ஆசிரியர்.

இந்தியச் சூழ்நிலையில் ஆசிரியர் எழுதியிருக்கும் 'சீக்கிரமாய் வந்து விடு' 'பகற் கனவு' போன்ற கதைகளும் உருக்கமாக இருக்கின்றன. 'கவிஞன் காதலி' என்ற உருவகக் கதை ஒன்றும் இதில் அமைந்து சிறப்புப் பெறுகிறது.

ஆசிரியர், செ. கணேசலிங்கன். விற்பனை உரிமை: பாரி நிலையம் 59, பிராட்வே, சென்னை–1. விலை: ரூ. 2–0–0.

## கயமை மயக்கம்

ஈழத்து முற்போக்கு எழுத்தாளரான திரு வரதர் எழுதிய பன்னிரண்டு சிறு கதைகள் இணைந்த தொகுதி இது. 'கயமை மயக்கம்' என்ற ஒரு கதைமட்டும் குறுநாவல் அளவுக்கு நீண்டிருக்கிறது.

சமூகத்தின் ஒவ்வொரு மூலையிலும் நேர்மை காணத் துடிக்கும் மூர்த்தி மாஸ்டரையும், இளங்கோவையும், கதைகளில் சந்திக்கும் போது பெருமையாயிருக்கிறது. சில பிரச்னைக் கதைகளும் இந்தத் தொகுதியிலுள்ளன. அவற்றில் ஒன்றிரண்டின் முடிவு ஆக்கத்துக்கு வழிகோலுவனவாயிருக்கின்றன.

'ஒருகணம்' என்ற கதை எழுத்தாளனுக்குப் பொறுப்பும் ஒழுக்கமும் அவசியம் என்பதை மிக நன்கு விளக்குகின்றது. ஏழைச் சிறுவனுக்காக இரங்கி அழுகிற பள்ளி உபாத்தியாயரை 'வாத்தியார் அழுதார்' என்ற கதையில் சந்திக்கிறோம். கயல்விழி, பூவழகி, ஆகிய நங்கையரைக் கதாபாத்திரங்களாக்கிய ஆசிரியரே திரேசாவையும் ஒரு கதையில் படைத்திருக்கிறார். திரேசாவின் பொய்மைக் கவர்ச்சியையும் மற்ற நல்ல பாத்திரங்களுக்கு மாற்றாக அமையுமாறே எழுதியிருக்கிறாரென்று எண்ணத் தோன்றுகிறது.

இவர் கதைகளில் இயற்கையான வாழ்வோட்டம் நன்றாக அமைவு பெறுகிறது.

ஆசிரியர்: தி. ச. வரதர். பிரசுரம்: வரதர் வெளியீடு, யாழ்ப்பாணம். விலை: ரூ. 2–25.

## பரதன்

'பரதன்' இராமாயணக் காப்பியத்தின் சிறந்த பாத்திரம். பரதனை மிகுந்த இராம பக்தியுடையவன், உத்தமன் என்று அறிந்து எல்லோரும் போற்றுகிறார்கள். ஆனால் இச்சிறிய நாடகநூலின் ஆசிரியராகிய திரு தி. மாணிக்கவாசகம்-பி. ஏ. அவர்கள் பரதன் ஒரு தியாகி என்ற உண்மையையும், அரசாள்வதற்கு உரியவன் என்ற உண்மையையும் விளக்க முற்படுகிறார். கம்பராமாயணக் காட்சிகளைச் சான்றாகக் கொண்டு இந்த நாடக நூலை ஆசிரியரால் நன்கு உருவாக்க முடிகிறது.

உரையாடல்கள் நல்ல செந்தமிழ் நடையில் வகுக்கப்பட்டுள்ளன. கல்லூரிகளிலும், பள்ளிகளிலும் மாணவர்கள் நடிக்க மிகவும் பயன்படுகிற நாடகம் இது. பழங்காப்பியப் பாத்திரங்களைக் கொண்டு புதிய நாடகங்களைப் புனையும் திறமான புலமையை ஆசிரியரிடம் கண்டு பாராட்டுகிறோம். 23 காட்சிகளில் அமைந்துள்ள நாடகம் ஒரு பகுதியிலும் சுவையோ, நடைநயமோ குன்றாமல் செல்வது குறிப்பிடத்தக்கது.

ஆசிரியர் : தி. மாணிக்கவாசகம்-பி. ஏ. வெளியீடு : விசாலாட்சி பதிப்பகம், மீனாட்சி நிலையம், திருப்பரங்குன்றம் ரோடு, மதுரை-3 விலை : ரூ. 1

## சிலம்பொலி

சிறுகதை, நாவல் துறைகளில் ஈழத்துத் தமிழ் எழுத்தாளர்கள் வளர்ச்சியும் ஆர்வமும் பெற்றிருப்பது போலவே மறுமலர்ச்சிக் கவிதைத் துறையிலும் பெற்றிருக்கிறார்கள். இலங்கையில் அண்மையில் வெளியிடப் பெற்றிருக்கும் நாவற்குழியூர் நடராசனின் கவிதைகள் அடங்கிய சிலம்பொலி என்னும் தொகுதியைப் படிக்கும்போது கவிதைத் துறையில் அவருக்கிருக்கும் ஆர்வத்தை மிக நன்கு விளங்கிக் கொள்ள முடிகிறது.

நாற்பத்துமூன்று தலைப்புக்களில் ஆசிரியர் அவ்வப்போது எழுதிய கவிதைகள் இதில் தொகுக்கப் பெற்றுள்ளன. பதினைந்தாண்டுகளாய்ப் பத்திரிகைகளில் கவிதை எழுதும் பெருமை பெற்றவர் ஆசிரியர். பல ஆண்டுகளாகத் தமிழகத்து இதழ்களும் ஆசிரியரின் கவிதைகளை போற்றி வெளியிட்டிருக்கின்றன.

எல்லாக் கவிதைகளிலும் தெளிவும் சுவையும் காண்கிறோம். 'சங்கத் தமிழல்ல, சாதாரண வழக்குத் தங்கத் தமிழாலேயே தயாரிக்கப்பட்டவை' — என்று ஆசிரியரே நூலின் முன்பு கூறியிருக்கிறார். ஆசிரியரின் கவித்திறனைப் போற்றுகிறோம்.

ஆசிரியர் : நாவற் குழியூர் நடராசன் ; வெளியீடு: வரதர் வெளியீடு, யாழ்ப்பாணம். விலை : ரூ. 1–75.

## தினசரி தியானம்

சுவாமி சித்பவானந்தர் தொகுத்து விளக்கியிருக்கும் 'தினசரி தியானம்' என்ற புத்தகம் பெரும் பயன் நிறைந்தது. தொண்டு, ஒழுக்கம், தொல்வினை, ஆலயம் போன்ற தலைப்புக்களில் தியானங்கள் அமைந்துள்ளன. ஒவ்வொரு தியானத்துக்கும் கீழே கொடுக்கப்பட்டிருக்கும் பாடல் பகுதிகளின் மூலநூற் பெயரும் எண்ணும் கொடுக்கப்பட்டிருந்தால் இன்னும் நன்றாக அமைந்திருக்கும்.

தமது முகவுரையில் சுவாமிகள் கூறியிருப்பதுபோல் பக்தியையும், ஞானத்தையும் வளர்க்க இந்நூல் பெரிதும் பயன்படுமென்பதில் சிறிதும் ஐயமில்லை.

ஆசிரியர் :—சுவாமி சித்பவானந்தர், வெளியீடு : ஸ்ரீராமகிருஷ்ண மிஷன், திருப்பராய்த்துறை போஸ்ட், திருச்சி மாவட்டம், விலை : ரூ. 4—50.

## இலக்கிய வழி

சிறந்துத் தமிழ்ப் பேராசிரியர் பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை எழுதிய 'இலக்கிய வழி' என்ற நூலின் இரண்டாம் பதிப்பு இது.

பண்டிதமணியின் மணி மணியான இலக்கியக் கட்டுரைகள் பதினைந்து இதில் தொகுக்கப் பெற்றுள்ளன. தெளிவும் சுவையும் மிக்க நடையில் சொல்லும் இலக்கியப் புலமை ஆசிரியரிடம் இருக்கிறது. தனிப் பாடல்கள், மனோன்மணீயம், கம்பன் என்று வெவ்வேறு புலமையிலிருந்து தொகுத்துத் தமிழன்னைக்குக் கதம்பக் கலைமாலை சூட்டியிருக்கிறார் பண்டிதமணி. வளமான இலக்கிய அறிவு பெறுவதற்கு இது போன்ற கட்டுரைத் தொகுதிகள் தமிழன்பர்கள் யாவரும் படித்தற் கேற்றவை ஆகும்.

ஆசிரியர் : கணபதிப் பிள்ளை, வெளியீடு: வரதர் வெளியீடு, யாழ்ப்பாணம், இலங்கை. விலை : ரூ. 1—50

## மங்கள வல்லி

இந்த முருகப்பெருமான் என்னென்ன விளையாட்டெல்லாமோ செய்திருக்கிறான்! வீரப்பாண்டியக் கட்டபொம்மன் இல்லை, அவன் மனைவி சக்கம்மாளுடைய இரத்தின ஹாரத்தைக் குற வள்ளிக்காகத் 'தண்டி'க் கொண்டிருக்கிறான்; மங்களவல்லியின் மங்கள சூத்திரத்தை மும்முறை தேட்டை போட்டிருக்கிறான்; ஆள் மாறாட்டம் செய்து வேலாயுத மூப்பனார் வீட்டில் வயிறு புடைக்கக் களி தின்றிருக்கிறான்; பழனியில் ஒரு கூடை மீன் திருடியிருக்கிறான் கள்ளன்! ஏழு கள்ளருக்குக் கூட அருள் செய்து, அந்த பக்தர் பலவேசருக்கு அடியும் உதையும் வாங்கி வைத்திருக்கிறான். இப்படி எத்தனையோ லீலை. எத்தனை லீலை என்றறிய ரசபதி அடிகள் எழுதியுள்ள 'மங்களவல்லி' என்ற நூலைப் படிக்க வேண்டும். எட்டிலேயே இருந்து ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் வழி வந்துள்ள கௌமார புராணத்தில் காணப்படும் பதினோர் அடியார்கள் வரலாறே இப்புத்தகம்.

கிடைக்குமிடம் : அமுத நிலையம், தேனாம் பேட்டை, சென்னை-18, மலிவுப் பதிப்பு 30 புதுக்காசு. கிளேஸ்பதிப்பு; விலை: ரூ. 1-25

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில்




## ஈறுகளை பலப் படுத்து கிறது

**வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!** "ஆல்மோஸ்கோப்" பரிசோதனைகளில், கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட், வேறெந்த சாதாரண பற்பசையையும்விட... மிகத்தீவிரமாக வாய் நாற்றத்தை ஒழிக்கிறது என்பது நிரூபணமாயுள்ளது.

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!** கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால், பற்களை சொத்தையாக்கும் கிருமிகள் அழிகின்றன.

கால்கேட்டின் பிரத்தியேகமான சேர்க்கை முறையைக் கொண்ட குளோரோபில்லின் பூரண பலனை அடையுங்கள்.... கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்ட் அல்லது கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் வாங்குங்கள்!

கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை தினமும் தேய்ப்பதால், தீவிரமான குளோரோபில்லின் பூரண தன்மையை அடைந்து, ஈறுகள் உறுதியாகவும் ஆரோக்கியமாகவும் இருக்க உதவுகிறது. உன்னதமான இந்த குளோரோபில் டூத் பேஸ்ட், சிறந்த பற்பசை, பற்பொடி முதலியவை தயாரிப்பதில் மிக்க அனுபவங்கொண்ட உலகிலே மிகப்பெரிய ஸ்தாபனத்தாரால் தயாரிக்கப்படுகிறது!

வேறு எந்த பற்பசையிலும்
இதைவிட அதிக விரிய குளோரோபில்
இல்லை — குழந்தைகள் அதன்
பெப்பர்மின்ட் வாசனையை மிகவும்
விரும்புகிறார்கள்!







பெரிய எக்கானமி
சைஸ் லாபகரமானது!

CYPA-G-10 TAM.

# செங்கோட்டு அர்த்தநாரி

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

ஓர் இலக்கியக் கூட்டம். அக் கூட்டத்தில் ஓர் அறிஞர் சொற்பொழிவு நிகழ்த்தினார். அவரோ சிறந்த சீர்திருத்தவாதி. ஆணுக்குப் பெண் 'சரிநிகர் சமானம்' என்று அறைகூவுகிறவர். பேச்சின் இடையிலே சொன்னார்: ''நம் நாடு ஆங்கிலேயர் ஆளுகையில் இருந்தபொழுது சீமையில் இந்தியா மந்திரியாக இருந்த பெதிக் லாரன்ஸ் என்பவர் பெயர் எப்படி அமைந்தது தெரியுமா? லாரன்ஸ் என்பதுதான் அவர் பெயர். பெதிக் என்பது அவரது மனைவியின் பெயர். இருவரும் சமூக சேவையில் ஈடுபட்டவர்கள். அது காரணமாக இருவரும் தங்கள் இருவரது பெயரையும் இணைத்தே மக்களிடம் அறிமுகம் செய்து கொண்டனர். அம்மை பெயர் மிஸஸ் பெதிக் லாரன்ஸ் என்றால் ஐயா பெயர் மிஸ்டர் பெதிக் லாரன்ஸ். நாமோ நமது மனைவியின் பெயரை முழுக்கவே மறக்கடித்து விடுகிறோம். மிஸஸ் ராமசாமி, மிஸஸ் கிருஷ்ணசாமி என்றே அவர்களையும் அழைத்து வருகிறோம். இது சரியா?'' என்று பேசிக் கொண்டே போனார். அந்தக் கூட்டத்துக்குத் தலைமை வகித்த நான் இதற்குக் கொஞ்சமும் சளைக்கவில்லை. ''ஆணும், பெண்ணும் சரி நிகர் சமானம் என்பதற்கு இந்தப் பெயர் இணைப்புத்தான் முக்கியம் என்றால் பெதிக்லாரன்ஸ் பிறப்பதற்கு எவ்வளவோ காலத்துக்கு முன்பே நமது கடவுளர் நமக்கு வழிகாட்டி யிருக்கிறார்களே. நாம் வழிபடும் மூர்த்திகளில் பெரும்பாலோர் அம்மையப்பனாகத்தானே இருக்கிறார்கள். அவர்கள் பெயரும் உமா சங்கரன், லட்சுமி நாராயணன், சீதாராமன் என்றுதானே இருந்திருக்கின்றன. பெயரை மாத்திரந்தானா தங்கள் பெயருடன் சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள்? அவர்களது வடிவையே தங்கள் வடிவில் சேர்த்துக் கொண்டிருக்கிறார்களே. மனைவியைப் பாகத்தில் வைத்துக் கொள்கிறான் ஒருவன், ஆகத்தில் வைத்துக்கொள்கிறான் ஒருவன், ஏன்? நாவிலேயே வைத்துக்கொள்கிறான் மற்றொருவன். திரிமூர்த்திகளின் கதையே இவ்வளவின என்றால் இம்மூர்த்திகளை வணங்குகின்றவர்களாகிய நாமா நம் மனைவியரைச் சகதர்ம சாரிணிகளாக வைத்துக் கொள்ளத் தயங்கப் போகிறோம்?'' என்று எதிர்க் கேள்வி போட்டேன், பேச்சாளரிடம். உண்மைதானே. இம்மூர்த்திகளெல்லாம் நமக்கு நல்ல வழிகாட்டிகளாக அல்லவா அமைந்திருக்கின்றனர். அதிலும் பாகத்திலேயே வைத்துக் கொண்டிருக்கிறானே அந்த மாதிருக்கும் பாதியன் அந்த அர்த்தநாரியை நினைத்தால் அந்த மூர்த்தியைக் கற்பனை பண்ணிய கலைஞனை நினைக்கிறோம். சொல்லிலும் கல்லிலும் அம் மூர்த்தியை உருவாக்குவதில்தான் எவ்வளவு சிந்தனைத் திறன்? மனித உடம்பின் அமைப்பையும் மற்றப் பௌதிகங்களின் அமைப்பையும் பார்ப்போமானால் ஒவ்வோர் உடம்பும் இரு வேறு ஒட்டுகளாக அமைக்கப் பெற்றிருத்தல் விளங்கும். ஆணும் பெண்ணும் ஒன்றுகின்ற வகையில் அன்றி, ஊர்வன, பறப்பன, நடப்பன முதலிய எந்த உயிருமே சிருஷ்டிக்கப் படுவதில்லையே. இப்படி சிருஷ்டிக்கப்படும் உயிரும் உடலும் தத்தம் தாயும் தந்தையுமாய் இருவகை இயல்புகளும் பொருந்தி நிற்க வேண்டுவதுதானே. உலகில் உள்ள எல்லா உயிர்களுக்கும் தாயாகவும் தந்தையாகவும் இருக்கும் இறைவனை அந்த உருவில் – ஆம்! பாதி ஆணாகவும் பாதி பெண்ணாகவும் வழிபடுவதில்தான் எத்தனை பொருத்தம். அப்படி இறைவனை அர்த்தநாரியாக, மாதிருக்கும் பாதியனாக, பந்தின் மெல்லடியாள் பாகனாக வழிபடும் தலம்தான் திருச்செங்கோடு என்னும் கொடிமாடச் செங்குன்றூர். அந்தத் திருச்செங்கோடு என்னும் தலத்துக்கே செல்கிறோம் நாம் இன்று.



கோயில்

திருச்செங்கோடு, சேலம் மாவட்டத்தில் உள்ள ஒரு தாலூக்காவின் தலைநகரம். இத்தலம் சேலத்துக்குத் தெற்கே 28 மைல் தூரத்தில் இருக்கிறது. சேலம் ஜங்ஷனில் இறங்கிக் கார் வைத்துக்கொண்டும் செல்லலாம். சேலம்—ஈரோடு ரயில்பாதையில் சங்ககிரிதுர்க்கம் என்னும் ஸ்டேஷனில் இறங்கித் தென் கிழக்காய் ஆறுமைல் வண்டி பிடித்துக் கொண்டும் சென்று சேரலாம். சொல்லப் போனால் செங்கோடு என்பதே செங்குன்று, செங்கிரி என்றெல்லாம் வழங்கி, சங்ககிரி என்றும் வழங்கப் படுகிறதோ என்

லவோ? இந்தச் சங்ககிரியிலும் ஒரு சிறு குன்று உண்டு. அதனால்தானே சங்ககிரி துர்க்கம் என்று பெயர் பெற்றிருக்கிறது. சங்ககிரியில் இருந்து போகும் போதே திருச்செங்கோட்டு மலை தெரியும். பெயருக்கு ஏற்பவே சிவந்த நிறத்தோடு அம்மலை காட்சி அளிக்கும். இன்னும் அம்மலை மேல் ஏறி நிற்கும் அர்த்த நாரியைப் போலவே இரண்டு சிகரங்கள் வேறே பின்னிப் பிணைந்து நிற்பதும் தெரியும். பின்னிக் கிடக்கும் பெருங்கோடாகத் திருச் செங்கோடு இருப்பதனால்தானே, வேறு எங்கும் இல்லாத அர்த்தநாரி மூர்த்தம் இங்கு மூல மூர்த்தியாகவே எழுந்தருளியிருக்கிறது. மலை கிட்டத்தட்ட இரண்டாயிரம் அடி உயரம் உயர்ந்திருக்கிறது. அதில் 1900 அடி உயரத்தில் கோயில் இருக்கிறது. அம்மலை ஏற 1200 படிகள் இருக்கின்றன. பழனியில் இருப்பது போல் நன்றாகச் செப்பம் செய்யப் பட்ட படிகள் அல்ல. என்றாலும் ஏறுவதற் கும் இறங்குவதற்கும் வசதியாக இருக்கும். உயரத்திலும் பழனிக்கு ஒன்றரைப் பங்கு இருப்பதால் ஏறுவது கொஞ்சம் சிரமமாகவே இருக்கும். மலை ஏற முயல்வதற்கு முன்னா லேயே அடிவாரத்தில் உள்ள கைலாயநாதர் கோயிலில் சென்று வணங்கி விடலாம். மலை ஏறி இறங்கியபின் எப்போதடா ஊரை சென்று தங்கி இளைப்பாறுவோம் என்றிருக் குமே; அடிவாரத்தில் உள்ள கோயிலுக்கு எல்லாம் செல்லத் தெம்பு இருக்காதே. இந்தக் கைலாய நாதர் கோயில் ஊருக்கு நடுவில் இருக்கிறது. சுமார் 250 அடி சதுரத்தில் மதில்களுடன் கூடிய பெரிய கோயில்தான். கோயிலின் பெருந்திரு வாயிலே 76 அடி உயரம் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். இங்கு கைலாயநாதரும் அவரது துணைவி பரிமளவல்லியும் தனித் தனிக் கோயிலில் இருக்கிறார்கள். இருவருக்கும் இடையே ஒரு சிறு கோயிலில் சுப்பிரமணியர் நிற்கிறார். இவர் அறு முகவன் அல்ல; தலையில் திருமுடி யும் கரத்தில் வேலும் தாங்கிய கோலத்தில் இருக்கிறார். இவர்களையும் இத்தல விநாயக ரான பட்டி விநாயகரையும் வணங்கிப் பின்னரே மலை ஏற முற்படலாம். அப்போது தானே உடலில் மாத்திரம் அல்ல, உள்ளத் திலுமே வலுவோடு மலை ஏற முடியும்.

சரி, இனி மலை ஏறத் தொடங்கலாமா? அதற்குமுன் இத்தலத்தைக் கொடிமாடச் செங்குன்றூர் என்றும் இங்குள்ள மலையை நாககிரி என்றும் தெரிந்து கொள்ளலாம். கொடிகளை வீசும் மாடமாளிகைகள் நிறைந்த சிவந்த மலையை உடையதால் கொடிமாடச் செங்குன்றூர் என்று பெயர் பெற்றிருக்க வேணும். நமக்குத்தான் தெரியுமே, அந்த வாயுவுக்கும் ஆதிசேஷனுக்கும் நடந்த போட்டி. மகா மேருவை ஆதிசேடன் தன் படத்தை விரித்து மூடிக் கொள்கிறான். வாயுவோ மேருவைப் பெயர்க்கும் வண்ணம் வீசுகிறான். வாயுவின் வேகம் தாங்காமல் சர்ப்ப அரசன் தன் படத்தைச் சற்றே மேலே தூக்கியிருக்கிறான் சிறிது மூச்சு வாங்க. அவ்வளவுதான்; மேருவின் சிகரங் களில் ஒன்று பிய்த்துக்கொண்டு வந்து விழுந் திருக்கிறது. இங்கே அத்துடன் சேடனது வாயின் இரத்தம் பட்டுச் சிவந்த குன்றாகவே அது இருந்திருக்கிறது. இதனாலேயே செங் கோடு என்றும், நாககிரி என்றுமே வழங்கப் பட்டு வந்திருக்கிறது. அடிவாரத்தில் கஜமுகப்படி விநாயகர் முதற்படியிலேயே ஓர் இலுப்பை மரத்தடியில் இருக்கிறார். அவரை வணங்கிவிட்டே மலை ஏற வேணும். அதன் பின் செங்குந்தர் மண்டபம், காளத்தி சுவாமிகள் திருமடம், திருமுடியார் மண்ட பம் எல்லாம் படியேறிக் கடக்கவேணும். இங்கேதான் கற்பாறையிலே, நாககிரி என்ற பெயருக்கு ஏற்ப அறுபதடி நீளத்தில் பெரிய உருவில் ஐந்து தலைப் பாம்பு ஒன்றைச் செதுக்கி வைத்திருக்கிறார்கள். பாம்பின் படத்தின் நடுவிலே ஒரு சிவலிங்கம் இருக் கிறது. இந்த நாக சிலைப் பக்கத்திலுள்ள சிறு மண்டபத்திலிருந்து சுமார் 200 படிகளைக் கடந்தால் செங்குந்த சின்ன முதலியார் மண்டபம் வரும். அதன்பின் சிங்கத்தூண் மண்டபம். இதையும் கடந்த பின்பே அறுப தாம் படி என்னும் சத்தியப் படிகள். பிற தலங் களில் பதினெட்டாம் படியென்றும் கருப்பன் என்றும் கூறும் இடத்தைப் போன்றது இது. ஏதாவது தீராத வழக்கென்றால், வாதிடு பவர்கள் இந்த அறுபது படிகளையும் ஏறி, தான் சொல்லுவது எல்லாம் சத்தியம் என்று அந்தப் படிகளின் பேரில் உள்ள முருகக் கடவுள் அறியச் சொல்ல வேணும். இன்றும் இச்சத்திய முறை நடக்கிறது. இந்த அறுபதாம் படிமேல் எல்லையில் இருக்கும் முருகனை அன்றே அருணகிரியார் சத்ய வாக்கியப் பெருமாள் என்று அழைத்து அவர் திருப்புகழ் பாடி யிருக்கிறார். நாம் சத்தியம் ஒன்றும் செய்யா விட்டாலும், சத்திய வாக்கியப் பெருமா னுக்கு வணக்கம் செலுத்தும் வாக்கில் கொஞ்சம் அங்குள்ள மண்டபத்தில் தங்கி யிருந்து இளைப்பாறி மேலும் நடக்கலாம். அதன்பின் செட்டிக்கவுண்டன் மண்டபம், தேவரடியாள் மண்டபம், இளைப்பாறு மண்ட பம் எல்லாம் கடந்தே கோபுர வாசல் மண்ட பத்துக்கு வந்து சேரவேணும். அங்கும் கொஞ்சம் இருந்து இளைப்பாறிக் கொண்டே

# பளபளவென்று சலவை செய்யப்பட்ட புடவையணிந்து புன்னகைபூத்து நிற்கிருள்

டெட், ஸ்வஸ்திக்கின் சுத்திகரிப்புக் கலவை, வெள்ளைத் துணிகளை மிகப் பிரகாசமாக வெளுக்கிறது. வர்ணத் துணிகளுக்கு மனோகரமான காந்தியளிக்கிறது. நூல் துணிகளுக்கும் அது நல்லது. மென்மையான வஸ்திரங்களுக்கும் சிறந்தது.

வன்னீராயினும், மென்னீராயினும் சோப்பை விடத் துரிதமாகச் செயல்படுகிறது டெட். அபரிமிதமாக நுரை கட்டுகிறது. கண்கவரும் வெண்மையைத் தரும் பொருள் அதில் இருக்கிறது.

உங்களது துணிகளை டெட்டைக் கொண்டு நவீன முறையில் சலவை செய்யுங்கள்.

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், பம்பாய




SHILPI SOM 7

கோயிலுள் செல்லலாம். இந்த மண்டபத்தை ஒரு பெரிய கோபுரம் அழகு செய்கிறது. அந்த மண்டபத்துக்கே மேற்புறம் இருபது படிக்கட்டுகள் கீழ் இறங்கியே கோபுரத்தின் பிராகாரத்துக்கு வரவேணும். இனி அக்கோயிலை வலம் வர முனைந்தால் முதல் முதல் நாம் வந்து சேருவது செங்கோட்டு வேலவர் சந்நிதிதான். அவன் பாலசுப்பிரமணியன், இவன் மிகவும் அழகு வாய்ந்தவன். இவன் அழகினைக்கண்டே அருணகிரியார்,

மாலோன் மருகனை, மன்றாடி
மைந்தனை, வானவர்க்கு
மேலான தேவனை, மெய்ஞ்ஞான
தெய்வத்தை, மேதினியில்
சேலார் வயல் பொழில் செங்கோடனைச்
சென்று கண்டு தொழ
நாலாயிரம் கண் படைத்திலனே
அந்த நான்முகனே

என்று பாடி மகிழ்கிறார். இந்த அருணகிரியார் இந்தச் செங்கோட்டு வேலனிடம் மிக ஈடுபாடு உடையவர் என்று தெரிகிறது. கந்தர் அலங்காரத்தில் அவனுக்கு என்று எட்டுப் பாட்டை ஒதுக்கி விடுகிறார். இன்னும் கந்தரனுபூதி, திருப்புகழ் பாடும் போதும் இவனை மறக்கவில்லை. கிழக்கு நோக்கி நிற்கும் இந்த வேலன் வலது கரத்தில் வேலும் இடது கரத்தில் கோழிக் கொடியுடனும் நிற்கிறான். இவனைக் கண்டு தொழாது மேல் நடக்க இயலாது. உற்சவ மூர்த்தமாக நிற்கும் வேலவனோ வள்ளி தெய்வயானை சகிதமாகவே நிற்கிறான். இக்கோயிலின் முன் மண்டபம் நல்ல சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்தது. சந்நிதிக்குச் சென்றதும் மகா மண்டபத்தில் நாம் முதலில் காண்பது அர்த்தநாரீசுவரரின் உற்சவ மூர்த்தத்தையே. செப்பு வடிவத்தில் சிறந்த வடிவம். தலையிலே சடைமுடிக்குப் பதிலாக ஓர் 'ஆண்டாள் கொண்டை'. மற்றப்படி இடப்பாகம் எல்லாம் பெண்மையும் வலப்பாகம் ஆண்மையும் நிறைந்திருக்கும். வலப்பாகத்தில்மற்ற அர்த்தநாரியில் இல்லாத விதத்தில் ஒரு கோலை மிடுக்காக ஏந்தியிருப்பார். இன்னும் இம்மூர்த்திக்கு இரண்டே திருக்கரங்கள் என்பதும் உய்த்துணரத்தக்கது. இந்த வடிவினையே மாணிக்கவாசகர்,

தோலும் துகிலும், குழையும்
சுருள் தோடும்
பால் வெள்ளை நீறும்
பசுஞ் சாந்தும், பைங்கிளியும்

சூலமும் தொக்க வளையும்
உடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக்
குளிர்ந்தூதாய் கோத்தும்பீ!

என்று பாடியிருக்கிறார். இந்த வடிவினை இந்தப் பாட்டோடு பொருத்திப் பார்த்துக் கொண்டிருக்கும்போது ஒரு தொண்டு கிழ முனிவர் மூன்று கால்களுடன் இவர் காலடியில் நிற்பதைக் காண்போம். இவர் யார் என்று விசாரித்தால் அவர்தாம் பிருங்கி முனிவர் என்பார்கள். பிருங்கி சிவனையே தொழுபவர்; சக்தியை வணங்காதவர். இது சக்தியாம் அன்னைக்கு அவமானமாக இருந்திருக்கிறது. அதற்காக இறைவனிடம் வேண்டி அவர் உடலிலேயே பங்கு பெற்றிருக்கிறாள். அப்போதுகூட பிருங்கி வண்டு உருவெடுத்து இந்த அர்த்தநாரி வடிவத்தைத் துளைத்துச் சிவனை மாத்திரம் வலம் வந்து வணங்கினாராம். அப்படி வணங்கும்போது தம் உடலில் உள்ள சதையை எல்லாமே உதறி எலும்பும் தோலுமாகவே நின்றிருக்கிறார். அதனால் இறைவன் இவருக்கு மூன்றாவது கால் கொடுத்திருக்கிறார்.

இனி வடக்கு நோக்கிச் சென்றால் மூலவராம் அர்த்த நாரீசுவரரைக் காணலாம். நல்ல வெண்மை நிறத்தில் உற்சவ மூர்த்தம் போலவே இருப்பார். காலடியில் நீர் ஊறிக் கொண்டிருக்கும். மேற்கு நோக்கி நிற்கிறார் இவர். ஆனால் மேற்கு நோக்கி வாயில் கிடையாது. ஒரு சித்திரப் பலகணிதான் அங்கு உண்டு. இப்படி நிற்கும் அர்த்தநாரியைக் கண்டுதானே சம்பந்தர்.

வெந்த வெண்ணீறு அணிந்து,
விரிநூல் திகழ் மார்பில் நல்ல
பந்தணவும் விரலாள் ஒரு
பாகம் அமர்ந்து அருளிக்
கொந்தணவும் பொழில் கொடி
மாடச் செங்குன்றூர் நின்ற
அந்தணனைத் தொழுவார்
அவலம் அறுப்பாரே

என்று பாடியிருக்கிறார். இன்னும் ஞான சம்பந்தர் இத்தலத்துக்கு வந்திருந்த போது மக்களையெல்லாம் குளிர் சுரம் வாட்ட அவர், 'செல்வினை வந்து எமைத் தீண்டப் பெறா திரு நீலகண்டம்' என்று பாடி மக்களைக் குளிர் சுரம் தீண்டாமல் காப்பாற்றியிருக்கிறார்.

இந்த அர்த்தநாரீசுவரரைப் பார்த்தபின் அங்கேயுள்ள விசுவநாதர் விசாலாக்ஷி, ஆதி கேசவப் பெருமான் நாகேச்சுரர் சந்நிதிகளுக்கும் சென்று வணங்கலாம். மேலும் மலை ஏறிப் பாண்டீசர் கோயிலுக்கும் சென்று வணங்கலாம். இக்கோயில்தான் மலைச் சிகரத்தின் உச்சியில் இருக்கிறது. இங்குள்ள லிங்க மூர்த்தியை வந்தீசர் என்றும் அழைக்கின்றனர். புத்திர சந்தானம் பெற விரும்புபவர்கள் கார்த்திகை நக்ஷத்திரம் கூடிய நன்னாளில் சென்றுவணங்கினால்மகப்பேறுபெறுகிறார்கள்.

இந்தக் கோயிலில் நிறைய கல்வெட்டுகள் உண்டு. ராஜகேசரி வர்மன், பரகேசரி வர்மன் காலத்துக் கல்வெட்டுகள் பிராமணபோஜனம் செய்விக்க ஏற்படுத்திய நிபந்தனைகளைக் கூறுகின்றன. அறுபதாம் படிப் பக்கம் மதுரை கொண்ட பரகேசரி வர்மனது வெற்றியைக் குறிக்கும் கல்வெட்டுகள் இருக்கின்றன. அங்கு அக்காலத்தில் கிராம சபைகள் எப்படி நடந்தன என்பதையெல்லாம் குறிக்கின்றன. ஜடாவர்மன் சுந்தர பாண்டியன், கிருஷ்ண தேவராயன், மதுரை திருமலை நாயக்கர் காலத்துக் கல்வெட்டுகளும் இருக்கின்றன. மலைமேலே அக்காலத்திலே கோட்டை ஒன்று இருந்தது என்பதற்குக்கூடச் சான்றுகள் கல்வெட்டில் கிடைக்கின்றன. இன்று அக்கோட்டையின் சின்னம் முழுதும் அழிந்து போயிருக்கிறது. கோட்டை போய் விட்டது. கோட்டை வாசல் என்ற பெயர் மட்டும் இருக்கிறது. நமக்கு இருக்கும் கால்வலியில் இதைப்பற்றியெல்லாம் விரிவாக ஆராய்ச்சி செய்யத் தோன்றாது. ஆதலால் இத்துடனேயே நிறுத்திக்கொண்டு திரும்பிவிடுவோம்.



குளிர் ஜுரமா?



உடனே சிறிதளவு

# அமிர்தாஞ்சனம்

தடவுங்கள்



**அது விரைவில் குணமளிக்கும்**

அமிர்தாஞ்சனம், எப்பொழுது உங்களுக்குத் தேவைப்படும் என்பதை முன்கூட்டியே தீர்மானிக்க முடியாது. ஆகவே, எப்பொழுதும் ஒரு பாட்டில் வீட்டில் இருப்பது மிகவும் நலம். அது அவ்வளவு நம்பகமானது.




அமிர்தாஞ்சனம் லிமிடெட்
14/15, லஸ் சர்ச் ரோடு, சென்னை-4
பம்பாய்-1, கல்கத்தா-1, புது டில்லி

JWT-AM 1095



தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணமளிக்கும்

**பெப்ஸ்** வில்லைகளை
**உட்கொண்டால், உங்கள் இருமல் உடனேயே அகலும்**

பெப்ஸ் வில்லை ஒன்றைச் சுவைத்து ஆவி போன்ற அதன் சத்து குணமளிக்க வேலை செய்வதை உணருங்கள். வலியைக் குறைக்கவும், தொண்டைப் புண், பிராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷம் இவைகளுக்குக் காரணமாகிய கிருமிகளை அகற்றவும் உதவியளிக்கிறது. பெப்ஸ் உடனடி நிவாரணம் அளித்து விரைவில் குணமடையச் செய்கிறது.



PPT. 34-TAM

பிராங்கைடிஸ்,
தொண்டைப்புண்,
மண்டைநீர்,
அடைப்பு,
ஜலதோஷம்
மற்றும்
இருமலுக்கு
உடனேயே
நிவாரண
மளிக்கிறது.

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

**ஸி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லி.**

சோல் ஏஜண்டுகள்:
தாதா கோ., 86, நைனியப்ப நாயக் தெரு, சென்னை-3

# திரைக்குப் பின்னால்

லக்ஷ்மி சுப்பிரமணியம்

பாலம் தாண்டியானதும் பக்கத்தில் தாழ்வான நிலத்தில் இறங்கும் சந்து. அதில் பொதுவான வாசலோடு, ஒன்றுக்குப் பக்கத்தில் மற்றொன்றாகப் பெட்டிகள் அடுக்கியது போல் ஒரே அறை, ஒரு குறுகலான திண்ணை இவைகளோடு கூடிய வரிசை வீடுகள். அந்தப் பத்து வீடுகளுக்கும் பொதுவாக ஒரு குழாய். போட்டியில் மோதும் குடங்களோடு வாய் மாறித் தெறிக்கும் வசை மொழிகள். அதற்குப் பக்கத்தில் இடம் கொள்ளாமல் அடைத்துக் கொண்டு நிற்கும் ஒற்றை வேப்பமரம்.

இதுதான் எங்கள் காலனி.

ஒருவர் மூச்சு எதிர் முகத்தில் பட்டால் தான் காற்று. சமையலும், படுக்கையும், படிப்பும் ஒருங்கே நடைபெறும் அந்த ஒரே அறையிலிருந்து எழும் வாசத்தில், காற்றில் புக முடியாத புகை, வேகும் காய்கறிகளின் மணம், தேங்கிப் போன மூச்சின் புழுக்கம் யாவும் ஒன்றாய்க் கலந்து மூக்கை நிறைக்கும். ஒவ்வொரு குடித்தனத்திலும் குறைவில்லாமல் இருக்கும் குழந்தைகளின் சத்தம் அந்தக் காலனிக்கு ஒரு பர்லாங்கு தூரத்திலேயே வருவோரை வரவேற்கும்.

முதல் தேதி மாலை சம்பளப் பணத்தில் பிடித்தங்களும், கடன் கழிவுகளும் போக மிச்சத்தை மெலிந்த காகித உறையில் அரைப் பையில் இடுக்கிக் கொண்டு திரும்பும் நாங்கள் பத்துப் பேரும் முழு நூறு ரூபாய் நோட்டைக் கண்ணால் பார்க்காதவர்கள்தாம். குடும்பத்தைப் பொறுத்தவரையில் மற்றவர்களைவிட நான் கொஞ்சம் அதிர்ஷ்டசாலி என்றுதான் சொல்ல வேண்டும். தேய்ந்து போயிருந்தாலும் என் மனைவிக்கு வியாதி ஒன்றும் இல்லை. எனக்கும் காரியாலயத்துக்கு நடந்தே போய்வரக்கூடிய தெம்பு இருந்தது. எங்களுக்கிடையே மூன்றாம் பங்காக இருந்தது ஒரே ஒரு குழந்தைதான்.

மழைக் காலத்தில் லீட்டின் கூரை கொள்ளாமல் தண்ணீர் உள்ளே வழியும். வெயில் காலத்தில் குழாய்க்குத் தண்ணீரைத் தேடினாலும் கண்டுபிடிக்க முடியாது. காலனிக்குப் பின்புறம் ஆறாய் ஓடும் சாக்கடை. காற்றுக்காகத் திறக்கப் போய் ஜன்னல் வழியே கொசுக் கூட்டம் புகுந்து விடும். பூச்சி அரித்த பழம் போலத் தரை இட்டுத் திட்டாய்ப் பெயர்ந்து நலிந்தோற்றமளித்தது. வெள்ளைச் சுவர் பழுப்பேறி வெகு நாட்களாகி விட்டன.

காலனிக்குச் சொந்தக்காரர் கண்காணுச் சீமையில் இருந்தார். வாடகை வசூலிக்கும் ஏஜண்ட் வடிவேலு வைத்ததுதான் சட்டம். மாதம் இருபத்தைந்து ரூபாய் வாடகை வாங்கும் போது அவருக்கு ஏனோ பழுது பார்க்க மட்டும் பணமே கிடைப்பதில்லை. வாடகை வசூலுக்கு இரண்டாம் தேதி காலையில் வரும் போதுதான் அவரைப் பார்க்கலாம். அப்புறம் அடுத்த இரண்டாம் தேதி தான் அந்த ஒரு நேரப் பொழுதில் பத்துக் குரல்கள் புகார் மயமாய்த் துரத்தும் அவரை. எல்லாவற்றுக்கும் அவருடைய பதில் அந்த ஆழ்ந்த அர்த்தம் புரியாத சிரிப்புத்தான். அது அவருக்குப் பதினைந்து வருஷப் பழக்கமாயிற்றே? அலைவாரா என்ன?

நான் காலனிக்குப் புதிது. ஓர் ஆண்டுக்கு முன் சென்னைக்கு மாற்றலாகி வந்தபோது இந்தக் காலனியில் விழுந்தவன் நான். வடிவேலுப் பிள்ளையின் மேல் எனக்கு வன்மம் ஏதும் கிடையாது. அவர் நாங்கள் ஏது கேட்டாலும் பதிலே பேசாமல் நிற்பதைக் கண்டு நான் பொறுமை இழப்பதும் இல்லை. ஆனால் அவர் குரல் கேட்கும் வேளையில்தான் என் உள்ளம் குமுறும். அதோ! அவருடைய வசைமாரி!

“ஏ, லாவாரங்களா! வேப்பமரத்தின் மேலே உங்களுக்கு என்னடா வேலை? இறங்குங்கடா கீழே!”

கோடி வீட்டுப் பையன்களைப் பார்த்து அவர் கூப்பாடு போடுவார். அவர்களுக்கு ஏனோ வேப்பமரத்தின் மேல் அவ்வளவு நாட்டம் இருந்தது.

“தரையைக் குழி தோண்டிக் கொண்டு என்னடா விளையாட்டு? கோவிலாத் தெருவில் இடமா இல்லே? வீடு கட்டினவன் செலவு பண்ணலையாக்கும்? சொல்லுடா?”

இந்த முழக்கமெல்லாம் நான்கு வீடுகளுக்குக் கேட்கும். இதற்கு ஆளாகி நிற்கும் குழந்தைகள் அடுத்த வீட்டுக்காரர்களுடையவை.

“குழாய்த் தண்ணீரைத் திறந்துகொண்டு என்னடா விளையாட்டு? வால் பசங்களா? குளிக்கணுமானால் வீட்டுக் கொல்லைப்புறம் பானையில் பிடித்துக் கொண்டு போய் ஊற்றிக் கொள்ளுகிறதுதானே?”

வசைக்கு இலக்கானவர்கள் யார் என்று எட்டிப் பார்ப்பேன். நாலாவது வீட்டுப் பையன் தம்பிப் பயலைக் குழாய்த் தண்ணீரில் முங்க வைத்து வேடிக்கை பார்த்துக்கொண்டிருப்பான்.

சீறி வெடிக்கும் அவர் சொற்கள் தொண்டையை உரித்துக் கொண்டு வரும்போது, அதன் எதிரொலியாய் என் மனம் குமுறும். என் பையன் அவர் வாயில் சிக்கியதில்லை. அதுவும் நல்லதுக்குத்தான். இல்லாவிட்டால் ஒரு

நான் வடிவேலுவுக்கும் எனக்கும் பலத்த சண்டை மூண்டிருந்தால் ஆச்சரியம் இல்லை.

குழந்தைகளைக் கண்டால் அவருக்கு ஏன் இத்தனை வெறுப்பு? அவர்கள் கண் பார்வையில் விழுந்தாலே அலுத்துக் கொள்ளும்படி அவருக்கு ஏன் அவ்வளவு கரிப்பு? வருமானம் போதாமல் குழந்தைகள் வருஷத்துக்கு ஒன்றாகக் கூடிக்கொண்டு போக, தலைக்கு மேல் கடனேறித் திரிந்து கொண்டிருக்கும் அடுத்த வீட்டுக்காரர் பரமசிவம்கூடக் குழந்தைகளின் மேல் இப்படி எரிந்து விழுவதில்லையே?



அன்று குழந்தை கண்ணனுக்குப் பிறந்த நாள். காரியாலயத்து வேலை முடிந்ததும் கடைக்குப் போய் ஞாபகமாய்த் தித்திப்பும் காரமுமாய்த் தின்பண்டங்கள் வாங்கிக் கொண்டேன். மாதக் கடைசி. பர்ஸில் கனமில்லை. இருந்தாலும் நெஞ்சு கொள்ளாமல் ஆசை இருந்ததே, குழந்தையின் முகத்தில் சிரிப்பைக் காண! பணம் ஒரு பிரமாதமா? நெஞ்சில் கனிவு வேண்டாமா? நானும் என்ன, வடிவேலு மாதிரியா? கல்நெஞ்சமா?

வீட்டு வாசலில் புதுச் சட்டையும் அலங்காரமுமாகக் குழந்தை என்னை எதிர்கொண்டு அழைப்பான் என்று எதிர்பார்த்துக் காலனிக்குள் நுழைந்தவனுக்கு, வீட்டு வாசலில் யாரும் இல்லாதது ஏமாற்றமாகத்தான் இருந்தது. படி ஏறினதும் 'திக்' என்றது. கதவில் பெரிய பூட்டு தொங்கியது. எங்கே போய் விட்டார்கள் அம்மாவும் பிள்ளையுமாக?

"அவுங்க ஆஸ்பத்திரிக்குப் போயிருக்காங்க!" என்றாள் அடுத்த வீட்டு அம்மாள்.

"ஆஸ்பத்திரிக்கா?"

"ஆமா! டாக்டர் சங்கரன் ஆஸ்பத்திரிக்கு. குழந்தை மேலே வேப்பமரத்துக் கிளை ஒடிஞ்சு விழுந்துடுச்சு. விளையாடுற போது. மண்டையிலே அடி!"

உடனே ஆஸ்பத்திரியை நோக்கி ஓடினேன். நர்ஸிங்ஹோம் வாசலுக்குப் போனதும் ஒரு கணம் நின்றேன். கண்ணன் எங்கே? குழந்தை எப்படி இருப்பான்? வேதனை தாங்காமல் இதயம் வெடித்தது. படி ஏறினேன். முன் அறையில் பெஞ்சியின் மேல் உட்கார்ந்திருந்த என் மனைவியிடம், "என்னது, குழந்தைக்கு! எப்படித் திடீரென்று...... எங்கே அடிபட்டது? யாரோடு இங்கே.... எப்போது வந்தாய்?" என்று கேட்டேன்.

அவள் உதட்டில் விரலை வைத்து "இரையக் கூடாது!" என்று ஜாடை காண்பித்தாள். அவள் எழுந்து நடைக்கு வந்தாள்.

"குழந்தை எங்கே?"

"உள்ளே இருக்கிறான். இந்நேரம் தையல் போட்டிருப்பார்கள். டாக்டர் என்னை வெளியே இருக்கச் சொல்லிவிட்டார்."

"பலமான அடியோ?"

"அடிதான். ஆனால் டாக்டர் ஒன்றும் பயமில்லை என்று சொல்லி விட்டார். பத்து பதினைந்து நாட்களில் பையன் முன்போல் ஆகிவிடுவான் என்று தைரியம் சொன்னார்."

"இப்போது...."

"ஆமாம். இப்போது கண்ணனை நம்மோடு அனுப்பிவிடுவார்கள். வருகிற வேளைதான்."

அவள் பேசி முடிக்கவில்லை. ஸ்ட்ரெச்சர் வெளியே வந்தது. கண்ணன் கிழித்துப் போட்ட நாராய்க் கிடந்தான். முகம் வெளுத்திருந்தது. பிறந்த நாளும் அதுவுமாய் இந்தக் கோலமா அவனுக்கு? சிரமப்பட்டுக் கண்ணீரை அடக்கிக் கொண்டேன்.

"தைரியமாய் இருங்க! ஒண்ணுமில்லே! நான் போய் வண்டி கொண்டாறேன்."

வடிவேலுவின் குரல்கேட்டு திமிர்ந்து பார்த்தேன். அவர் என் பதிலுக்காகக் காத்திராமல் வண்டி கொண்டு வரப் படியிறங்கிப் போய்விட்டார்.

என் மனைவியின் முகத்தை வியப்புடன் நோக்கினேன். எனக்கு ஒன்றும் புரியவில்லை.

''ஆமாம்! அவர்தான் குழந்தைக்கு அடிபட்டதும் வண்டியில் போட்டுக் கொண்டு இங்கே அழைத்து வந்தார். எனக்குக்கூடத் தகவலே அவர் கூப்பிட்டதும்தான் தெரியும். நான் சமையல் வேலையாக இருந்தேன். பாவம்! அவர் நனிச்சுப் போயிட்டாரு. குழந்தைக்கு ஒண்ணுமில்லேன்னு சொல்றாங்கிற வரைக்கும் அவர் கால் தரையில் நிக்கலே!''

தனி அறையில் டாக்டர் நீர்த்தொட்டியில் கையைக் கழுவிக் கொண்டிருந்தார். கழுத்தில் ரப்பர்க் குழாய் மாலை. என் அடுத்த கவலை எனக்கு. இதற்குப் பணம் எவ்வளவு ஆகியிருக்கும்? டாக்டர் இப்போது ஏதாவது கேட்பாரோ? முதுகில் கல் வைத்தது போல் கவலையின் கனம் ஏறி நின்றது நெஞ்சில். டாக்டரின் அறைக்குள் காலெடுத்து வைத்தேன். என் பார்வை குழந்தையின் மேல் படிந்தது. நான் யாரென்று டாக்டர் புரிந்து கொண்டு விட்டார்.

பிரேமை. சந்தர்ப்பம் கிடைத்தால், அவர்களுக்கு உதவி செய்வதில் தனி மகிழ்ச்சி.'' இச் செய்தி என்னைத் தூக்கி வாரிப்போட்டது.

''அதுதான் வேடிக்கை! அவ்வளவு பொன்னான மனம் படைத்தவருக்குக் கடவுள் ஒரு குழந்தையைக் கூடக் கொடுக்கவில்லை. யார் கண்டார்கள்? அவருக்கென்று இருந்திருந்தால் பிறர் குழந்தைகளின் மேல் அவருக்கு இத்தனை தூரம் எடுத்து வழங்க அன்பு இருந்திருக்காதென்று அப்படி நேர்ந்து போயிற்றோ?''

டாக்டர் பேச்சின் வேதாந்தம் எனக்கு எடுபடவில்லை; புரியவுமில்லை. ஆனால் ஒன்று மட்டும் புரிந்தது.

வடிவேலுப் பிள்ளையின் கோபக் குரல் வெறும் திரை. அதற்குப் பின்னால் நெகிழ்த் துடிக்கும் நெஞ்சு மறைந்து கொண்டிருந்தது. அதைப் பகட்டால் வெளிக் காட்டிக்கொள்ளும் அவசியம் அவருக்கு இல்லை.

ஆனால் வெளித் தோற்றத்தையே நம்பிக் கொண்டிருக்கும்என்னைப் போன்றவர்களுக்கு? அத் திரைமட்டும்தான் கண்ணில் படுமோ?





''பயப்பட வேண்டாம்! கவலைப்பட ஒன்றுமில்லை. கொஞ்சம் இரத்தச் சேதம் ஏற்பட்டது. அவ்வளவுதான்!''

''ரொம்ப நன்றி, டாக்டர்! தெய்வம் போல் சமயத்தில் காப்பாற்றினீர்கள்!''

''நான் செய்தது என்ன பிரமாதம்? சமயத்தில் அவர் குழந்தையைக் கொண்டு வந்து சேர்த்தாரே? அதைச் சொல்லுங்கள்.''

என்னுள் எதையோ தேடினேன். வடிவேலுப் பிள்ளையின் ஞாபகம்.

''டாக்டர்! பீஸ் எவ்வளவு?''

மனைவியின் கழுத்துச் சங்கிலி நிலவில் மின்னியது.

''வடிவேலு எல்லாவற்றையும் கொடுத்து விட்டார். உங்களிடம் ஒன்றும் சொல்ல வேண்டாமென்று சொன்னார்.''

''என்னது?''

''ஆமாம், அந்த மனிதருக்கு ஏதோ குழந்தைகளென்றால் ஒரு



# சொர்க்கத்தின் நிழல்

ஜெகசிற்பியன்

## அத்தியாயம் பதினேழு

சாலையின் ஓரம் காரை நிறுத்திக் கீழே இறங்கிய தேவகி ஒரு கணம் தயங்கி நின்றாள். 'சே, அது யாராயிருந்தால் நமக்கென்ன?' என்று தனக்குள் அலட்சியமாக முனகிக் கொண்டே சபாமண்டபத்துக்கு விரைந்து போய், முதல் வகுப்பு டிக்கெட் ஒன்றை வாங்கிக்கொண்டு திரும்பி வந்து, காரில் ஏறி அதை விரைவாகச் செலுத்திச் சென்றாள். சற்றே குழம்பியிருந்த அவள் மனம் இப்போது தெளிவடைந்து உற்சாகம் பெற்றது.

சுமார் ஒரு மைல் தூரம் சென்ற பிறகு, அந்தச் சிறிய காரின் 'ஹாரன்' ஒலி மீண்டும் கேட்கவே, 'ரியர்-மிரரில்' தன்னுடைய பார்வையைச் செலுத்தினாள் தேவகி.

அதே கார்தான்! விவேகானந்தனின் தேர்தல் விளம்பரம் தொங்கிய அந்தக் கார்தான் பின்னால் வந்து கொண்டிருந்தது. தேவகியின் மனம் மறுபடியும் குழப்பமடைந்தது. அவள் தன் காரின் வேகத்தை மிகுதிப்படுத்தினாள். சற்றுத் தூரம் சென்றபின், 'பிம்பவாங்கிக் கண்ணாடி'யில் பார்த்த போது, பின்னால் வந்த காரைக் காணோம்! அது வேறு பாதையில் திரும்பி விட்டது போலும்.

நிம்மதியாக மூச்சுவிட்ட தேவகி தன் காரை இப்போது நிதானமாக ஓட்டிச் சென்றாள். 'அந்தக் காரைப் பார்த்து நாம் ஏன் அத்தனை பரபரப்படைந்தோம்?' என்று தன்னைத்தானே கடிந்து கொண்டாள் அவள்.

பரங்கிமலை சமீபித்து விட்டது. அந்த ஊரின் அமைதி செறிந்த அழகிய சூழல் தேவகியின் மனத்தை வெகுவாகக் கவர்ந்தது. மலையடிவாரத்தையொட்டி நூற்போல் செல்லும் ஒரு செம்மண் சாலையில் மிக மெல்லக் காரைச் செலுத்தியவாறு, அந்தப் பசுமையான மலைச் சரிவு வெளியில் தன் பார்வையை ஓட விட்டுக் கொண்டு வந்தாள்.

தெற்கு நோக்கிச் சென்ற சாலை வளைந்து, கிழக்குத் திசையில் திரும்பியது. இன்னும் ஒன்றிரண்டு பர்லாங்குக்குள்ளாக அந்தக் கல்யாண வீடு சமீபித்து விடும்.

சாலையின் திருப்பு முனையில் காரை மெள்ளத் திருப்பிய தேவகி, ஏனோ சட்டென்று 'பிரேக்'கை அழுத்திப் பரபரப்புடன் வெளியே தலையை நீட்டினாள்.

ஆகா, என்ன இனிமையான வேணு கானம்! சாந்தி தேவதையின் கொலுபீடம் போல் சர்வ அமைதியில் ஆழ்ந்திருந்த அந்த மலையடிவாரத்தின் எங்கோ ஒரு திசையிலிருந்து மிக மென்மையாக இழைந்து மிதந்து வருகிறதே, அந்தக் குழலோசை!

காரின் கதவை வேகமாகத் திறந்து கொண்டு கீழே இறங்கிய தேவகி துடிக்கும் நெஞ்சுடன் சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தாள்.

தேவாமிருதமாக எழும் அந்தக் குழலோசை இப்போது தெளிவாகக் கேட்கிறது. ஆனால் அது எங்கிருந்து வருகிறதென்று தெரியவில்லை. தேவகி சந்தேகத்துடன் தன்னையே ஒரு முறை பார்த்துக் கொண்டாள்.

'இது என்ன, உண்மையான குழலோசைதானா? அல்லது என் உள்ளத்தின் மாயக் குரலா?'

சாலையோரம் கொட்டியிருந்த கிரேவல் கற்குவியலின் மேல் ஏறி நின்று, அந்த இன்னொலி வரும் இசையைத் தன் செவிப் புலனால் தேடி, அந்தத் திசையில் கட்புலனை வீசிச் சுழற்றினாள்.

அதோ, அந்த மலையடிவாரத்தின் யானை போல் எழும்பி நிற்கும் ஒரு கற்பாறையின் மீது யாரோ ஒரு வாலிபன் தன்னந் தனியே உட்கார்ந்து குழல்

வாசித்துக் கொண்டிருக்கிறான். யார் அந்த வாலிபன்?

சிந்திக்கும் திறனிழந்து உணர்ச்சிப் பிழம்பான தேவகி, காந்தத்தை நோக்கி உருளும் நாணயத்தைப் போல், மென் காற்றில் மேலாடை பறந்து பின்னால் குடையாக விரிய விரைந்து ஓடினாள்.

அவளது அனுமானம் தவறில்லை. அந்தப் பாறையின் மேல் மோகன சுந்தரம்தான் அமர்ந்து தன்னை மறந்த நிலையில் குழல் வாசித்துக் கொண்டிருந்தான். அவனுடைய கச்சேரிக்காக அங்கே, அந்தச் சபாமண்டபத்தில் ஆயிரக்கணக்கான மக்கள் கூடிக் கிடக்கிறார்கள் என்ற பிரக்ஞையின்றி அவன் இங்கே வந்து இந்த மலைப் பிரதேசத்தைத் தன் வேணுகான மழையால் குளிர்வித்துக் கொண்டிருந்தான்.

தேவகியின் காரைப் பின்தொடர்ந்து மறைந்த அந்தச் சிறிய கார், அதோ தொலைதூரத்தில் வருவது தெரிகிறதே?

**ப**ஞ்சபூதங்களாலான இந்த மனித உடல் இருக்கிறதே, இது ஓர் அழகிய புல்லாங்குழலைப் போன்றது. வேய்ங்குழலில் வெறும் காற்றை ஊதினால் மட்டும் எந்தவித கானமும் பிறந்து விடாது; அடுப்பிலுள்ள நெருப்பைக் கனிய வைக்க வேண்டுமானால் அது உதவலாம். அப்படியின்றி, அதில் ஊதும் காற்றை அளவோடு அடைத்தும் விடுத்தும் வாசித்தால் உயரிய கானம் பிறக்கும். இதுபோலவே, உயிர் உலவும் வெறுங்குழலாய் உருவாகி அஞ்ஞான இருள் புழுதியோடு ஜனிக்கும் இந்த மனித உடல், பஞ்சேந்திரியங்களின் துணை கொண்டு ஆசை எனும் காற்றை ஊதி, பாபக் கனல் துண்டங்களைப் பற்ற வைத்து, அந்தப் பெருங் கோரத் தீயிலே விழுந்து பொசுங்கிப் புகைந்தும் போகலாம்; அல்லது நீதி, நேர்மை ஒழுக்கம், சத்தியம், தர்மம் என்னும் ஐந்து விரல்களைக் கொண்டு, ஐம்பொறிகளாகிய துளைகளை அளவறிந்து அடைத்தும் விடுத்தும் உளர்ந்து, பக்தி எனும் காற்றை ஊதி, ஞானம் எனும் பேரின்ப கானத்தையும் உதயமாக்கலாம். இந்த உண்மையை உணர்த்தத்தானோ என்னவோ, எத்தனையோ அற்புத இசைக் கருவிகள் இருந்தும் அவற்றையெல்லாம் ஒதுக்கித் தள்ளி ஓர் எளிய சாமான்ய மூங்கில்துணுக்காலான புல்லாங்குழலை விரும்பித் தேர்ந்தெடுத்தான் போலும் நீலவண்ணக் கண்ணன் அசைவுக்கு ஆயிரம் பொருள் அமைக்கும் மாமாய வித்தகன் அல்லவா அவன்?

அன்று மதுராபுரியின் மலையடிவாரத்திலே நின்று கோகுலக்கண்ணன் ஊதிய குழலோசையைக் கேட்டு ஆவினங்களெல்லாம் அவனை நோக்கி ஓடினவாம். அப்படித்தான் இன்று இதோ, மோகன சுந்தரத்தின் அந்த மதுரக் குழலோசையைக் கேட்டு மயங்கிய தேவகியும் தன் பூப்பஞ்சுப் பாதங்கள் சிவக்க ஓடி, அவன் அமர்ந்திருந்த பாறையின் எதிரில் போய் நின்றாள். அவள் வந்ததைக் கவனிக்கும் நிலையில் அப்போது மோகனசுந்தரம் இல்லை. ஆபேரி ராகத்தில் இறுதி வர்ணனையிலே தன்னை மறந்து லயித்துக் கிடந்தான் அவன்.

உள்ளமும் உடலும் புல்லரிக்க ஒரு கணம் தயங்கி நின்ற தேவகி அழகிய ஹம்சம் போல் அசைந்து நசிந்து சென்று அந்தப் பாறையின் மீது மெல்லச் சாய்ந்து, உயரே அமர்ந்திருந்த மோகன சுந்தரத்தைக் கண்ணிமைக்காமல் பார்த்தாள். பசுந் தண்டில் பூத்த பதும மலர், நீர்மட்டத்திலிருந்து நிமிர்ந்து காலைக் கதிரவனை நோக்கித் திரும்பி நிற்பது போல் இருந்தது இந்தக் காட்சி.

அமுத கானமாகப் பொழிந்து கொண்டிருந்த குழல் வாசிப்பிலே ஒரு மின்னல் கருள். திடுக்கிட்டுத் திரும்பிய மோகன



சுந்தரம் அந்தச் செங்குத்தான பாறை மீதிருந்து கீழே சரிந்து குதித்துப் பரபரப்புடன் தன் கண்களை மலர்த்தினான். ஆனால் தேவகி இன்னமும் அண்ணாந்த நிலையிலேயே நின்று அந்தப் பாறையின் உச்சியைப் பார்த்துக்கொண்டிருந்தாள். மோகன் தன் அருகில் வந்து நிற்பதை அவள் உணர்ந்ததாகத் தெரியவில்லை.

"தேவகி!" என்று மெல்லிய குரலில் அழைத்துக் கொண்டே அவள் அருகில் நெருங்கிய மோகனசுந்தரம் வியப்புடன் அவள் முகத்தை உற்று நோக்கி, "நீ எப்படி இங்கே வந்தாய், தேவகி?" என்று வினவினான்.



பூங்கொடி நெளிவதைப் போல் நெளிந்து திரும்பிய தேவகி அவனைப் பட்டும் படாததுமாகப் பார்த்துப் புன்முறுவல் பூத்தாள். அவளுடைய கண்களில் ஏதோ ஒரு கனவுக் கிறக்கம் திரை விரித்திருப்பது போல் தோன்றியது. பவள உதடுகள் நெளிந்தன. தன் இடக்கை விரல்களால் ஒற்றைச் செவியை இதமாகப் பொத்தி, வலப் பக்க இடையை வளைத்து நொடித்துத் திரும்பியவள், வெள்ளாட்டுக் குட்டிபோல் ஒரு துள்ளுத் துள்ளிச் சிறு பாறையொன்றின் மேல் ஏறி நின்று கலீரெனச் சிரித்தாள்.

திகைத்து நின்ற மோகனசுந்தரம் கண்ணிமைகளைப் படபடவெனத் தட்டி அவளை ஏறிட்டு நோக்கினான். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை.

முதுகிலிருந்து முன்னால் சரிந்து நெளிந்த பின்னலை வளைத்து எடுத்துச் சுழற்றியவாறு பூஞ்சிரிப்புடன் கழுத்தைச் சாய்த்து அவனைப் பார்த்துக் கொண்டிருந்த தேவகி மீண்டும் மற்றொரு பாறைக்குத் தாவிக் குதித்துத் திரும்பிக் கலகலவென நகைத்தாள்.

மோகனசுந்தரம் திக்கித் திணறினான். "தேவகி...!" எனக் குழறி அழைத்துக் கொண்டே இரண்டு அடி முன்னால் ஏறி நின்றான்.

மலைச்சரிவின் அடிவாரத்தை நோக்கி நின்றிருந்த தேவகி மெல்லத் திரும்பி மேலே அண்ணாந்து பார்த்தாள். பச்சைப் பசுமை போர்த்த அந்த மலையின் சிகரப் பரப்பில் வெண் முகில்கள் தாழத் தவழ்ந்து நகர்ந்து கொண்டிருந்தன. அதற்கப்பால் அடிவானத்தில் சரிந்து கொண்டிருந்த மாலைச் சூரியனின் பொற் கதிரிழைகள் வான்முகட்டில் ஒரு மாபெரும் தங்கக் கம்பளத்தை நெய்து

கொண்டிருந்தன. அந்த எழிலார்ந்த காட்சியைப் பார்த்தவாறு குண்டுக் கல்லின் மேலிருந்து கீழே இறங்கிய தேவகி ஒரு கொடி வழியைப் பற்றி மலையின் மேல்நோக்கி அழகாக அசைந்து அசைந்து ஏறலானாள்.

ஆழ்ந்த அமைதி பூத்துக் கிடந்த அந்த மலைச்சாரலின் எங்கோ ஒரு மூலையி லிருந்து ஏதோ ஓர் இனிய மென்னோசை உயிர்த்துத் தண்ணெனத் தவழும் தென்றலில் இணைந்து எதிரொலிப்பது கேட்டது.

உணர்ச்சி வயப்பட்ட மோகனசுந்தரம் சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தான். அது பாட்டுமல்ல; பேச்சுமல்ல-இரண் டும் கலந்த ஏதோ ஒரு மந்திரநாதமாக அது ஒலித்தது. மலையின்மேல் பாதிப் படி வரை சென்றுவிட்ட தேவகியைப் பின்தொடர்ந்து ஓடினான் மோகன்.

தேவகியின் வீணைக்குரலை அந்த மலைப் பிராந்தியம் எதிரொலித்தது :

"வண்ண முகிலையள்ளிக்
கொண்டையிட்டு
வாடிச் சிவந்த கதிர்ச்சூரியனைக்
கிள்ளி மலரெனவே சூடி ;
செக்கர் செந்தூரமண்
மேனியிலே
ஒக்கப் பசுந்தழைத்
துகில் புனைந்து
கச்சைக்கு மாற்றாய்க்
கல் லாரம்பூண்டு
இச்சைக் கனவுகள்
இளங் காற்றாய் நெளிந்தலைய—
முதுபெருங் காலப்
பெருவெளி நோக்கி
மோனத் தவமியற்றும் - மலை
ஞானப் பெண்ணே !..."

மானெனத் துள்ளித் துள்ளி மலையேறி ஓடிக் கொண்டிருந்த தேவகி தன் மந்திர நாதப் பேச்சை நிறுத்திவிட்டு மெள்ளப் பின்னால் திரும்பிப் பார்த்தாள்.

உற்சாக அலை புரள ஓடிவந்த மோகன சுந்தரம் வலக்காலை ஒரு கல்லின்மேல் தூக்கி வைத்து நின்றவாறு அவள் முகத்தை உற்றுப் பார்த்தான். இள நகை முகத்தில் மலர அவளையே பார்த் துக் கொண்டிருந்தவன் ஏதோ ஒரு போதைக் கிறக்கமுற்றவன் போல் தன்னையறியாமலே தன் கையிலிருந்த புல் லாங்குழலை உதடுகளில் பொருத்தினான்.

மறுகணம், அங்கே ஓர் அதிசயம் நிகழ்ந்தது.

ஆம்; சற்றுமுன் தேவகியின் வாயி லிருந்து உதிர்ந்த அந்த மந்திரநாதச் சொற்களை அப்படியே தன் புல்லாங் குழலில் வாரிக் கொட்டி, அவை ஒவ் வொன்றின் பொருளுக்கும் உரிய இசை வடிவம் தந்து ஓர் அற்புத எழிலிசைக் கோலம் போடத் தொடங்கினான்.

ஆகா, வண்ணமுகிற் கொண்டையிலே செம்மலர்ப் பரிதியைச் செருகிக் கொண்டு பச்சைப் பசிய மேனியுடன் இதோ விண்ணுக்கும் மண்ணுக்குமாய் ஓங்கி ஒசிந்து மோனத் தவமியற்றி நிற்கிறாள் அந்த ஞானமா மலைப்பெண்! ...எங்ஙனம்? ... எவ்வாறு? — இசைவடி வாய்! வேய்ங்குழல் நாதமாய்!... இதோ !...அதோ!...

மங்கல வர்ண மலர் சொரிந்திருக்கும் ஆவாரஞ் செடியொன்றைப் பற்றிய வாறு ஆனந்தப் பரவச நிலையில் நின்று கொண்டிருந்த தேவகி, முத்துப் பல் தெரியக் கலீர் கலீரெனச் சிரித்தாள். சிரித்துக் கொண்டே பூங்கொடிபோல் வளைந்து நெளிந்து மேலேறி ஓடினாள். மோகனும் அவளைப் பின்தொடர்ந்து தாவித் தாவி ஓடினான்.

தேவகியின் மந்திர வசன தொனியை மீண்டும் அந்த மலை எதிரொலித்தது :

"மோனத் தவம் செய்யும்
ஞானப் பெண்ணே—உனது
முந்தித் தவழும்
பச்சைக் கனவுகளும்—இன்று
கண்ணுக்குக் கண்ணாய்ப்
பலித்ததுவே, அதோ
கண்ணன் குழலெடுத்து
ஊதுகின்றான்! அந்தக்
கண்ணன் குழல் கீதம்
கேட்கத்தானே, நீ
கல்ப கல்பாந்தம்
இந்நோன்பு நோற்றாய் ?
அதோ கேளாய், மாயவன்
ஊதுகின்றான் ! ஊதி
உந்தன் உளம் தொடத்
தாவுகின்றான் ! உயிர்
ஊட்டுகின்றான் ! கரம்
நீட்டுகின்றான் ! அவன்
பண்ணுண்டு கரக்கின்ற
பாற் பசுக்கள், அதோ
பங்கு கேட்டு
மந்தை கூடுதுவே !...
என்னரிய இனிதான நல்
எண்ணங்கள் இத்தனை
நாளாய் உன் நெஞ்சினிலே
மண்ணாய் கல்லாய்
மாபெரும் பாறையாய்
மண்டிக் கிடந்தாலும்
ஓர் நொடியில், அந்தக்
கண்ணன் கரம்பட்டால்
கரைந்து விடும்
பஞ்சாய்ப் பறந்துவிடும்! —எனவே,
ஓடிவா, ஓடிவா ஞானப் பெண்ணே, அந்த
ஒண்ணொளி கானம் ஒடுங்குமுன்னே!

ஏனடி இன்றும் நீ
நாணுகின்றாய்? அவன்
ஏங்குகின்றான்; நீயோ தூங்குகின்றாய்!
தூக்கம் கலைந்து
தூய நேரமே! அந்தத்
தூயவன் மேனியைத்
தொட்டு விட்டால், உன்
வாழ்வெல்லாம் வண்ணம்
மலருமடீ, அடி
வானத்திலே சொர்க்கம் தோணுமடீ!-..''

மலையின் உச்சிப் பரப்புவரையில் ஓடிய தேவகி சட்டென்று நின்று பின்னால் திரும்பிப் பார்த்தாள். மோகனசுந்தரம் எங்கே? அதோ, ஒரு சரிந்த பாறையின் மீது சாய்ந்து நின்ற வண்ணம் குழல் வாசித்துக் கொண்டிருக்கிறான்.

பையப் பைய அவனருகில் சென்ற தேவகி, உணர்ச்சி விம்மவிடும் தன் நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டு அவன் முகத்தையே உற்று நோக்கியவாறு ஒரு சிறிய பாறையின்மேல் ஒடிந்து அமர்ந்தாள். இனம்புரியாத ஏதோ ஒரு மயக்கிலே, அவ்விரண்டு பேரும் இன்னமும் வசப்பட்டே கிடந்தனர். இவ்வளவு நேரம் அந்த மலைப் பிராந்தியமெங்கும் பச்சைப் பசுந் தேறலாய் பிரவகித்து ரீங்காரமிட்டுக் கொண்டிருந்த வேணு கானம் கொஞ்சங் கொஞ்சமாகத் தேய்ந்து கரையத் தொடங்கியது.

கணகணவென்ற ஒலியுடன் பாறை மேலிருந்து உருண்டு வந்த புல்லாங்குழல் தேவகியின் மடியில் விழவே உறக்கத்திலிருந்து விழித்தவள்போல் சட்டென்று நிமிர்ந்து சுற்றுமுற்றும் பார்த்தாள். அதே சமயம், மோகனசுந்தரமும் தலை நிமிர்ந்து அங்குமிங்குமாகத் தன் பார்வையைச் செலுத்தினான். அவர்கள் இரண்டு பேருக்குமே இப்போதுதான் தம்மைப் பற்றியும், தாம் இருக்கும் இடத்தைப் பற்றியுமான உணர்வு வந்தாற்போல் தோன்றியது. பரபரப்புடன் ஒருவரையொருவர் விழித்துப் பார்த்துக் கொண்டனர். தேவகியின் முகம் நாணத்தால் குப்பென்று சிவந்தது. மோகனசுந்தரமும் ஒருவித நாணத்துடன் தலை தாழ்த்திப் புன்முறுவல் பூத்தான்.

மிகத் தொலை தூரத்தில், மலையடிவாரத்தின் சாலையோரம் தேவகியின் கார் நிற்பது தெரிந்தது. அந்தக் காரைப் பார்த்த பிறகுதான், அவளுக்குத் தான் வந்த காரியம் நினைவுக்கு வந்தது. கல்யாண வீட்டில் தன்னை எதிர்பார்த்துத் தன் தந்தையும் மற்றவர்களும் காத்திருப்பார்களே என்ற எண்ணத்துடன் அவசரமாக எழுந்தாள். உடனே, மோகனசுந்தரத்தின் கச்சேரிக்காக மக்கள் அந்தச் சாலையில் காத்துக் கொண்டிருக்கும் விஷயமும் அவள் நினைவுக்கு வந்தது. மெல்லத் தலை நிமிர்ந்து, "நீங்கள்... நீங்கள்..." என்று தயங்கி இழுத்தாள்.

மோகனசுந்தரம் அவளைக் குறும்பாகப் பார்த்துச் சிரித்தான். சிரித்துக் கொண்டே, "நான் ஏன் இங்கு வந்தேன் என்று கேட்கிறாயா, தேவகி? அடிக்கடி நான் இங்கு வருவது வழக்கம்தான். ஆனால், நீ எப்படி இங்கு வந்தாய் என்பதுதான் எனக்குப் புரியவில்லை. என் வீட்டுக்குப் போய் அம்மாவிடம் கேட்டுத் தெரிந்து கொண்டு வந்தாயா? அவளிடம் நான் இங்கு வருவதாகச் சொல்லி விட்டு வரவில்லையே?" என்று பெரிதாக யோசனை செய்வது போல் நெற்றியை வருடியவாறு கேட்டான்.

"அதெல்லாம் இல்லை. நான் இங்கே ஒரு கல்யாண விருந்துக்காக வந்தேன். வரும் வழியில் உங்களை எதிர்பாராமல் காண நேர்ந்தது. அது என் அதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும்!" என்றாள் தேவகி.

"உன் அதிர்ஷ்டம் மட்டுமல்ல தேவகி, அது என் அதிர்ஷ்டமும் கூடத் தான்!" என்று கூறிக் குழந்தைபோல் சிரித்தான் மோகனசுந்தரம்.

தேவகியின் உள்ளம் ஏதோ ஓர் இனம் புரியாத இன்பக் குறுகுறுப்பில் சிலிர்த்தது. அவள் சட்டென்று தன் கைக் கடிகாரத்தில் மணியைப் பார்த்துவிட்டு நிமிர்ந்து, "ஆமாம்; நீங்கள் என்ன, இன்னமும் இங்கே உட்கார்ந்திருக்கிறீர்கள்? உங்களுக்கு நேரமாகவில்லையா?" என்று கேட்டாள்.

"என்ன அவசரம் தேவகி? மெள்ளப் போனால் போகிறது!" என்று சிரித்துக் கொண்டே சொன்ன மோகனசுந்தரம் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு, "ம்... வீட்டுக்குப் போய் என்ன செய்வதாம்? அங்கு போவதை விட, இரவெல்லாம் இங்கேயே இருந்து விடலாமா என்றும் தோன்றுகிறது!" என்றான் கவலை தோய்ந்த குரலில். அவன் முகம் இந்த ஒரே விநாடியில் வெளுத்துச் சிறுத்தது.

அதைக் கேட்ட தேவகிக்கு ஒன்றும் புரியவில்லை. அவனை வியப்புடன் ஏறிட்டுப் பார்த்தாள்.

"தேவகி! நிஜமாகத்தான் சொல்கிறேன். எனக்கு இந்த நகரங்களைக் கண்டாலே பிடிக்கவில்லை. அமைதியோடு ஒருவனாக இருந்து வசிக்கவும் பிரியமில்லை. இயற்கை மிகுந்த தனிமையான இடங்களிலும் உயரமான மலைகளிலுமே

எப்போதும் சுற்றித் திரிந்து கொண்டிருக்க வேண்டும் போல் ஆசையாக இருக்கிறது. அதனால்தான் இப்போதெல்லாம் இந்தப் பரங்கிமலை அடிவாரத்துக்கு அடிக்கடி வந்து விடுகிறேன்." எங்கோ பார்த்தவாறு நெடுமூச்செறிந்தான் மோகனசுந்தரம்.

தேவகி தன்னைத்தானே ஒரு முறை ஏற இறங்கப் பார்த்துக் கொண்டாள். ஏனென்றால், மோகனசுந்தரம் சொன்ன ஒவ்வொரு சொல்லும் அவள் நெஞ்சிலிருந்து புறப்பட்டது போலவே தோன்றியது. அவனை ஆசையோடு பார்த்துச் சிரித்தாள் அவள்.

"ஏன் சிரிக்கிறாய் தேவகி? நான் சொல்வது உனக்குச் சிரிப்பாக இருக்கிறதா? ம்...என்னுடைய மன நிலையில் நீ இருந்தால்தான் நான் சொல்வது உனக்குப் புரியும்!...எவ்வளவு பெரிய ஏமாற்றம்!...என்றால் அந்த ஏமாற்றத்தைத் தாளவே முடியவில்லை!...வீட்டுக்குப் போனால் ஒரே வேதனை! ... இந்தப் புல்லாங்குழல் மட்டும் இல்லையானால் இந்நேரம் நான்..." என்று பேச்சை முடிக்காமல் குரல் கம்மப் பெருமூச்சு விட்டான் மோகனசுந்தரம்.



அவன் எதற்காக இப்படிச் சஞ்சலப்பட்டுப் பேசுகிறான் என்பதைப் புரிந்து கொள்ள முடியாமல் நின்றாள் தேவகி. ஒருகால் அந்த வக்கீல் நோட்டீஸ் விஷயமாக எண்ணி வருத்தப்படுகிறானோ என்று அவளுக்குப் பட்டது. அவள் மெள்ளச் சிரித்து, "என்ன, நான் ஒன்று கேட்டால் நீங்கள் வேறு ஏதேதோ சொல்கிறீர்கள்?" என்றாள் இதமான தொனியில்.

மெள்ளத் திரும்பிய மோகன் அவளைப் பரிதாபமாகப் பார்த்துத் தலை குனிந்தான். அவளிடம் ஏதோ சொல்ல அவன் உதடுகள் துடித்தன.

"நான் சொல்ல வந்தது என்னவென்றால், இன்றைக்கு உங்கள் கச்சேரி ஒன்று நடக்கவிருக்கிறது அல்லவா? இப்போதே மணி ஆறாகி விட்டது. இதற்கு மேல் எப்போது போய்ச் சேரப் போகிறீர்கள்?" என்று புன்முறுவலுடன் கேட்டாள் தேவகி.

திடுக்கிட்டவன் போல் திமிர்ந்த மோகனசுந்தரம் பரபரப்புடன் அவளைப் பார்த்து, "அடடே! நான் அதைச் சுத்தமாக மறந்து விட்டேனே!" என்றான். உடனே அவன் முகத்தைச் சுளித்து அலட்சியமாக நாவைச் சப்புக் கொட்டி, "சரிதான்!...என்ன அவசரம்? மெள்ளப் போய்க் கொண்டால் போகிறது! அல்லது இன்றொரு நாளைக்கு அந்தக் கச்சேரியை வைத்துக் கொண்டால் என்ன, குடியா முழுகிப் போய் விடும்!" என்றான்.

இந்தப் பதில்தான் அவனிடமிருந்து வருமென்று தேவகி எதிர்பார்த்தாள். எனவே, அவள் வியப்பேதும் அடையவில்லை. அவனைப் பார்த்து அழகாகச் சிரித்தவாறு, "நீங்கள் இப்படியெல்லாம் செய்வதால்தான் உங்களுக்கு வீணான தொல்லைகள் வந்து சேருகின்றன" என்றாள் குறும்புக் குரலில்.

"சரிதான்! எல்லாப் பெண்களுமே ஒரே மாதிரிதான் பேசுவார்கள் போலிருக்கும். அன்றைக்குக் கோமதி கூட இப்படித்தான் எனக்குப் புத்தி மதி சொன்னாள்!" என்றான் மோகன்.

மீண்டும் அவன் தொடர்ந்து, "தேவகி உன்னிடம் ஒரு விஷயத்தைச் சொல்ல மறந்துவிட்டேனே! அந்த விவேகானந்தன் என்னிடம் பத்தாயிரம் ரூபாய் நஷ்ட ஈடு கோரி வக்கீல் நோட்டீஸ் விட்டான் அல்லவா? அதை அவன் மறுநாளே வாபஸ் வாங்கிக் கொண்டதாக எனக்குக் கடிதம் எழுதியிருந்தான். ஒருகால் நீதான் அவனிடம் சொல்லி அப்படிச் செய்ய வைத்தாயோ என்றும் எண்ணினேன். அவ்வாறானால் உனக்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன். ஆனாலும், விவேகானந்தன் நல்லவன். அவன் மீது எப்போதுமே ஒரு தனி மதிப்பு. நிறையப் படித்தவன். பெரிய அறிவாளி. இப்போது அவன் தேர்தலில் நின்றிருக்கிறானாம். எனக்கென்ன தெரியும்? அம்மாதான் இதைச் சொன்னாள். நான் ஒரு பெரிய கலைஞன் அல்லவா? எல்லாருக்கும் போல் எனக்கும் ஒரே ஒரு வோட்டுரிமைதானா கொடுப்பது? எனக்கெல்லாம் நூறு வோட்டுகள் கொடுக்க வேண்டும். அப்படிக் கொடுத்தால் அந்த நூறு வோட்டுகளையும் விவேகானந்தனுக்குத்தான் போடுவேன். ஏனென்றால், அவன் நல்லவன்! மிகமிக நல்லவன்!" என்று ஒருவிதமான படபடப்புடன் சொல்லி நிறுத்தினான்.

சற்று முன் ஒரு மாபெரும் கலைஞனாகக் காட்சியளித்த மோகனசுந்தரம் இப்போது ஓர் எளிய பாமரனாகத் தேவகியின் கண்ணுக்குத் தோன்றினான். அவளை அநுதாபத்தோடு பார்த்து முறுவலித்தபடியே, "சரி; புறப்படுங்கள். அங்கே அந்தச் சபாவில் உங்கள் கச்சேரிக்காக ஏராளமான ஜனங்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள்!" என்றாள் மென்மையான கண்டிப்புக் குரலில்.

"இல்லை, தேவகி! இப்போதெல்லாம் ஜனங்களின் எதிரில் உட்கார்ந்து புல்லாங்குழல் வாசிப்பதென்றால் வேம்பாகக் கசக்கிறது. எனக்கு அது கொஞ்சமும் பிடிக்கவில்லை" என்றான் மோகன் முகத்தைச் சுளித்துக் கொண்டு.

"நீங்கள் சொல்வது முற்றிலும் சரியே! ஆனால், இன்று அந்தக் கச்சேரி செய்ய ஒப்புக் கொண்டிருக்கிறீர்களே?"

"ஹும்! நானா ஒப்புக் கொண்டேன்? அந்தச் சபாக்காரர்கள் பணத்தைக் கொண்டு வந்து நீட்டிக் கேட்டார்கள். 'சரியென்று சொல்லடா' என்றாள் அம்மா. சரி என்றேன். இவ்வளவுதானே?"

அவனுடைய இந்தக் குழந்தைத்தனமான பேச்சு தேவகிக்கு ரொம்பவும் பிடித்தது. இதையே விவேகானந்தன் சொல்வதானால் எத்தனை விஸ்தாரமாகப் பேசுவான் என்று எண்ணியபோது, அவள் மனம் மோகனுக்காக வருந்தியது. "பரவாயில்லை. இன்றைக்கு ஒரு நாள் மட்டும் அந்தக் கச்சேரியை நடத்திக் கொடுத்து விடுங்கள். இல்லையானால், ஒப்புக்கொண்டு வராமற் போனதற்காக அந்தச் சபாக்காரர்கள் உங்கள் மீது நஷ்டஈடு வழக்குத் தொடுத்து விடப் போகிறார்கள்! ஏற்கெனவே இம்மாதிரி அநுபவம் ஒன்று உங்களுக்கு உண்டல்லவா?" என்றாள் குறும்புச் சிரிப்புடன்.

"என்ன, தேவகி! நஷ்டஈடு கேட்பார்களா? கேட்கட்டுமே! இப்போது என்னிடம் நிறையப் பணம் இருக்கிறது. அவர்கள் கேட்கும் தொகையை முகத்தில் விட்டெறிந்து விரட்டியடிக்க என்னால் முடியும்!" என்று முரட்டுத்தனமாகக் கடுகடுத்த மோகன், சட்டென்று உரக்கச் சிரித்து, "ஆமாம், தேவகி! உனக்கு விஷயம் தெரியாதா? அந்தச் சினிமாப் படத்துக்கு வேறு மியூஸிக் டைரக்டரை ஏற்பாடு செய்ததால், நான் எல்லாப் பாட்டுக்களையும் வாசித்துக் கொடுத்து விட்டேன். அதில் எனக்குச் சேர வேண்டிய எல்லாப் பணமும் வந்து விட்டது. இந்த நல்ல யோசனையைச் சொன்னது யார் தெரியுமா? என்...அ...வந்து..கோமதிதான்!" என்றான். உடனே அவன் சிரிப்பதை நிறுத்தி முகத்தை 'உம்'மென்று வைத்துக் கொண்டு, "ஆமாம், அவள்தான்! அவள் பெயரைச் சொல்லக்கூட எனக்குப் பிடிக்கவில்லை!" என்று கவலை தோய்ந்த குரலில் குமுறினான்.

தேவகிக்கு அவனுடைய இந்தப் பேச்சும் முக பாவனைகளும் வேடிக்கையாயிருந்தன. சிரிப்பும் வந்தது. "அப்படியானால் இன்று எனக்குப் பத்து ரூபாய் நஷ்டம்!" என்றாள் கேலியாக.

"நஷ்டமா? எதற்குப் பத்து ரூபாய் நஷ்டப்பட்டாய் தேவகி?" என்று அக்கறையாகக் கேட்டான் மோகன்.

"இதோ, பாருங்கள்! உங்கள் கச்சேரிக்காக நான் வாங்கிய பத்து ரூபாய் டிக்கட். இது இப்போது நஷ்டம்தானே?" என்று குறும்புடன் தன் கைப் பையில் வைத்திருந்த டிக்கட்டை எடுத்துக் காட்டினாள் தேவகி.

"அச்சச்சோ! அப்படியானால் வா, தேவகி! புறப்படுவோம். பாவம், என்னால் உனக்கு ஏன் பத்து ரூபாய் நஷ்டம் ஏற்பட வேண்டும்? சில நாட்களில் பத்துப் பைசா கூட இல்லாமல் நான் ரொம்பவும் கஷ்டப்பட்டிருக்கிறேன்" என்று நிஜமாகவே அநுதாபப்பட்டுச் சொல்லிக்கொண்டே மலை உச்சியிலிருந்து இறங்க ஆரம்பித்தான் மோகனசுந்தரம்.

அவனுடைய இந்த விசித்திரப் போக்கை எண்ணி எண்ணி வியந்தவாறு அவனுடன் வானகத்துப் பதுமை போல் இறங்கி வந்த தேவகி, தொலைவில் மலையடிவாரத்துச் சாலையோரம், அவளைப் பின்தொடர்ந்து வந்த அந்தச் சிறிய கார் நின்று கொண்டிருப்பதைக் கண்டு உள்ளூறத் திகிலடைந்தாள்.

## அத்தியாயம் பதினெட்டு

"என்னங்க தம்பி, சௌக்கியமா?"

ஆழ்ந்த சிந்தனையில் முகம் வெளிறிப் போய், காரின் பின்னாலுள்ள 'பம்பரி'ன் மீது தன்னை மறந்து உட்கார்ந்திருந்த விவேகானந்தன் திடுக்கிட்டவனாய் எழுந்து நின்றான். அவன் எதிரே புன்முறுவலுடன் வந்து கொண்டிருந்தார் சிவப்பிரகாசம்.

இந்த இடத்தில், இந்தச் சமயத்தில், அவரைச் சற்றும் எதிர்பாராத விவேகானந்தன் சிறிது நேரத் திகைப்புக்குப் பின் ஒருவாறு தன்னைச் சமாளித்துக்

கொண்டு, "வணக்கம் ஐயா! வாருங்கள்" என்று அன்புடன் கூறிப் புன்னகை புரிய முயன்றான். அது அசட்டுச் சிரிப்பாக இருந்தது.

சிவப்பிரகாசமும் அவனைப் போலவே தர்மசங்கடமான நிலையில் சிக்கிக் கொண்டு அசட்டுச் சிரிப்புச் சிரித்தார். அவரும் அவனை இந்த இடத்தில் இந்த நேரத்தில் சந்திப்போம் என்று எதிர்பார்க்கவே இல்லை. ஏதோ யோசனையில் வந்த அவர் விவேகானந்தன் அருகில் நெருங்கியதும்தான் அவனை இன்னாரென்று தெரிந்து கொண்டார். தெரிந்த பின் கடந்து செல்ல மனம் இடம் தரவில்லை. 'பார்த்தும் பாராத மாதிரி போகிறார்' என்று அவன் எண்ணி விடுவான் அல்லவா? ஆனால் விவேகானந்தனே அவர் வந்ததைக் கவனிக்கவில்லை. எனவே 'தன்னைப் பார்த்தும் பாராத மாதிரி இருந்து விட்டான்' என்று அவர் எண்ணிக் கொண்டிருப்பாரோ என்று உள்ளூறச் சங்கடப்பட்டான் அவன்.

'அக்கா, அத்தான் எல்லாரும் சௌக்கியமா?' என்று கேட்க வாயெடுத்தார் அவர். ஆனால் அவன் இப்போது அவர்களுடைய வீட்டில் இல்லை என்ற விஷயம் நினைவுக்கு வரவே திறந்த வாயை மூடிக்கொண்டார்.

உண்மையிலேயே விவேகானந்தன் இப்போது மிகவும் இளைத்துக் காணப்பட்டான். முன்னிருந்த அந்த வாளிப்பான கம்பீரத் தோற்றத்தில் இப்போது பாதிகூட அவனிடம் தென்படவில்லை. தாடையெலும்புகூட இலேசாகத் தட்டுப்பட்டது. இதையெல்லாம் பார்த்த சிவப்பிரகாசத்தின் மனம் வெகுவாக வருந்தியது. 'என்ன தம்பி, இளைச்சுப் பூட்டீங்க?' என்று கேட்க அவருடைய வாய் துடித்தது. ஆனால் அதற்கு அவன் ஏதாவது இடக்காகப் பதில் சொல்லிவிட்டால் என்ன செய்வது? அந்த வாலிபனின் வாழ்க்கையைத் தானும் தன் மகளும் சேர்ந்து அலைக்கழித்து விட்டோம் என்ற குற்ற உணர்ச்சி அவர் மனத்தை முள்ளெனக் குத்த அங்கு அவன் எதிரில் நிற்கவோ, அவன் முகத்தைப் பார்க்கவோ முடியாமல் தத்தளித்தார். அந்தத் தத்தளிப்பை எப்படியோ சமாளித்துக் கொண்டு, "என்னங்க, தம்பி! இங்கே யாரைப் பார்க்க வந்தீங்க?" என்று ஏதோ வாயில் வந்ததைக் கேட்டு வைத்தார்.

இப்படி ஒரு கேள்வியை அவர் கேட்டால் அதற்கு என்ன பதில் சொல்லுவது என்று ஏற்கெனவே அல்லாடிக் கொண்டிருந்தான் விவேகானந்தன். ஏனென்றால் அவன் இங்கு வந்த உண்மைக் காரணத்தை அவரிடம் சொல்ல முடியாது. அதாவது அந்தச் சங்கீத சபாவின் அருகில் தேவகியின் காரைப் பார்த்து அவளைப் பின்தொடர்ந்து வந்த விஷயத்தை வெளியே சொல்ல முடியுமா? தன்னுடன் வந்த சாரங்கனை அவனுடைய காரியாலயத்தில் இறக்கிவிட்டு அவனிடம் வேறு ஏதோ சாக்குச் சொல்லித் தப்பித்துக் கொண்டு தேவகியின் காரைத் துரத்திப் பிடிப்பதுபோல் இங்கு வந்து சேர்ந்திருக்கிறான். மோகனசுந்தரத்தின் புல்லாங்குழல் கச்சேரிக்கு டிக்கெட் வாங்கிய தேவகி உள்ளே செல்லாமல் மீண்டும் புறப்பட்டு விட்டதை அறிந்த அவன், அவளைப் பின்தொடர்ந்து வந்ததற்குக் காரணம், இன்று எப்படியாவது சந்தித்து அவளுடைய மனத்தின் சந்தேகங்களைப் போக்க முயல வேண்டும் என்பதுதான். இந்த மலையடிவாரச் சாலையோரம் அவள் காரை நிறுத்தி விட்டுக் கீழே இறங்கியதைத் தொலைவிலிருந்து பார்த்தபோது இன்று தன் முயற்சி எப்படியும் வெற்றி பெற்றே தீரும் என்ற குதூகலத்துடன் காரை வெகு வேகமாகச் செலுத்தி வந்தவன், அங்கே மோகனசுந்தரத்தை நோக்கித் தேவகி ஓடியதைக் கண்டதும் அடைந்த அதிர்ச்சியை எப்படிச் சொல்வது? அந்த அதிர்ச்சியின் துடிப்பு இன்னும்கூட அவனிடமிருந்து நீங்கவில்லையே?

ஆகவே சிவப்பிரகாசம் கேட்ட கேள்விக்கு உடனே பதில் சொல்லமுடியாமல்




" ஸார்! எனக்குத் தேர்தல் டிக்கெட் கொடுக்க முடியாட்டா ஒரு ரயில்வே டிக்கட்டாவது வாங்கிக் கொடுத்து விடுங்க!"

திண்றிய விவேகானந்தன் கைக்குட்டையால் முகத்தை அழுத்தித் துடைத்துக் கொண்டு. "ம்...ஒன்றுமில்லை. இங்கு ஒரு பேச்சாளர் இருக்கிறார். அவரைப் பார்ப்பதற்காக வந்தேன். அவர் எங்கோ ஒரு கூட்டத்தில் பேசப் போயிருக்கிறாராம். வரும் வரையில் இப்படிக் கொஞ்ச நேரம் காற்றாட நிற்கலாமே என்று..." என்றான் கரகரத்த குரலில். 'யார் அந்தப் பேச்சாளர்? அவர் பெயர் என்ன' என்றெல்லாம் கேட்டுவிடக் கூடாதே என்பதற்காகச் சட்டென்று பேச்சைத் தொடர்ந்து. "நீங்கள் எங்கே இவ்வளவு தூரம்?" என்று இழுத்தான்.

"அந்த அநியாயத்தை ஏன் கேட்கிறீர்கள், தம்பி! என் மகளைத் தேடிக் கொண்டுதான் புறப்பட்டிருக்கிறேன்" என்று உள்ளடங்கிய சலிப்புடன் சொன்னார் சிவப்பிரகாசம்.

விவேகானந்தன் இதைக் கேட்டுத் திடுக்கிட்டான். வீட்டில் சொல்லாமல் கூட அந்தமோகனசுந்தரத்துடன் தேவகி எங்கெல்லாமோ சுற்றுகிறாள் போலும் என்று எண்ணி அவன் பெரிதும் அருவருப்பை அடைந்தான். இப்படிப்பட்ட ஒரு சாதாரணப் பெண்ணின் அன்பையும் மதிப்பையும் பெற வேண்டுமென்பதற்காகவா நாம் இத்தனை முயற்சி எடுத்துக் கொண்டோம் என்று நினைத்து வெறுப்பும் வேதனையும் அடைந்தான். உடனே அவன் சிவப்பிரகாசத்தை அலட்சியமாக ஏறிட்டுப் பார்த்து. "ஓகோ! உங்களுடைய பெண் எதற்காக இவ்வளவு தூரம் வரவேண்டும்?" என்று ஏகத்தாளமான குரலில் கேட்டான்.

சிவப்பிரகாசத்தின் முகம் வெளிறியது. அவர் எச்சிலைக் கூட்டி விழுங்கிக் கொண்டு, "இல்லை, தம்பி! இங்கே, பக்கத்துத் தெருவிலே என் கம்பெனி மானேஜருடைய மகளுக்குக் கல்யாணம். அந்தக் கல்யாண விருந்துக்கு நான் முன்னதாக வந்து விட்டேன். வீட்டிலிருந்து என் பெண்ணையும் வரச் சொல்லி ஆளை அனுப்பினேன். அவளும் சரி என்று புறப்பட்டாளாம். ஆனால் இந்நேரமாகியும் இங்குவந்து சேரவில்லை. வீட்டுக்குப் போன் பண்ணிக் கேட்டேன். அவள் கிளம்பிச் சென்று விட்டதாக டிரைவர் சொன்னான். கல்யாண வீட்டு விலாசம் தெரியாமல் குழந்தை எங்கேயாவது திண்டாடிக் கொண்டிருக்குமோ என்றுதான்...இப்படி ...பார்த்துப் போகலாம் என்று வந்தேன்" என்றார் துக்கத்துடன்.

விவேகானந்தன் இதைக் கேட்டுத் தன்னைத் தானே மிகவும் நொந்து கொண்டான். கொஞ்ச நேரத்தில் தேவகியைப் பற்றி ஏதேதோ தவறாக எண்ணி மனத்தைச் செலுத்திக் கொண்டோமே என்று அவன் வருந்தினான். அந்த வருத்தமே அவனுக்குச் சற்று ஆறுதலாகவும் இருந்தது. 'இந்தச் சின்ன விஷயத்தை எவ்வளவு மோசமாகக் கற்பனை செய்து விட்டேன்' என்று எண்ணி ஆறுதல் அடைந்தான் அவன்.

"இதற்காகவா நீங்கள் இவ்வளவு கவலைப்படுகிறீர்கள்? உங்கள் மகளை ஒரு சங்கீத சபாவில் நான் பார்த்ததாக ஞாபகம். என்னுடன் நீங்கள் வருவதானால் அங்கு அழைத்துக் கொண்டு போய் விடுகிறேன்" என்று புன்முறுவலுடன் சொன்னான் விவேகானந்தன்.

சிவப்பிரகாசம் அவனை வியப்புடன் ஏறிட்டுப் பார்த்தார். அவன் சொல்வது உண்மைதானா என்ற சந்தேகம்கூட அவருக்கு முளைத்தது. ஆனால், அவனுடைய அழைப்பை மறுக்க அவர் விரும்பவில்லை. மேலும், வீட்டுக்குத் திரும்பிப் போகக் காரும் இல்லை; காருக்காக, கல்யாணக் கலாட்டாவிலிருக்கும் தமது மானேஜரிடம் திரும்பிப் போக வேண்டாமே என்று அவருக்குப் பட்டது. "சரி; போவோம், தம்பி! என் தலைவிதி எப்படியெல்லாம் சிரிக்கிறது, பாருங்கள்" என்று சலிப்புடன் சொல்லிக் கொண்டே விவேகானந்தனின் காரில் ஏறி அமர்ந்தார். அது ஒரு பிரைவேட் டாக்சி.

விவேகானந்தன் காரைச் செலுத்திச் சென்றான். 'யாரோ ஒரு பேச்சாளரைப் பார்க்க வந்ததாகச் சொன்ன இவன் அந்த நினைப்பே இல்லாமல் புறப்பட்டு விட்டானே' என்று எண்ணி உள்ளூற வியந்தார் சிவப்பிரகாசம்.

அரை மணி நேரத்தில் அந்தச் சங்கீத சபாவை நெருங்கிக் கொண்டிருந்த கார் அதற்குமேலே போக முடியாமல் நின்றது. காரணம், தெருவெல்லாம் ஒரே போலீஸ் மயம்! ஏராளமான ஜனங்கள் ஒருவரோடொருவர் மோதியடித்து பிடித்துக் கொண்டு நாலா பக்கமும் சிதறி ஓடிக் கொண்டிருந்தனர். ஏழெட்டுத் தீயணைக்கும் எஞ்சின்கள் காது செவிடுபட மணி யடித்தவாறு பறந்து வந்தன. எங்கும் ஒரே கூச்சல்; புகை மூட்டம்!

அந்தச் சங்கீத சபாமண்டபத்தின் எதிரே போடப் பெற்றிருந்த மாபெரும் பந்தல் தீப்பற்றிக் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது! (தொடரும்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Elenathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




